ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமத் வரவர முநயே நம:



# ரஹஸ்யத்ரயவிவரணம்


ஆசிரியர்:—

ஸ்ரீ உ.-வே. S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், M.A., BL.,
ஆசிரியர்: "ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்"
3-B, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-620 017,



ஸ்ரீ. ரா, ஸ்ரீ. கி, ஸ்ரீநிவாஸய்யங்கார் குடும்ப
தர்ம சொத்துக்களின் ஆதரவில் வெளியிடப்படுகிறது.





1999

Released by Maaran's Dog ,Toronto , Canada

விலை ரூ. 24 40/- தபால் கூலி தனி

ஸ்ரீநிவாஸம் பிரஸ், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி - 17

# ரஹஸ்யத்ரய விவரணம் - முகவுரை

ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் (ஸுதர்சனர்)
ஆசிரியர்: ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்,
8-B, புத்தூர் அக்ரஹாரம், புத்தூர், திருச்சி - 620 017.

---

ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவர்க்கும் பஞ்சஸம்ஸ்கார காலத்தில் திருமந்த்ரம், த்வயம், சரம ஸ்லோகம் என்னும் மூன்று ரஹஸ்யங்களும் ஆசார்யனாலே சிஷ்யனுக்கு உபதேசிக்கப்படுகின்றன. இம்மூன்று ரஹஸ்யங்களின் பொருளை ஒவ்வொரு ஸ்ரீ வைஷ்ணவனும் எப்போதும் நெஞ்சில் தரித்திருக்க வேண்டும். இதனாலேயே இந்த ரஹஸ்யங்களின் பொருளை விளக்கி நம் பூர்வாசார்யர்கள் பல நூல்களை அருளிச் செய்தனர். பட்டர் அருளிச்செய்த எட்டு ஸ்லோகங்கள் கொண்ட 'அஷ்டஸ்லோகீ' இவற்றில் முதன்மையானது. இதன் விவரணமாகவே பெரிய வாச்சான் பிள்ளை பரந்த ரஹஸ்யத்தையும், பிள்ளை லோகாசார்யர் பரந்தபடி, யாத்ருச்சிகப்படி, ஸ்ரிய:பதிப் படி, முமுக்ஷுப்படி முதலான பல ரஹஸ்யக்ரந்தங்களையும் அருளிச்செய்தனர்.

இவற்றுள் முமுக்ஷுப்படி பெண்ணுக்கும், பேதைக்கும் அறியலாம்படியான எளிய தமிழ் நடையில் இருப்பதாலும், பல ஆழ்பொருள்களை அறிவிப்பதாலும் மணவாள மாமுனிகள் அதற்கு வ்யாக்யானமிட்டார். அதனாலேயே அது தென்கலை ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்த அனைவராலும் காலக்ஷேபக்ரந்தமாகக் கொள்ளப்பட்டுள்ளது.

ஆயினும், மாமுனிகளின் வ்யாக்யானம் மணிப்ரவாள நடையில் அமைந்திருப்பதால் இக்காலத்திலுள்ள பல

ருக்குப் பொருள் விளங்காததாய் இருக்கிறது. இக்குறை தீர, எளிய நடையில் இந்த ரஹஸ்யத்ரய விவரணத்தை அடியேன் எழுதி வெளியிட்டிருக்கிறேன்.

இதில் முமுக்ஷுப்படி, அதன் வ்யாக்யானங்களை விவரிப்பதோடல்லாமல், பரந்தரஹஸ்யம் பரந்தபடி முதலான மற்ற ரஹஸ்ய க்ரந்தங்களிலிருந்தும் பல அரும்பொருள்கள் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. பட்டருடைய அஷ்டஸ்லோகிக்கும் மொழிப்புரை தரப்பட்டுள்ளது. சரமஸ்லோக விவரணத்தில் பட்டர், பெரியவாச்சான் பிள்ளை, பிள்ளை லோகாசார்யர் முதலான தென்னாசார்யர்களுக்கும், ஸ்ரீ வேதாந்த தேசிகருக்கும் உள்ள கருத்து வேற்றுமைகள் மிகத் தெளிவாகவும், விரிவாகவும் காட்டப்பட்டுள்ளன. தம்முடைய கீதா வ்யாக்யானத்தில் சரமஸ்லோக விவரணத்தில் கீதா பாஷ்யத்தில் காட்டியபடி சரமஸ்லோகத்தின் பொருளும் மிக விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

பஞ்சஸம்ஸ்காரம் செய்து கொண்டுள்ள ஒவ்வொருவரும் இந்த எளியநடை விவரணத்தைப் படித்துத் தன் ஸ்வரூபத்தையும், தான் இருக்கவேண்டிய நிலையையும் உணர்வதற்கு இந்த நூல் மிகவும் பயன்படும்.

ப்ரமாதீந்ய
மாசிப்புனர்பூசம்
26—2—1999

ஸ்ரீவைஷ்ணவ தாஸன்
ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார்
[ஸுதர்சனர்]



ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# ரஹஸ்யத்ரய விவரணம்

இயற்றியவர்: ஸ்ரீ S கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார்,
(ஸுதர்சனர்)

ஆசிரியர்: ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம், 3 B புத்தூர்
அக்ரஹாரம் புத்தூர் திருச்சிராப்பள்ளி-620017

## அவதாரிகை

திருவின் நாயகனும், ஸ்ரீவைகுண்டத்தில் வீற்றிருப்பவனும், நித்ய முக்தர்களால் எல்லாக்காலங்களிலும் அநுபவிக்கப்படுகிறவனும், எல்லையற்ற ஆனந்த முடையவனுமிருக்கும் ஸர்வேஶ்வரன், அந்த நித்யஸூரிகளைப் போலே தன்னை அநுபவித்து எப்போதும் கைங்கர்யானந்தம் பெற்று வாழ்வதற்குத் தகுதியுண்டாயிருந்த போதிலும் அப்பேற்றை இழந்து

> அஸந்நேவ ஸ பவதி அஸத் ப்ரஹ்மேதி வேத சேத் |
> அஸ்தி ப்ரஹ்மேதி சேத் வேத ஸந்தமேநம் ததோ விது: ||
> [தை—ஆந—6]

['ப்ரஹ்மத்தை அறிகிறான்' என்பது (ஒருவனுக்கு) இல்லையாகில், அவன் (இருந்தும்) இல்லாதவனாகவே ஆகிறான். 'ப்ரஹ்மத்தை அறிகிறான்' என்பது (ஒருவனுக்கு) உள்ளதாகில் அதனால் இவனை உள்ளவனாக (நல்லோனாக) அறிகிறார்கள்.] என்கிற உபநிஷத் வாக்கியத்தின்படியே இல்லாதபொருள் போலே கிடக்கும் ஸம்ஸாரிசேதநருடைய துர்த்தசையை அநுஸந்தித்து மிகவும் கலங்கிய மனத்தையுடையவனாய், இவர்கள் ப்ரளய காலத்தில் ஶரீரேந்த்ரியங்கள் இல்லாமல் இறகொடிந்த பறவை போலே கிடக்கிற தசையில் ஶரீரேந்த்ரியங்களைக்கொடுத்து, அவற்றைக் கொண்டு ஶப்தாதி விஷயங்களிலேயே மண்டித்திரியாமல் தன்னையடைந்து உய்வதற்கு உறுப்பாக—எவராலும் இயற்றப் படாததாய், குற்றமற்றதாக எப்போதும் உள்ளதாய், இயல்வான ப்ரமாணமான வேதத்தையும், அதை விளக்கும் ஸ்ம்ருதி, இதிஹாஸம், புராணம் முதலானவற்றையும் வெளியிட்ட பின்பும் அந்த

சாஸ்திரங்களைக் கற்பதற்குப் பல தகுதிகள் வேண்டுகையாலே அவற்றைக் கற்று அறிவுபிறந்து ஜீவர்கள் உய்ந்து போவது அரிதாயிருக்கிறபடியைத் திருவுள்ளம்பற்றி, எல்லா சாஸ்திரங்களின் ஸாரமான அர்த்தங்களையும் எளிதில் இவர்கள் அறியலாம்படி செய்வதற்காக ஸ்வரூபம், உபாயம், புருஷார்த்தம் ஆகியவற்றை உள்ளபடி அறிவிக்கும் திருமந்த்ரம், த்வயம், சரமஶ்லோகம் என்னும் மூன்று ரஹஸ்யங்களையும், தானே ஆசார்யனாக நின்று வெளியிட்டருளினான்.

இம்மூன்று ரஹஸ்யங்களில் முதல் ரஹஸ்யமான "ஓம் நமோ நாராயணாய" என்னும் எட்டெழுத்துக்கள் கொண்ட திருவஷ்டாக்ஷரமான திருமந்திரத்தை ஸ்ரீபதரிகாச்ரமத்தில் நாராயணரிஷியாயிருந்து தன் அம்சமான நரனாகிற சிஷ்யனுக்கு உபதேசித்தான். இரண்டாவது ரஹஸ்யமான "ஸ்ரீமந்நாராயண சரணௌ ஶரணம் ப்ரபத்யே, ஸ்ரீமதே நாராயணாய நம:" என்னும் த்வயத்தை இந்த லீலா விபூதியிலுள்ள ஸ்ரீவிஷ்ணு லோகத்திலே எம்பெருமான் தன் பட்டமஹிஷியும் சிஷ்யையுமான பெரிய பிராட்டியாருக்கு உபதேசித்தான். "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ । அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா ஶுச: ॥" என்னும் மூன்றாவது ரஹஸ்யமான சரம ஶ்லோகத்தை, பாரதப்போர் தொடங்கும் போது பார்த்தன் தன் தேரிலே பார்த்தஸாரதியாயிருந்து, தன்னைச் சரணடைந்த அர்ஜுனனுக்கு உபதேசித்தான். இந்த மூன்று ரஹஸ்யங்களை இப்படி உபதேசிப்பதன் மூலம் நாடு வாழ்வதற்காக இவற்றை வெளியிட்டான் எம்பெருமான். இதனாலேயே குருபரம்பரையை அநுஸந்திக்கும்போது "லக்ஷ்மீநாதஸமாரம்பாம்" என்று எம்பெருமானை முதல் ஆசார்யனாக அநுஸந்திக்கிறது.

இந்த மூன்று ரஹஸ்யங்களும் முறையே 8, 25, 32 அக்ஷரங்கள் கொண்டவையாய் எளிதில் கற்று உச்சரிக்கக் கூடியவையாய் இருந்தபோதிலும் ஆழ்ந்த பொருளை உடையவை. அப்பொருளையும் பரம்பரை மூலம் அறிந்து பெற்ற ஆசார்யனிடமிருந்து உபதேச மூலமாகப் பெறவேண்டும். அப்பொருளை அறிந்து அதன்படி நடந்தால் தான் ஆன்மாக்களுக்கு உஜ்ஜீவனம் உண்டாகும். அதனாலேயே நம்முடைய பூர்வாசார்யர்கள் பலர் குருபரம்பரை மூலம் பெற்ற இந்த ரஹஸ்யத்ரயத்தின் அர்த்தத்தைப் பல க்ரந்தங்களில் பொறித்து வைத்தார்கள். முதன் முதலில் ஸ்ரீபராசரபட்டர் இந்த

ரஹஸ்யத்ரயத்தின் அர்த்தத்தை எட்டு ச்லோகங்கள் கொண்ட 'அஷ்டச்லோகீ' மூலம் விவரித்தார். அதற்குப் பிறகு பெரியவாச்சான் பிள்ளை 'பரந்த ரஹஸ்யம்' முதலான சில க்ரந்தங்களிலும், பிள்ளைலோகாசாரியர் முமுக்ஷுப்படி, பரந்தபடி, ச்ரியப்பதிப்படி, யாத்ருச்சிகப்படி, தனிப்ரணவம், தனித்வயம், தனிசரமம், ஸ்ரீவசநபூஷணம் ஆகிய க்ரந்தங்களிலும், மணவாளமாமுனிகள் முமுக்ஷுப்படி ஸ்ரீவசநபூஷண வ்யாக்யானங்களிலும் இந்த ரஹஸ்யங்களின் பொருளை வெளியிட்டார்கள். இந்த க்ரந்தங்களை, குறிப்பாக முமுக்ஷுப்படியையும் அதன வ்யாக்யானத்தையும் அநுஸரித்து 'ரஹஸ்யத்ரய விவரணம்' என்னும் இந்நூலில் ரஹஸ்யத்ரயத்திற்கும் விவரணம் எழுதப்படுகிறது.

## திருமந்த்ர விவரணம்

(முமுக்ஷுப்படி, சூர்ணைகளும் அவற்றின் மாமுனிகள் வ்யாக்யானத்தின் எளிய நடை விவரணமும் அளிக்கப்படுகிறது. ஆங்காங்கு மற்ற ரஹஸ்யங்களிலிருந்து சில விசேஷார்த்தங்களும் கொடுக்கப்படும்.)

மூலம் 1:—முமுக்ஷுவுக்கு அறியவேண்டும் ரஹஸ்யம் மூன்று.

விவரணம்:-(முமுக்ஷுவுக்கு) மோக்ஷத்தில் இச்சை (விருப்பம்) உடையவன் முமுக்ஷு எனப்படுகிறான். "முச்ல் மோக்ஷணே" என்னும் தாதுவிலிருந்து இப்பதம் தோன்றியது. ஆகையால் 'முமுக்ஷுவுக்கு' என்னும் பதம் "ஸம்ஸாரத்திலிருந்து விடுதலை பெறுவதற்கு விருப்பம் பிறந்தவனுக்கு" என்று பொருள்படும். தன் ஆத்மாவைத் தான் அநுபவிக்கும் கைவல்யத்தைப் பெறவிரும்புகிறவனுக்கும் இந்த ஸம்ஸாரமண்டலத்திலிருந்து விடுதலை பெற்று விரஜாநதியைத் தாண்டிய பிறகே அது கிட்டுமாகையாலே அதுவும் ஒருவகைத் தாழ்ந்த மோக்ஷமேயாகும். ஆகையாலே அக்கைவல்ய நிஷ்டனுக்கும் முமுக்ஷுத்வம் (ஸம்ஸாரத்திலிருந்து விடுபடவேண்டும் என்னும் விருப்பம்) உண்டு என்பது உண்மையே. அவன் இங்கு இப்பதத்தால் கருதப்படவில்லை. அவனுக்கு பகவதநுபவமோ கைங்கர்யமோ இல்லாமையாலே அவற்றைத் தெரிவிக்கும் இந்த மூன்று ரஹஸ்யங்களைப்பற்றிய அறிவு அவனுக்குத் தேவையில்லையன்றே. ஆகையால் இங்கு இவர் 'முமுக்ஷு' என்பது எம்பெருமானையடைய விருப்பி அதற்கு உறுப்பாக இந்த ஸம்ஸாரத்திலிருந்து விடுதலைபெற விருப்பம் பிறந்தவனையே. (அறியவேண்டும் ரஹஸ்யம் மூன்று) இந்த

அதி$_4$காரிக்கு அவசியம் அறியவேண்டியவை ஸ்வரூபமும் உபாயமும் புருஷார்த்த$_2$முமாகும். அம்மூன்றையும் இந்த மூன்று ரஹஸ்யங்களும் உள்ளபடி வெளியிடுபவையாகையாலே இந்த மூன்று ரஹஸ்யங்களுமே முமுக்ஷுவுக்கு அறியவேண்டுபவை என்று கருத்து.

ஸ்வஜ்ஞாநம் ப்ராபகஜ்ஞாநம் ப்ராப்யஜ்ஞாநம் முமுக்ஷுபி$_4$: |
ஜ்ஞாநத்ரயமுபாதே$_3$யம் ஏதத$_3$ந்யந்ந கிஞ்சந ||

[தன் (ஆத்மஸ்வரூப) ஜ்ஞாநமும், உபாய ஜ்ஞாநமும், புருஷார்த்த$_2$ஜ்ஞாநமும் ஆகிய மூன்று வகை அறிவுகள் முமுக்ஷுக்களால் கொள்ளத்தக்கவை. வேறெதுவும் வேண்டியதில்லை] என்னும் பிரமாணம் இங்கு அநுஸந்திக்கத்தக்கது. (ரஹஸ்யம் மூன்று) திருமந்த்ரம், த்$_3$வயம், சரமஶ்லோகம் ஆகிய மூன்று ரஹஸ்யங்களிலே இவர் திருவுள்ளம் பற்றுகிறார் என்பது மேல் சூர்ணைகளிலிருந்து தெளிவாகும். இம்மூன்றையும் "ரஹஸ்யம்" என்றது — எல்லா வேதங்களின் ஸாரார்த்த$_2$த்தைத் தெரிவிக்கையாலே. இவற்றைத் தக்க அதி$_4$காரிகள் தவிர மற்றவர்களுக்கு வெளிப்படுத்தக்கூடாது என்னும் திருவுள்ளத்தாலே - ஆக, இந்த வாக்கியத்தால் மோக்ஷத்தில் விருப்பம் உடையவனே அதி$_4$காரி என்பதும், அவனால் அறியத்தக்கவை ரஹஸ்யத்ரயம் என்பதும் தெரிவிக்கப்பட்டதாயிற்று.

இனி அடுத்த சூர்ணையில் முதல் ரஹஸ்யம் எது என்பதைக் காட்டுகிறார்.

சூ 2 அதில் ப்ரத$_2$ம ரஹஸ்யம்—திருமந்த்ரம்.

விவரணம்:— இந்த மூன்று ரஹஸ்யங்களுக்குள் மோக்ஷத்தில் விருப்பமுடையவனுக்கு முதலில் அறியவேண்டிய ரஹஸ்யம் — நம் ஸ்வரூபத்தை உள்ளபடி அறிவிப்பதாய், நமக்கு விலக்கத்தக்கது எது, கைக்கொள்ளத்தக்கது எது? என்னும் அறிவைப் பரிபூர்ணமாக விளைப்பதான திருமந்த்ரமேயாகும் என்று கருத்து. மற்ற இரண்டு ரஹஸ்யங்களும் மோக்ஷமடைய உபாயம், மோக்ஷத்தில் பெறும் புருஷார்த்த$_2$மாகிற உபேயம் ஆகியவற்றை உள்ளபடி தெரிவிக்கின்றன. அவற்றை அறிவதற்குமுன் இவ்வதி$_4$காரி தன் ஸ்வரூபம் எத்தகையது என்று தெரிந்து கொள்ளவேண்டும்.

அநந்யார்ஹஶேஷத்வம் (எம்பெருமான் ஒருவனுக்கே அடிமைப் பட்டிருக்கை), அநந்யஶரணத்வம் (எம்பெருமான் ஒருவனையே உபாயமாகக் கொண்டிருக்கை), அநந்ய போ4க்3யத்வம் (கைங்கரியத்தால் உகந்த அவ்வெம்பெருமானையே போ4க்3யமாகக் கொண்டிருக்கை) என்ற மூன்று ஆகாரங்களையும் (தன்மைகளையும்) இத்திருமந்திரத்தின் மூன்று பத3ங்கள் அறிவிக்கையாலே ஸ்வரூபத்தை உள்ளபடி அறிவிக்கும் இத்த ரஹஸ்யம் உபாய புருஷார்த்த2ங்களை அறிவிக்கும் அவற்றுக்கு முன் அறியத்தக்க தாகையாலே, முதலில் அறியத்தக்கது என்றபடி.

மேலும், இதில் முதல் பதமான ப்ரணவத்துக்கு "நமோ நாராயணாய" எனும் மந்த்ரஶேஷம் (திருமந்திரத்தின் எஞ்சிய பகுதி) விவரணமாய் இருக்கிறது. அதுபோலே அந்த மந்த்ர ஶேஷத்தின் இருபதங்களையும் முறையே த்3வயத்தின் இரண்டு கண்டங்களும் விவரிக்கின்றன. த்3வயத்தில் மறைபொருளாக இருக்கும் அர்த்தங்களைச் சரம ஶ்லோகம் விவரிக்கிறதாகையாலே அது த்3வயத்திற்கு விவரணமாகிறது. ஆக இப்படி மற்ற இரண்டு ரஹஸ்யங்களும் இதை விவரிக்கையாலே இதை முதலில் அறியவேண்டும் என்பது மிகப் பொருத்தம். இவற்றைத் திருவுள்ளம் பற்றியே பிள்ளை லோகாசார்யர் "ப்ரத2ம ரஹஸ்யம் திருமந்த்ரம்" என்று அருளிச்செய்தார். இதை மந்த்ரம் என்கையாலே 'மந்தாரம் த்ராயத இதி மந்த்ர:" என்னும் வ்யுத்பத்தியாலே, "மனனம் செய்பவனைக் காப்பாற்றுவது" என்னும் காரணத்தாலே மந்திரம் எனப்படுகிறது. எப்படிக் காப்பாற்றுகிறது? எனில்: இதன் ஶப்3த3த்தை ஜபம் ஹோமம் முதலானவற்றின் மூலம் அநுஸந்தி4க்கும் உபாஸகர்களுக்கு அவர்கள் விரும்பிய ப2லனைக் கொடுக்கும். இதன் அர்த்த2த்தை அநுஸந்தி4க்கும் ப்ரபந்நர்களுக்கு எம்பெருமானை அடையத் தடையா யிருப்பவற்றை நீக்குவதன் மூலம் அவனையடைய உதவிபுரியும். ஸ்ரீபராசரபட்டர் அஷ்டஶ்லோகியின் நாலாவது ஶ்லோகத்திலே

தே3ஹாஸக்தாத்மபு3த்3தி4ர் யதி3 ப4வதி

பத3ம் ஸாது4 வித்3யாத்த்ருதீயம்

ஸ்வாதந்த்ர்யாந்தோ4 யதி3ஸ்யாத

ப்ரத2மமிதரஶேஷத்வதீ4ஶ்சேத்3த்3விதீயம் |

ஆத்மத்ராணோந்முகஶ்சேந்நம
இதி ச பதம் பூர்த்வாபரலோசான: ।
ஸர்வஞ்சம் நாராயணேத்யயம் விஷயசபலதீஶ்சேச்சதுர்த்தீம் ப்ரபந்ந: ॥
[ அஷ்டஶ்லோகீ - 4 ]

[ப்ரபந்நனானவன், தேஹத்தில் ஆத்மபுத்தியையுடையவனா னால் (தான் ஜ்ஞாதாவென்று காட்டும் ப்ரணவத்தின்) மூன் றாவது பதமான மகாரத்தை நன்கு அறியக்கடவன். தான் ஸ்வதந் திரன் என்னும் எண்ணத்தாலே அறிவுகெட்டிருந்தானாகில் (தன்னை ஈஶ்வரசேஷமென்றறிவிக்கிற ப்ரணவத்தின்) முதற்பதமான அ காரத்தையும், மற்றவர்களுக்கும் தன்னை அடிமையென்று எண்ணி னானாகில் (அவனுக்கே அடிமையென்று அறிவிக்கும் ப்ரணவத்தின்) இரண்டாவது பதமான உகாரத்தையும், தன்னை ரக்ஷித்துக்கொள் வதில் ஈடுபட்டானாகில் (தன்னைத் தான் ரக்ஷிக்கமுடியாதெனக் காட்டும்) நம: என்னும் பதத்தையும், ஆப்த்ஸ (மேலெழுந் தோன்றும்) பந்துக்களிடம் ஈடுபட்டானாகில் (எல்லாவுறவும் அவனேயென அறிவிக்கும்) நாராயண என்னும் ஶப்தத்தை யும், ஶப்தாதி விஷயங்களில் ஈடுபட்ட புத்தியையுடையவனா கில் (பகவத் கைங்கர்ய ரஸத்தைப் ப்ரார்த்திக்கும்) 'ஆய' என்னும் சதுர்த்தியையும் நன்கு அறியக்கடவன்.] என்று இவ் விஷயத்தைத் தெளிவாக விளக்கினார்.

இனி இருபத்தைந்து சூர்ணைகளாலே இந்த மந்திரத்தின் வைபவத்தை விரிவாக அறிவிக்கத் திருவுள்ளம் பற்றி அடுத்த (மூன்றாவது) சூர்ணையில் இதை எப்படி அநுஸந்திக்க வேண்டும் என்று அருளிச்செய்கிறார்.

மூலம் 3 திருமந்த்ரத்தினுடைய சீர்மைக்குப் போரும்படி ப்ரேமத்தோடே பேணி அநுஸந்திக்க வேணும்,

விவரணம்: (திருமந்திரத்தினுடைய சீர்மை) அதாவது-

(1) ருசோ யஜூம்ஷி ஸாமாநி ததைவாதர்வணாநி ச।
ஸர்வமஷ்டாக்ஷராந்த:ஸ்தம் யச்சாந்யதபி வாங்மயம் ॥
[ வ்ருத்தஹாரீதஸ்ம்ருதி 6-48 ]

[ருக், யஜுஸ், ஸாமம், அதர்வணம் என்னும் வேதங்களிலும் மற்றுள்ள உபப்ரும்ஹணவாக்குகளுமாகிய எல்லாம் அஷ்டாக்ஷரத்தில் அடங்கியுள்ளன.] என்கிறபடியே இது எல்லா வேதங்களிலுமுள்ள பொருளையும் சுருக்கமாகச் சொல்லுவது, (2) "மற்றெல்லாம் பேசிலும்" [பெரியதிரு. 8-10-3] என்கிறபடியே இது அறிய வேண்டிய எல்லா அர்த்தங்களையும் தெரிவிப்பது.

மந்த்ராணாம் பரமோ மந்த்ரோ குஹ்யாநாம் குஹ்ய முத்தமம்।
பவித்ரஞ்ச பவித்ராணாம் மூலமந்த்ரஸ் ஸநாதந:॥
[நாரதீயகல்பம், அஷ்டாக்ஷரப்ரஹ்மவித்யை 1-11]

[மந்திரங்களுள் மேலான மந்திரமும், ரஹஸ்யங்களுள் மேலான ரஹஸ்யமும், பாவனங்களுள் பரமபாவனமும், பழையதான (அஷ்டாக்ஷரமெனும்) மூலமந்திரமேயாகும்] என்கிறபடியே எல்லா மந்திரங்களிலும் மேலான மந்திரமாய் எல்லா ரஹஸ்யங்களிலும் மேலான ரஹஸ்யமாய், பரிசுத்தப்படுத்தும் எல்லாப் பவித்ரப் பொருள்களிலும் மேலான பவித்திரப் பொருளாயிருப்பது—என்னும் பெருமை. (*சீர்மைக்குப் போரும்படி*) இப்பெருமைக்குத் தகும்படி. (ப்ரேமத்தோடே பேணி அநுஸந்திக்க வேணும்.) அதாவது—இத்திருமந்திரத்தை அநுஸந்திக்கும்போது அன்பற்ற வரண்ட நெஞ்சையுடையவனும் உருப்போடாமல், இதன் பெருமையை அறிந்தது காரணமாக இம்மந்திரத்தில் தனக்குண்டான பேரன்போடு ரஹஸ்யங்களுக்கெல்லாம் மேலான ரஹஸ்யமான இது தகாதவர்கள் காதில் விழாதபடி "மந்த்ரம் யத்நேந கோபயேத்" [லக்ஷ்மீஸம்ஹிதை 14-60] [மந்திரத்தை மிக முயன்று தகாதவர்கள் செவிப்படாதபடி பாதுகாக்கவேண்டும்] என்கிறபடி ஜாக்ரதையுடன் அநுஸந்திக்கவேண்டும். இப்படிப் பேணி அநுஸந்திக்கவேண்டுமென்று இது கூறுகையாலே வேறுவிதமாக இதை எப்போதுமே அநுஸந்திக்கக் கூடாது என்று உணர்த்தப்படுகிறது.

'இப்படி மந்திரத்தில் ப்ரேமம் உண்டானால் இது இவனுக்கு இவன் விரும்பியதைக் கொடுத்துவிடுமோ?' என்னும் கேள்விக்குப் பதில் கூறுகிறார் அடுத்த சூர்ணையில்.

சூ 4 மந்த்ரத்திலும், மந்த்ரத்துக்கு உள்ளீடான வஸ்துவிலும், மந்த்ரப்ரதனான ஆசார்யன் பக்கலிலும் ப்ரேமம் கனக்க உண்டானால் கார்யகரமாவது.

விவரணம்:—அதாவது (1) அறியவேண்டிய அர்த்தங்களை அறிவிக்கும் இம்மந்திரத்தில் இவனுக்கு அன்பு மிகவும் இருக்க வேண்டும். (2) முற்கூறிய ஜீவனுக்கு மூன்று ஆகாரங்களைச் சொல்லுவது போலே, சேஷித்வம் (ஸ்வாமியாயிருக்கை), ஶரண்யத்வம் (தஞ்சமாயிருக்கை), ப்ராப்யத்வம் (அடையப்படும் பொருளாயிருக்கை) என்னும் மூன்று ஆகாரங்களை எம்பெருமானுக்கும் இந்த மந்திரம் வெளியிடுகையாலே இம்மந்த்ரத்தால் சொல்லப்படும் எம்பெருமான் விஷயத்திலும் இவனுக்கு அன்பு மிகவும் இருக்க வேண்டும்.

(3) தை3வாதீ4நம் ஜக3த் ஸர்வம் மந்த்ராதீ4நம் து தை3வதம் |
தந்மந்த்ரம் ப்3ராஹ்மணாதீ4நம் தஸ்மாத்3 ப்3ராஹ்மண
தை3வதம் || விஹகே3ந்த்3ரஸம்ஹிதை படலம்-22

[எல்லாவுலகும் தெய்வத்திற்கு வசப்பட்டது. தெய்வமோவெனில் மந்திரத்திற்குக் கட்டுப்படுவது; அந்த மந்திரம் ஆசார்யவசத்திலிருப்பது. ஆகையால் ஆசார்யனே (சேதனனுக்கு) தெய்வமாவான்] என்கிறபடியே இந்த மந்திரம் ஆசார்யன் மூலமாகவே பெற வேண்டியிருப்பதொன்றாகையாலே இதைப் பரமகருணையுடன் தனக்கு உபதேசித்த ஆசார்யன் விஷயத்திலும் அவனுடைய பரம கருணைக்குத் தக்கபடி பேரன்பு மிகவும் இருக்கவேண்டும். இப்படி இம்மூன்றிலும் இவனுக்கு அன்பு மிகவும் இருந்தால் இம்மந்திரம் இவனுக்கு விரும்பியதைக் கொடுக்கும் என்று கருத்து.

மந்த்ரே தத்3தே3வதாயாஞ்ச தத2ா மந்த்ரப்ரதே3 கு3ரௌ |
த்ரிஷு ப4க்தி: ஸதா3 கார்யா ஸா ஹி ப்ரத2மஸாத4நம் ||
[விஷ்ணுதத்வம்]

[மந்திரத்தினிடத்தும், அதன் தே3வதையிடமும் அப்படியே அம்மந்திரத்தையளித்த ஆசாரியனிடமும் (ஒன்றொழியாமல்) இம்மூன்றினிடமும் எப்போதும் பக்தி செய்யப்படவேண்டும்; அந்த ப4க்தியே (ப4க3வத் ப்ராப்திக்கு) முதல் உபாயமாகும்.] என்று ஸ்ரீவிஷ்ணு தத்வத்திலும் சொல்லப்பட்டதன்றோ.

இனி இம்மந்திரம் எப்படி அவதரித்தது என்று கூறுவதன் மூலம் இதன் ஒப்பற்ற பெருமையை அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

[உடைமையாயிருக்கும் தன்மை ஆத்மாவில் இயற்கையாயிருப்பது உடையவனாயிருக்கும் தன்மை ப்ரஹ்மத்திடம் இயற்கையாயிருப்பது. இருவர்க்கும் இதுவே ஸம்பந்தம்; வேறெதையும் நான் ஒப்பவில்லை.] என்கிறபடியே தங்களுக்கு இயல்வான ஸ்வாமியாயிருக்கிற ஈச்வரனையும் அறியாமலிருக்கிறார்கள் என்று கருத்து. "'அறியாமல்' என்று சொல்லாமல் 'மறந்து' என்று கூறுவது பொருந்தவில்லையே. முன்னொரு காலத்தில் நினைத்திருந்து பின்னர் அந்த நினைவு நழுவிப்போனவிடத்திலன்றோ 'மறந்து' என்று கூறலாம்" என்னும் கேள்வி இங்கு எழக்கூடும். எம்பெருமானுக்கும் ஜீவனுக்கும் உள்ள ஸம்பந்தம் இயல்வானதாகையாலே அதை உணர்ந்த பின்பு முன்பு நினைத்திருந்ததை மறந்ததுபோலே இருக்கையாலே இந்த ஸம்பந்தத்தில் உறைப்பை நினைத்து 'மறந்து' என்று அருளிச்செய்கிறார். "மறந்தேன் உன்னை முன்னம்" [பெரிய திரு 6—2—2] என்று திருமங்கையாழ்வாரும் அருளிச்செய்தாரன்றோ. (ஈச்வரகைங்கர்யத்தையும் இழந்து) முன் சொன்ன அஜ்ஞானத்தாலே, இயல்வான ஸ்வாமியாகிற எம்பெருமான் விஷயத்தில் தொண்டு செய்தலாகிற மேலான புருஷார்த்தத்தை அடையப்பெறாதே என்று கருத்து. இங்கும் 'அடையாமல்' என்று கூறாமல் பேற்றினுடைய சீர்மையையும், அதற்கு இட்டுப்பிறந்து வைத்துக் கிட்டப்பெறாமல் அநாதிகாலமாக இருந்தபடியையும் நினைத்து 'இழந்து' என்கிறார். (இழந்தோம் என்கிற இழவுமின்றிக்கே) தன் ஸ்வரூபம், பரமாத்மாவின் ஸ்வரூபம், பெறவேண்டிய பேறு ஆகியவற்றைப்பற்றிய அறிவே இல்லாமையாலே. 'அடிமையாயிருக்கும் நம்முடைய ஸ்வரூபத்திற்குத் தக்கபடி ஸ்வாமியாயிருக்கும் எம்பெருமான் விஷயத்தில் செய்ய வேண்டிய கைங்கர்யமாகிற பேற்றை அநாதிகாலமாக இழந்திருக்கிறோம்' என்னும் வருத்தமும் இல்லாமல் என்று கருத்து. (ஸம்ஸாரமாகிற பெருங்கடலிலே விழுந்து நோவுபட)

ஸம்ஸார ஸாகரம் கோரமநந்த க்லேசபாஜநம் |
த்வாமேவ சரணம் ப்ராப்ய நிஸ்தரந்தி மநீஷிண: ||
[ஜிதந்தே 1—4]

[கொடியதாய், அளவற்ற துன்பத்திற்கு இருப்பிடமான ஸம்ஸாரக் கடலை உன்னை சரணமடைந்தே மனிதர்கள் தாண்டுகிறார்கள்] என்கிறபடியே அளவற்ற துன்பத்திற்கு இருப்பிடமாய், ஒருவராலும் தனது முயற்சியால் கரையைக் காணவும் ஒண்ணாதபடி

இருக்கிற ஸம்ஸாரமாகிற பெரிய கடலுக்குள்ளே விழுந்து. மனத்தையும் சரீரத்தையும் பற்றிவரும் நோய் முதலான ஆத்4யாத்மிகம், பாம்பு, தீயமனிதர் முதலான மற்ற ஜீவராசிகளால்வரும் ஆதி4பௌ4திகம், தெய்வச்செயலால் வரும் இடி முதலான ஆதி4தை3விகம் என்னும் மூன்று வகைப்பட்ட துன்புறுத்தும் தாபங்களாலே ஆக்கிரமிக்கப்பட்டுத் துன்பப்பட என்று கருத்து. இவ்வளவால் தங்களையும் ஈஶ்வரனையும் அறியாமையாலும், கைங்கர்யமாகிற பேற்றை அறியாமையாலும், ஸம்ஸாரமாகிற கடலுக்குள்ளே கிடந்து துக்கப்படும்போதே அது பேற்றை அடையத் தடையானது என்பதையும்.|அதைக் கடக்கும் உபாயத்தையும் அறியாமையாலும் உயிர்நிலை, இறைநிலை, கைங்கர்யமாகிற வாழ்வு, ஊழ்வினையாகிற தடை, தடையைக் கடப்பதற்குத் தக்கநெறி ஆகிய அறிய வேண்டிய ஐந்து அர்த்த2ங்களில் ஒன்றையும் அறியாமல் கிடந்தார்கள் என்று சொன்னதாயிற்று.

ப்ராப்யஸ்ய ப்3ரஹ்மணோ ரூபம் ப்ராப்துஶ்ச ப்ரத்யகா3த்மந:|
ப்ராப்த்யுபாயம் ப2லம் ப்ராப்தேஸ் ததா2 ப்ராப்திவிரோதி4 ச||
வத3ந்தி ஸகலா வேதா3ஸ் ஸேதிஹாஸபுராணகா: |
முநயஶ்ச மஹாத்மாநோ வேத3வேதா3ர்த்த2வேதி3ந:||
[ஹாரீதஸ்ம்ருதி 8—141]

[அடையத்தக்க பரம்பொருளின் தன்மை. அடைபவனான ஜீவாத்மாவின் தன்மை. அடையும் வழி, அடைந்து பெறும் பயன், அடைவதற்குத் தடை ஆகியவற்றை இதிஹாஸபுராணங்களோடு கூடிய எல்லா வேத3ங்களும், வேத3ஶப்3தா3ர்த்த2ங்களை அறியும் மஹாபுருஷர்களான முனிவர்களும் உரைக்கின்றனர்.] என்கிறபடியே எல்லா சாஸ்திரங்களும் சொல்லுவது இந்த ஐந்து அர்த்த2ங்களையன்றோ. இந்த அர்த்த2ங்களை இவர்களுக்கு எளிய முறையில் அறிவிப்பதற்காக எல்லா சாஸ்திரங்களிலும் சொன்ன அர்த்தங்களைச் சுருங்கச் சொல்லும் திருவஷ்டாக்ஷரமான திருமந்த்ரத்தை ஸர்வேஶ்வரன் வெளியிட்ட முறையைச் சொல்லுகிறார் மேற்பகுதியாலே (ஸர்வேஶ்வரன் தன் க்ருபையாலே)

ஈஶேஶிதவ்ய ஸம்ப3ந்தா4த3நித3ம்ப்ரத2மாத3பி|
ரக்ஷிஷ்யத்யநுகூலாந்ந: இதி யா ஸுத்3ருடா4 மதி:||
ஸ விஶ்வாஸோ ப4வேத் [லக்ஷ்மீதந்த்ரம் 17—70]

[அநாதி3யாயிருக்கும் உடையவனுக்கும் உடைமைக்குமுள்ள உறவால், அன்புடைய நம்மை அவசியம் ரக்ஷித்தே தீருவான் என்

னும் உறுதியான எண்ணமே மஹாவிஸ்வாஸம் எனப்படுகிறது.] என்கிறபடியே அநாதிகாலமாக உடைமைகளான எல்லாச் சேதனருக்கும் உடையவனுமிருக்கும் பெருமையையுடைய எம்பெருமான்

ஏவம் ஸம்ஸ்ருதிசக்ரஸ்தே₂ ப்₄ராம்யமாணே ஸ்வகர்மபி₄:|
ஜீவே து₃:க்கா₂குலே விஷ்ணோ: க்ருபா காப்யுபஜாயதே||
[அஹிர்பு₃த்₄ந்யஸம்ஹிதை 14—28]

[ஸம்ஸார சக்ரத்தில் தன் கருமங்களால் இவ்வண்ணம் சுழன்று துன்புற்ற ஜீவனிடத்தில் விஷ்ணுவுக்கு விவரிக்க முடியாததொரு கருணை உண்டாகிறது] என்கிறபடியே இவர்கள் படுகிற துன்பத்தைக் கண்டதனால் உண்டான தன்னுடைய நிர்ஹேதுகமான (இயல்வான) கருணையாலே என்று கருத்து (இவர்கள் தன்னை யறிந்து கரை மரம் சேரும்படி) இப்படி ஸம்ஸாரக்கடலிலே கிடந்து துன்புறுகிற இவர்கள் 10-வது பக்கத்திலுள்ள ஜிதந்தே ஸ்லோகத்திலும்,

ஸம்ஸாரார்ணவமக்₃நாநாம் விஷயாக்ராந்த சேதஸாம்|
விஷ்ணுபோதம் விநா நாந்யத் கிஞ்சித₃ஸ்தி பராயணம்||
[விஷ்ணு த₄ர்மம் 1—59]

[ஸம்ஸாரக்கடலில் முழுகி. (முதலைகள் போன்ற) விஷயங்களாலே பிடிக்கப்பட்ட மனத்தையுடையவர்களுக்கு விஷ்ணுவாகிற (ஸர்வ வ்யாபியான) ஓடத்தைத்தவிர, கரை சேரச் சிறந்த உபாயம் வேறு இல்லை.] என்றும் சொல்லுகிறபடியே இந்த ஸம்ஸாரக் கடலைக் கடப்பதற்கு உபாயமாயிருக்கும் தன்னை அறிந்து அக்கடலைக் கடந்து அக்கரை ஏறும்படி என்று கருத்து. (தானே ஶிஷ்யனுமாய் ஆசார்யனுமாய் நின்று) "நரநாரணனாய் உலகத்தறநூல் சிங்காமை விரித்தவன்" [பெரிய திரு 10-6-1] என்கிறபடியே நரன் நாராயணன் என்னும் இரு ரிஷிகளாக அவதரித்து, நரனான தானே ஶிஷ்யனாய், நாராயணனான தானே ஆசார்யனாய் நின்று என்று கருத்து. (திருமந்த்ரத்தை வெளியிட்டருளினான்) எல்லா சாஸ்திரங்களுக்கும் சுருக்கமாய் அந்த சாஸ்திரங்களின் பொருளான அர்த்த₂ பஞ்சகத்தையும் (ஐந்து அர்த்தங்களையும்) மிகத் தெளிவாக அறிவிக்கும் திருவஷ்டாக்ஷரத்தை உலகோர்க்கு வெளியிட்டருளினான் என்று கருத்து. 'அருளிச்செய்தான்' என்று சொல்லாமல் 'வெளியிட்டருளினான்' என்றதற்கு இரண்டு கருத்து உண்டு. (1) 'அருளிச்செய்தான்' என்றால் இப்போது புதிதாக இவ்வர்த்தத்தை இயற்றிச் சொன்னான் என்று தோற்றக்கூடும். அப்படி

[நல்லறிவையுடையவனும், நல்லோர்களை அநுவர்த்திப்பவனும் அறிவுக்கேற்ற நடத்தையுடையவனும், தத்துவஜ்ஞானம் பெறுவதில் விருப்பமுள்ளவனும், ஆசார்ய ஸேவையை விரும்பியிருப்பவனும், அஹங்காரமற்றவனும், (ஆசார்யனை) அடிவணங்குவதில் ஈடுபட்டவனும், கேள்வி கேட்கும் ஸமயத்தையறிந்து கேட்பவனும், மனவடக்கமும் புலனடக்கமுமுள்ளவனும், பொறாமையற்றவனும், ஆசார்யக்ருஹத்தை அடைந்தவனும், ஸாஸ்த்ரத்தில் நம்பிக்கையுள்ளவனும், (முற்கூறிய விஷயங்களில்) பரீக்ஷை செய்யப்பட்டவனும், (ஆசார்யன் செய்த) உபகாரத்தை மறவாத மஹான்களுக்கு இனியவனுமான ஶிஷ்யன் உண்மையை உபதேஶிக்கத் தக்கவன்.] என்று ப்ரமாணங்களில் சொல்லுகிற சிஷ்யனுக்குரிய தன்மைகளும், பகவத் கைங்கர்யம் தவிர மற்ற ஸாத்யங்களிலிருந்து நீங்கி நிற்கையும், பலம் இன்னது, ஸாதநம் இன்னது என்பதைக் கேட்பதில் விருப்பமும் பலனைப் பெறுவதில் த்வரையும் (வேகமும்), ஆர்வமும் ஆசார்யனுடைய பெருமையில் பொறுமையின்மையும் உடையவனாயிருக்கையுமாகிற சிஷ்யனுடைய லக்ஷணம் இவ்வுலகிலுள்ளார் அறியாமையாலே அதைத் தன்னுடைய அனுஷ்டானத்தாலே அறிவிக்கைக்காகவே என்று கருத்து. சிஷ்யலக்ஷணத்தை உபதேசத்தாலே அறிவித்தால் தனக்கு ஆசார்யன் என்னும் பெருமையைத் தேடிக்கொள்வதற்காக இதைச்சொல்லுகிறான் என்று எண்ணவும் கூடும். தன்னுடைய அனுஷ்டானத்தாலே சிஷ்யலக்ஷணத்தை அறிவித்தால் மற்றவர்களும் 'தமக்கும் இது வேணும்' என்று நம்பிக்கையுடன் கைக்கொள்வதற்கு உறுப்பாயிருக்குமன்றோ.

இதற்குமேல் ஒரு கேள்வியெழுகிறது. அதாவது— "இப்படி சிஷ்யனும் இருந்து இந்த மந்திரத்தைக் கற்று இந்த வழியிலே தான் ஜ்ஞானம் பிறக்கவேண்டுமோ? 'ஞானக்கலைகள்' [திருவாய் 1—9—8] என்கிறபடியே எல்லா சாஸ்திரங்களும் ஞானத்திற்கு ஸாதநமாகவன்றோ இருக்கின்றன; அவற்றைக் கற்று அதன் மூலம் ஜ்ஞானம் பிறக்கக்கூடாதோ?" என்று எழக்கூடிய கேள்விக்கு அந்த சாஸ்திரங்களால் உண்டாகக்கூடிய ஜ்ஞானத்திற்கும் இந்த மந்திரத்தால் உண்டாகக்கூடிய ஜ்ஞானத்திற்கும் உண்டான வித்தியாசத்தை உதாரணம் காட்டி அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

**சூ 7 ஸகல ஶாஸ்த்ரங்களாலும் பிறக்கும் ஜ்ஞாநம் ஸ்வயமார்ஜிதம்போலே; திருமந்த்ரத்தால்பிறக்கும் ஜ்ஞாநம் பைத்ருகதநம்போலே.**

விவரணம்: அதாவது — உண்மையறிவை விளக்கும் ச்ருதி, ஸ்ம்ருதி முதலான எல்லா சாஸ்திரங்களாலும் ஜீவர்களுக்குப் பிறக்கும் அறிவு தானே சம்பாதிக்கும் செல்வம்போலே மிகவும் சிரமப்பட்டுப் பெறுவதாயிருக்கும். ஆசார்யனிடமிருந்து உபதேசம் பெறும் திருமந்த்ரத்தால் பிறக்கும் அறிவு தந்தை சம்பாதித்து வைத்த செல்வம்போலே சிரமமேயில்லாமல் பெறுவதாயிருக்கும்.

> ஶாஸ்த்ரஜ்ஞாநம் ப3ஹுக்லேஶம் பு3த்3தே4ஶ் சலநகாரணம்।
> உபதே3ஶாத் ஹரிம் பு3த்3த்4வா விரமேத் ஸர்வகர்மஸு॥

[சாஸ்திரங்களாலுண்டாகும் அறிவு மிகுந்த சிரமத்தை உண்டாக்கக்கூடியது. பு3த்3தி4க்குக் கலக்கத்தைக் கொடுக்கக்கூடியது. (ஆகையால்) உபதே3ஶத்தால் பரமபுருஷனை (உபாயமாக) அறிந்து, (ஶாஸ்த்ர ஜ்ஞானத்தை ஸம்பாதிக்கும்) எல்லாக் கருமங்களையும் கைவிடக்கடவன்] என்று சாஸ்திரங்களிலிருந்து பெறும் ஜ்ஞானம் பல குறைகளை உடையது என்றும், ஆசார்யனிடமிருந்து திருமந்த்ர உபதேசத்தைப் பெற்றுப் பெறும் ஜ்ஞானம் சிறப்பானது என்றும் சொல்லப்பட்டதன்றோ. இந்தச் சூர்ணையால் சாஸ்திரங்களைக் காட்டிலும் அவற்றின் சுருக்கமான திருமந்திரத்திற்கு உள்ள பெருமை சொல்லப்பட்டதாயிற்று.

இனி "சாஸ்திரங்கள் போகட்டும்; பகவானைச் சொல்லும் மந்திரம் திருமந்திரம் ஒன்றுமட்டுமன்றே, மேலும் பல உள்ளனவே. அவற்றைக்கொண்டு அறிவு பெறலாமே" என்னும் கேள்வியெழ, மேலே பதின்மூன்றுவது சூர்ணை வரையில் மற்ற ப4க3வந் மந்த்ரங்களைக் காட்டிலும் திருமந்த்ரத்திற்குள்ள பெருமையை அருளிச்செய்வதாகத் திருவுள்ளம்பற்றி, அடுத்த சூர்ணையில் "ப4க3வானைச் சொல்லும் மந்திரங்கள் பலவுள்ளன" என்கிறார்.

மூ 8 ப4க3வந் மந்த்ரங்கள் தான் அநேகங்கள்.

விவரணம்: அதாவது —

> ஆஸ்தாம் தே கு3ணராஶிவத்3 கு3ணபரீவாஹாத்மநாம் ஜந்மநாம்
> ஸங்க்2யா [illegible] ஸ்வர।
> அர்த்2ய [illegible] சகபாரதீ4நாகி2லாத்மஸ்தி2தி:
> [illegible] ஶப்3த3ஜாலம் ஜாடீ3பு4யதே॥
> [ர-ஸ்த 2-74]

ஸூ 9 அவைதான் வ்யாபகங்களென்றும், அவ்யாபகங்களென்றும் இரண்டு வர்க்கம்.

விவரணம்:—அதாவது -எல்லாப் பொருள்களையும் வியாபித்திருக்கும் ப$_4$க$_3$வத்ஸ்வரூபத்தைச் சொல்லுகையாலே வ்யாபக மந்த்ரங்கள் என்றும், எம்பெருமானுடைய அவதாரங்களில் குணம், செயல் ஆகிய ஒவ்வொன்றைச் சொல்லுவதாலே அவ்யாபக மந்த்ரங்கள் என்றும் ப$_4$க$_3$வந் மந்த்ரங்கள் இரண்டுவகைப்பட்டிருக்கும் என்று கருத்து.

'இந்த இரண்டு வகைகளும் ஒன்றுக்கொன்று ஒத்தவையாயிருக்குமோ' என்னும் கேள்வியெழ, 'அவ்யாபக மந்த்ரங்களைக் காட்டிலும் வ்யாபக மந்த்ரங்கள் மூன்றும் சிறந்தவை' என்கிறார் அடுத்த சூர்ணையில்.

ஸூ 10 அவ்யாபகங்களில் வ்யாபகங்கள் மூன்றும் ஶ்ரேஷ்ட$_2$ங்கள்.

விவரணம்: அதாவது — அவ்யாபக மந்த்ரங்களாயிருக்கும் எல்லா மந்திரங்களைக்காட்டிலும்

நாராயணாய வித்$_3$மஹே வாஸுதே$_3$வாய தீ$_3$மஹி
தந்நோ விஷ்ணு: ப்ரசோத$_3$யாத்
[ தைத்-நாராயணவல்லி]

[நாராயணனை அடைய விரும்புகிறோம்; (அதன்பொருட்டு) வாஸுதே$_3$வனாகிற அவனை உபாஸிக்கிறோம்; அந்த உபாஸனையை விஷ்ணுவானவர் வளரச் செய்யட்டும்] என்று விஷ்ணு கா$_3$யத்ரியில் ஓதப்படுகிறவையாய், எங்கும் வியாபித்திருக்கும் ப$_4$க$_3$வத் ஸ்வருபத்தைச் சொல்லும் நாராயண சப்தத்தை உள்ளடக்கிய திருமந்திரமும், அத்தகைய வாஸுதே$_3$வ சப்தத்தை உள்ளடக்கிய "ஓம் நமோ ப$_4$க$_3$வதே வாஸுதே$_3$வாய" என்னும் த்$_3$வாதசாக்ஷரியும், அத்தகைய விஷ்ணு சப்தத்தை உள்ளடக்கிய "ஓம் நமோ விஷ்ணவே" என்னும் ஷடக்ஷரியும் ஆகிய வ்யாபக மந்த்ரங்கள் மூன்றும் சிறந்தவையாயிருக்கும் என்று கருத்து.

இந்த விஷ்ணு காயத்ரியில் அந்த மூன்று மந்திரங்களுக்கும் ப்ரதானமாயிருக்கும் நாராயண வாஸுதேவ விஷ்ணு ஶப்தங்களே சொல்லப்பட்டிருந்தபோதிலும், எல்லா மந்திரங்களுக்கும் பொதுவான ப்ரணவ நமஸ்ஸுக்களோடே கூடின இந்த மூன்று மந்திரங்களுக்கும் இந்த மூன்று நாமங்கள் உபலக்ஷணமாகக் கொள்ளவேண்டும்.

இந்த மூன்று வ்யாபக மந்திரங்களும் ஒன்றோடொன்று ஒத்தவையோ? என்னும் கேள்வியெழ, இவை மூன்றுக்குள்ளும் பெரிய திருமந்திரமான திருவஷ்டாக்ஷரம் முக்கியமானது என்கிறார் அடுத்த சூர்ணையில்.

**சூ 11 இவை மூன்றிலும் வைத்துக்கொண்டு பெரிய திருமந்த்ரம் ப்ரதாநம்.**

விவரணம்: அதாவது — அவ்யாபகங்களாகிற மற்ற மந்திரங்களைக்காட்டிலும் மிகச் சிறந்தவையாகையாலே விஷ்ணு காயத்ரியில் படிக்கப்பட்ட இந்த மூன்று மந்திரங்களிலும் 'நாராயணாய வித்மஹே' என்று விஷ்ணுகாயத்ரியில் முதலில் எடுக்கப்பட்டதாகையாலும், எம்பெருமானுடைய ஸ்வரூபம், ரூபம், ஸர்வவ்யாபகத்வம், ஸர்வாதாரத்வம், ஜீவர்கள் அனைவருக்கும் ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் இருக்கை ஆகிய குணங்கள், அவனுடைய செல்வம் ஆகிய பல அர்த்தங்களைக் கூறுகிறதாகையாலும்,

யதா ஸர்வேஷு தேவேஷு நாஸ்தி நாராயணாத் பர: |
ததா ஸர்வேஷு மந்த்ரேஷு நாஸ்தி சாஷ்டாக்ஷராத் பர: ||
[நாரதீயம் அஷ்டாக்ஷரப்ரஹ்மவித்யை 1-41]

[எல்லா தேவர்களுக்குள்ளும் நாராயணனைக்காட்டிலும் மேலானவனில்லாததுபோலே எல்லா மந்திரங்களுக்குள்ளும் அஷ்டாக்ஷரத்தைக் காட்டிலும் மேலானதில்லை]

ருதம் ருதம் புநர்ஹ்ருதம் ஸத்யபூர்வம் ப்ரவீமி வ: |
ஹே புத்ரஶிஷ்யா: ஶ்ருணுத ந மந்த்ரோ(அ)ஷ்டாக்ஷராத் பர: ||
[நாரஸிம்ஹபுராணம் 18-31]

(புத்திர சிஷ்யர்களே! இங்கே இப்போதே கைதூக்கி, சத்தியம் செய்து சொல்லுகிறேன்; கேளுங்கள். திருவஷ்டாக்ஷரத்தைக் காட்டிலும் மேலான மந்த்ரமில்லை.] என்று சாஸ்திரங்களில் சிறந்த மந்திரமாகச் சொல்லப்பட்ட திருமந்திரமே முக்கியமானதாயிருக்கும் என்று கருத்து.

'வாஸுதேவமந்த்ரம் விஷ்ணுமந்த்ரம் ஆகிய மற்ற இரண்டு மந்திரங்களுக்கும் குறையென்ன?' என்னும் கேள்வியெழ, இரண்டு குறைகளைச் சொல்லுகிறார் அடுத்த சூர்ணையில்.

**ஸூ 12: மற்றையவை இரண்டுக்கும் அஶிஷ்ட பரிக்ரஹமும் அபூர்த்தியும் உண்டு.**

விவரணம்:— அதாவது— வாஸுதேவ விஷ்ணு ஶப்தங்களை யுடைய மற்ற வ்யாபகமந்த்ரங்கள் இரண்டுக்கும் வேதங்களுக்கு அவப்பொருள் கூறும் அத்வைதிகள் முதலானவர்களால் ஆத ரிக்கப்படுகையாகிற அஶிஷ்டபரிக்ரஹமும், எம்பெருமானுடைய ஸ்வரூபம் தவிர அவனுடைய ரூபகுணவிபூதிகளை வெளிப்படை யாகச் சொல்லாமலிருக்கையாகிற அபூர்த்தியும் உண்டு என்று கருத்து. "வாஸுதேவ" ஶப்தமும் "விஷ்ணு" ஶப்தமும் ஸர்வ வ்யாபியான ஸ்வரூபத்தை மாத்திரமே சொல்லுகின்றன. அத னால் "அந்த ஸ்வரூபமே உண்மை; ரூப குணவிபூதிகள் பொய்" என்று கூறும் அத்வைதிகள் இவ்விரண்டு மந்திரங்களையும் மிக வும் ஆதரிக்கிறார்கள். 'நாராயண' ஶப்தத்தில் 'நார' ஶப்தத் தாலே ரூபகுணவிபூதிகளும் சொல்லப்படுகையாலே அந்த மந்தி ரத்தை "எந்த பேதமுமற்ற அறிவொன்றே உண்மை" என்று கூறும் அவர்கள் ஆதரிப்பதில்லை. ஆக, அஶிஷ்டர்களான புறமதத்தவர்களால் ஆதரிக்கப்படுகை இந்த இரு மந்திரங்களுக் குமுள்ள ஒரு குற்றம் என்றதாயிற்று. அப்படியில்லாமல் ஶிஷ்ட பரிக்ரஹமும் இல்லாமை இவற்றுக்கு ஒரு குற்றம் என்றும் கொள் ளலாம். அதாவது—ஸ்வரூபரூபகுணவிபூதிகள் அனைத்தையும் சொல்லுகையாலே நம்முடைய ஆழ்வார்களும் ஆசார்யர்களுமான ஶிஷ்டர்கள் 'நாராயண' மந்திரத்தையே மிகவும் ஆதரித்தார்கள், மற்ற இருமந்திரங்களையும் அப்படி ஆதரிக்கவில்லை என்றுகருத்து. மேலும் 'நாராயண' மந்திரத்துக்குள்ள அர்த்த பூர்த்தி வாஸு தேவ விஷ்ணுமந்திரங்களுக்கில்லை என்றும் மற்றொரு குறை. எப் படியெனில்; இந்த மூன்று மந்திரங்களும் வ்யாப்தியைச் சொன்ன போதிலும் நாராயண மந்திரத்தில் வியாபிக்கப்படும் எல்லாப் பொருள்களையும் 'நார' ஶப்தத்தால் சொன்னதுபோலே மற்ற இரு மந்திரங்களும் சொல்லவில்லை. அதற்காக "ஸர்வத்ர வஸதி" [எங்கும் வசிக்கிறான்] "ஸர்வத்ர வேவிஷ்டே" [எங்கும் நிறைந்திருக்கிறான்] என்று "ஸர்வத்ர" என்னும் ஶப்தத்தை வருவித்துக்கொண்டு

பொருள்கொள்ள வேண்டியிருக்கிறது. மேலும் நாராயண ஶப்3த3த்தில் 'நார' பத3த்தினாலே கு3ணங்களைச் சொல்லியிருப்பதுபோலே விஷ்ணு வாஸுதே3வ ஶப்3த3ங்களில் கு3ணங்களைச் சொல்லவில்லை, வாஸுதே3வ ஶப்3த3த்தில் இக்குறை தீருவதற்காக "ப4க3வத்" ஶப்3த3த்தைக் கூட்டிக்கொள்ளவேண்டியிருக்கிறது. மேலும் 'நாராயண' ஶப்3த3த்தில் எம்பெருமான் அந்தர்யாமியாக வியாபித்திருக்கிறான் என்று சொன்னதுபோலே விஷ்ணு மந்திரத்தில் வியாபித்திருக்கும் முறையைச் சொல்லவில்லை என்னும் அபூர்த்தியும் உண்டு. மேலும் 'நாராயண' ஶப்3த3த்தில் தத்புருஷ ஸமாஸத்தில் 'எல்லாப்பொருள்களையும் த4ரித்து நிற்கிறான்' என்று கூறுகையாலே, 'வ்யாப்திக்குப் பலன் ஒவ்வொரு பொருளினுடைய ஸத்தையையும் நிர்வஹிப்பது என்று வ்யாப்திக்குப்பலனும் சொல்லப்பட்டது. மற்ற இரண்டு மந்திரங்களிலும் வ்யாப்தி ப2லன் சொல்லப்படவில்லை என்னும் குறையும் உண்டு. இவ்விஷயங்களனைத்தும் "ஷடக்ஷரி வ்யாப்ய பதா3ர்த்தங்களையும், வ்யாபக ப்ரகாரத்தையும், வ்யாப்தி ப2லத்தையும், வ்யாபகனுடைய கு3ணங்களையும் சொல்லாதே, வ்யாப்திமாத்ர ப்ரகாஶகமாகையாலே அபூர்ணம். வ்யாபக ப்ரகாரத்தைச் சொல்லாநிற்கச் செய்தேயும் வ்யாப்ய பதார்த்தங்களுக்கு வாசக ஶப்3த3ம் இல்லாமையாலும் 'ஸர்வம் வஸதி' என்று அர்த்த2 ப2லத்தாலே ஸர்வ ஶப்3த3ம் புகுந்தாலும் அதில் கு3ணம் அந்வயியாமையாலும். இனி, கு3ணஸித்3தி4க்காக ப4க3வச்ச2ப்3த3த்தைக் கூட்டிக்கொள்ள வேண்டுகையாலும், வ்யாப்திப2லத்தைச் சொல்லாமையாலும் த்வாத3ஶாக்ஷரியும் அபூர்ணம். இம்மந்த்ரம் அவைபோலன்றியிலே வ்யாப்யபதா3ர்த்தங்களோடு, வ்யாபக ப்ரகாரத்தோடு, வ்யாப்தி ப2லத்தோடு, வ்யாபகனுடைய கு3ணங்களோடு வாசியற ஶப்3த3மாகக் காட்டுகையாலே அவற்றிற்காட்டில் இதுக்கு அர்த்த2 பௌஷ்கல்ய நிப3ந்த4நமான ஆதி4க்யம் உண்டு" என்று பரந்த ரஹஸ்யத்தில் பெரிய ஜீயர்ச்சான்பிள்ளை மிகத்தெளிவாக அருளிச்செய்தது இங்கு அனுஸந்திக்கத்தக்கது.

சென்ற குறிப்பில் மற்ற இரண்டு மந்திரங்களுக்குமே நல் வேதாந்திகளின் ஆதரவாகிற ஶிஷ்டபரிக்3ரஹம் மிகுதியாக இல்லை என்று சொல்லப்பட்டது. 'இந்த நாராயண மந்திரத்திற்கு ஶிஷ்ட

பரிக்₃ரஹமும் உண்டோ?' என்னும் கேள்வியெழ 'உண்டு' என்று காட்டுகிறார் அடுத்த சூர்ணையில்,

**சூ 18 இத்தை வேத₃ங்களும், ருஷிகளும், ஆழ்வார்களும், ஆசார்யர்களும் விரும்பினார்கள்,**

விவரணம்: (i) வேத₃ங்கள் மற்ற இரண்டு மந்திரங்களைக் காட்டிலும் 'நாராயண' மந்திரத்தையே விரும்பின என்பது பின் வரும் உபநிஷத் வாக்யங்களிலிருந்து விளங்கும். (1) விஷ்ணு காயத்ரியில் மற்ற இரண்டு மந்திரங்களைக்காட்டிலும் 'நாராயண' மந்திரம் முதலில் சொல்லப்பட்டது. (2) எல்லா வேதாந்தங்களுக்கும் ஸாரமான தைத்திரீய நாராயணானுவாகத்தில்,

விஶ்வம் நாராயணம் [தை-நாரா]

[எல்லாமாயிருப்பவன் நாராயணனே] என்று தொடங்கி,

நாராயணபரம் ப்₃ரஹ்ம தத்வம் நாராயண: பர:
நாராயணபரோ ஜ்யோதிராத்மா நாராயண: பர:||
யச்ச கிஞ்சிஜ்ஜக₃த்யஸ்மிந் த்₃ருஶ்யதே ஶ்ருயதேऽபி வா|
அந்தர் ப₃ஹிஶ்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தி₂த:||
[தை-நாரா]

[நாராயணனே பரப்₃ரஹ்மம்; நாராயணனே பரதத்வம்; பரஞ்சோதியும் நாராயணனே; பரமாத்மாவும் நாராயணனே; இவ்வுலகில் காண்பனவும் கேட்பனவுமான அனைத்தின் உள்ளும் புறமும் வியாபித்து விளங்குகிறான் நாராயணன்] என்று நாராயண மந்த்ரம் பலகால் ஓதப்பட்டது.

(3) ஏகோ ஹவை நாராயண ஆஸீந் ந ப்₃ரஹ்மா நேஶாநோ
நேமே த்₃யாவாப்ருதி₂வீ [மஹோபநிஷத்]

[(ப்ரளயகாலத்தில்) நாராயணன் ஒருவனேயிருந்தான்; பிரமனுமில்லை; சிவனுமில்லை; இந்த ஆகாச பூ₄மிகளுமில்லை] என்று மஹோபநிஷத்திலும் நாராயணமந்திரமே ஆதரிக்கப்பட்டது.

(4) சக்ஷுஶ்ச த்₃ரஷ்டவ்யஞ்ச நாராயண: |
ஶ்ரோத்ரஞ்ச ஶ்ரோதவ்யஞ்ச நாராயண: ||
[ஸுபாலோபநிஷத்]

[கண்ணும் காண்பனவும் நாராயணனே; காதும் கேட்பனவும் நாராயணனே] என்று தொடங்கி

திஶஶ்ச ப்ரதிஶஶ்ச நாராயண: [ஸுபாலோபநிஷத்]

[திக்குகளும் விதிக்குகளும் நாராயணனே] என்பதாக ஆதியோடந்தமாக ஸுபாலோபநிஷத்திலும் நாராயண மந்திரமே ஆதரிக்கப்பட்டது.

(6) யஸ்யாத்மா ஶரீரம் யஸ்ய ப்ருதிவீ ஶரீரம்
[ஸுபாலோபநிஷத்]

[எவனுக்கு ஆத்மா ஶரீரமோ, எவனுக்கு பூமி ஶரீரமோ] என்று தொடங்கி,

யஸ்ய ம்ருத்யு: ஶரீரம் [ஸுபாலோபநிஷத்]

[எவனுக்கு ம்ருத்யுஶப்தவாச்யமான மூலப்ரக்ருதி ஶரீரமோ] என்பது வரையிலும் உள்ள ஒவ்வொரு வாக்கியத்திலும் சொல்லப்பட்ட பரம்பொருள் நாராயணனே என்னும் விஷயம்

ஏஷ ஸர்வபூதாந்தராத்மா அபஹதபாப்மா திவ்யோ தேவ
ஏகோ நாராயண: [ஸுபாலோபநிஷத்]

[எல்லா பூதங்களுக்கும் அந்தராத்மாவாகவும், தோஷமற்றவனாகவும், பரமபதத்திலிருப்பவனாகவும் உள்ள தேவன் நாராயணன் ஒருவனே.] என்று ஸுபாலோபநிஷத்தில் அந்தர்யாமி ப்ராஹ்மணத்திலும் முழங்கப்பட்டது. இவ்வண்ணமாகப் பலஉபநிஷத் வாக்யங்களிலும் வாஸுதேவ விஷ்ணு ஶப்தங்களைத்தொடாமல் நாராயண ஶப்தத்தையிட்டே எம்பெருமானுடைய ஸ்வரூபம் முதலானவற்றைக் குறிக்கையால், ஒருபுருஷனால் செய்யப்படாததாய் என்றும் இருப்பதாய் இருள், துயக்கு, மயக்கு, மறப்பு முதலான குற்றங்களற்றதாய் இயற்கையான பிரமாணமான வேதங்களும் இந்த 'நாராயண' மந்திரத்தையே மிகவும் விரும்பின.

(ii) யதா ஸர்வேஷு தேவேஷு நாஸ்தி நாராயணாத் பர:
ததா ஸர்வேஷு மந்த்ரேஷு நாஸ்தி சாஷ்டாக்ஷராத் பர:
[நாரதீயம் அஷ்டாக்ஷரப்ர[illegible] 1-41]

[எல்லா தேவர்களுக்குள்ளும் நாராயணனைக்காட்டிலும் மேலானவனில்லாததுபோலே எல்லா மந்திரங்களுக்குள்ளும் அஷ்டாக்ஷரத்தைக்காட்டிலும் மேலானதில்லை.]

ஸர்வ வேதா₂ந்த ஸாரார்த்த₂ஸ் ஸம்ஸாரார்ணவதாரக:|
க₃திரஷ்டாக்ஷரோ ந்ருணாம் அபுநர்ப்பவ₄ காங்க்ஷிணாம்||
[நாரதீ₃யம் அஷ்டாக்ஷர ப்₃ரஹ்மவித்₃யை1-42]

[மறுபிறப்பின்மையை விரும்பும் மனிதர்களுக்கு எல்லா வேதா₃ந்தங்களின் ஸாரப்பொருளும், ஸம்ஸாரக்கடலைத் தாண்டுவிப்பதுமான அஷ்டாக்ஷரமே புகலாகும்.]

ஆர்த்தா விஷண்ணா: ஸிதி₂லாஸ்ச பீ₄தா:
கோ₄ரேஷு ச வ்யாதி₄ஷு வர்த்தமாநா: |
ஸங்கீர்த்ய நாராயண ஸப்₃த₃ மாத்ரம்
விமுக்த து₃:க்கா₂: ஸுகி₂நோ ப₄வந்தி ||
[பா₄ரதம் ஸஹஸ்ரநாமாத்₄யாயம்]

[செல்வமிழந்து வருந்துமவர்களும், செல்வம் பெறாமல் துன்புறுமவர்களும், ஆத்ம துப₄வமில்லாமல் சிதைகின்றவர்களும், ப₄க₃வத் து₄பவம் பெறாமல் பயப்படுமவர்களும், கோ₄ரமான வியாதிகளில் துன்புறுகின்றவர்களும் நாராயண ஸப்₃த₃த்தை மாத்திரம் ஸங்கீர்த்தனம் செய்தவுடன் துன்பம் நீங்கி இன்புறுகிறார்கள்.]

நாராயணேதி ஸப்₃தோऽஸ்தி வாக₃ஸ்தி வஸவர்த்திநீ|
தத₂ாபி நரகே கோ₄ரே பதந்தீதி கிமத்₃பு₄தம் ||
[விஹகேஸ்₃வரஸம்ஹிதை 24-12, கா₃ருட₃புராணம் பூ220-9]

[நாராயணனெனும் சொல் உள்ளது; வாக்கெனும் இந்திரியம் வஸத்திலுள்ளது. அப்படியும் கொடிய நரகில் வீழ்கின்றனரே! என்ன ஆச்சர்யம்!]

கிம் தத்ர ப₃ஹுபி₄ர் மந்த்ரை: கிம் தத்ர ப₃ஹுபி₄ர் வ்ரதை:|
நமோ நாராயணாயேதி மந்த்ரஸ் ஸர்வார்த்த₂ ஸாத₄க:||
[நாரதீ₃யம் அஷ்டாக்ஷரப்₃ரஹ்மவித்₃யை 1-40]

[பல மந்திரங்களால் என்ன பயன்? பல விரதங்களால் என்ன பயன்? 'நமோ நாராயணாய' என்னும் மந்திரமே எல்லாப்பயனையும் கொடுத்திடுகின்றதே!] முதலான இடங்களிலே வேதா₃ங்களின் பொருளை விளக்க வந்த தம்முடைய இதிஹாஸபுராணங்களில் பலவிடங்களிலும், 'நாராயண' மந்திரத்தை மிகவும் புகழ்ந்து

பேசுகையாலே வேதங்களை விளக்குவதிலேயே ஈடுபட்டவர்களான வியாஸர் பராசரர் முதலான மஹரிஷிகளும் இந்த நாராயண மந்திரத்தையே மிகவும் விரும்பினார்கள்.

(iii) ஆழ்வார்களும் ஒருமிடறாக இம்மந்திரத்தையே பின்வருமாறு மிகவும் ஆதரித்தார்கள். (1)"வண்புகழ் நாரணன்"[திருவாய் 1-2-10] "செல்வ நாரணன்" [திருவாய் 1-10-8] என்று தொடங்கி "வாழ்புகழ் நாரணன்" [திருவாய் 10-9-1] என்று முடிவாக தொடக்கம், நடுவு, இறுதியாக நம்மாழ்வார் அருளிச்செய்தார். (2) "நாடு நகரமும் நன்கறிய நமோ நாராயணாய" [திருப்பல்-4] என்று தொடங்கி "ஓவாதே நமோ நாராயணாவென்பன்" [பெரியாழ் திரு 5-1-3] என்று பெரியாழ்வாரும், (3) "நாத்தழும்பெழ நாரணா" [பெருமாள் திரு 2-4] என்று தொடங்கி "தலைத்திகழ் நாரணன்" [பெருமாள் திரு 10-11] என்று குலசேகராழ்வாரும், (4) "நான்முகனை நாராயணன் படைத்தான்" [நான் திருவ 1] என்று தொடங்கி "எட்டெழுத்தும் ஓதுவார்கள் வல்லர் வானமாளவே" [திருச்சந்த 77] என்று திருமழிசைப்பிரானும், (5) "நான் கண்டு கொண்டேன் நாராயணா என்னும் நாமம்" [பெரியதிருமொழி 1-1-1] என்று தொடக்கத்தில் ஒருமுறை சொன்னதுபோலே பலகால் சொல்லி, இறுதியில் "நாராயணனே! மணிவண்ணா! நாகணையாய் வாராய்" [சிறியதிருமடல் 50] என்று தொடக்கம் முதல் முடிவு வரை பலவிடங்களிலும் திருமங்கையாழ்வாரும் அருளிச் செய்தார்கள். (6) "நன்மாலை கொண்டு நமோ நாரணா என்னும் சொன்மாலை கற்றேன்" [முதல் திருவ 57] என்றும், "நாரணா என்று ஓவாது உரைக்கும் உரையுண்டே" [முதல் திருவ 95] என்றும், "ஞானச்சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு" [இரண்டாம் திருவ 1] என்றும், "நாரணன் தன் நாமங்கள்" [இரண்டாம் திருவ 2] என்றும், "பகற்கண்டேன் நாரணனைக் கண்டேன்" [இர-திருவ-81] என்றும், "நாமம் பலசொல்லி நாராயணா" [மூன்றாம் திருவ 8] என்றும் முதலாழ்வார்களும் அருளிச் செய்தனர். இவ்வண்ணமாக 'மயர்வற மதிநலம் அருளினன்' [திருவாய் 1-1-1] என்கிறபடியே ஒரு கைம்முதலை எதிர்பாராமல் விளைந்த எம்பெருமானுடைய கடாக்ஷத்தாலே எல்லாப்பொருள்களின் உண்மைகளையும் அறிந்தவர்களான ஆழ்வார்கள் அனைவரும் இம்மந்திரத்தையே விரும்பினர்.

iv மற்ற இரு மந்த்ரங்களையும் அநாதரித்து இம்மந்திரத்தையே தமக்குத் தஞ்சமாக அநுஸந்தித்து, உபதேசம் செய்யும் போதும். தம்மைப்பற்றியவர்களுக்கு இம்மந்திரத்தையே உஜ்ஜீவநோபாயமாக உபதேசிக்கையாலே அவ்வாழ்வார்களைப் பின்பற்றிய ஆசார்யர்கள் அனைவரும் இம்மந்திரத்தையே விரும்பினார்கள் என்று கருத்து. ஆக. 8 முதல் 13 ஈருன சூர்ணிகைகளால் மற்ற மந்திரங்களைக் காட்டிலும் இம்மந்திரத்திற்குள்ள பெருமை சொல்லப்பட்டதாயிற்று.

இனி இந்த மந்திரத்தால் சொல்லப்படுபவனான எம்பெருமானைக் காட்டிலும், இந்த மந்த்ரத்துக்குள்ள பெருமையை அடுத்த சூர்ணையில் அருளிச்செய்கிறார்.

**மூ 14: வாச்ய ப்ரபா₄வம் போலன்று வாசக ப்ரபா₄வம்.**

விவரணம்: அதாவது—இந்த மந்திரத்துக்குப் பொருளாயிருக்கும் ஈஶ்வரனுடைய பெருமையைக்காட்டிலும் அவனைச்சொல்லும் இந்த மந்திரம் பெருமைபெற்றது என்று கருத்து.

இந்தப்பெருமை யாது? என்னும் கேள்வியெழ அப்பெருமையை அருளிச் செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

**மூ 15: அவன் தூ₃ரஸ்த₂னானாலும் இது கிட்டி நின்று உதவும்.**

விவரணம்: அதாவது—இந்த நாராயண நாமத்துக்குப் பொருளாயிருக்கும் எம்பெருமான் அருகிலில்லாமல் தூ₃ரத்திலிருந்த போதிலும் அவனைச் சொல்லும் பெயரான இந்நாமம் அருகிலிருந்து தன்னைச் சொன்னவர்களுடைய விருப்பங்களை நிறைவேற்றித்தரும் என்று கருத்து.

இவ்வண்ணமாக அவன் தூ₃ரத்திலிருக்கும்போது அவன் பெயர் உதவின இடமுண்டோ? என்னும் கேள்வியெழ, உண்டு என்று காட்டுகிறார் அடுத்த சூர்ணையில்.

**மூ 16: த்₃ரௌபதிக்கு ஆபத்திலே புடவை சுரந்தது திருநாமமிறே.**

விவரணம்: அதாவது—துரியோதனதியருடைய பெரிய சபையிலே துச்சாதனன் திரௌபதியின் துகிலை உரிந்தபோது,

மஹாத்யாபதி3 ஸம்ப்ராப்தே ஸ்மர்த்தவ்யோ ப4க3வாந் ஹரி:
[ப4ார-ஸப4ாபர்-த்3யூதபர் 90-42]

[பேராபத்து வந்தபோது ஹரியை நினைக்கவேண்டும்.] என்கிற படியே முன்பொருகால் ஸ்ரீவஸிஷ்ட மஹர்ஷி "அம்மா! உனக்கு, பிற்காலத்தில் ஒரு பேராபத்து வரும். உனக்கு ஒருவரும் உதவா திருக்கும் அந்நிலையில் நீ ஸர்வலோக ஶரண்யனான கண்ணனையே தஞ்சமாகக் கொள்" என்று உபதேசித்து வைத்ததை நினைவு கூர்ந்து திரௌபதியானவள்

ஶங்க2சக்ர க3தா3பாணே த்3வாரகாநிலயாச்யுத |
கோ3விந்த3 புண்ட3ரீகாக்ஷ ரக்ஷ மாம் ஶரணாக3தாம் ||
[ப4ார-ஸப4ா-த்3யூத 90-43]

[ஶங்க2ம் சக்கரம் க3தை3 ஆகிய ஆயுத4ங்களைக் கையிலுடையவனே! துவாரகையில் வாழ்பவனே! அச்சுதனே! கோ3விந்த3னே! தாமரைக் கண்ணா! ஶரணமடைந்த என்னை ரக்ஷிப்பாய்.] என்கிறபடியே கண்ணனைச் சரணம் புகுந்தாள். ப4ாரதாதி தனி ச்லோகத்தில் இந்த திரௌபதீ ஶரணாக3தி ஶ்லோகத்தை விவரித்த பெரிய வாச்சான் பிள்ளை ஒவ்வொரு பதத்திற்கும் கருத்துரைக்கும் போது திரௌபதியானவள் "ஶங்க2சக்ர க3தா3பாணே" என்றதால் துஷ்டர்களான துரியோதனாதியரைக் கண்ணன் ஆயுதங்களாலே அழிக்க விரும்பினாள் என்றும், "த்3வாரகாநிலய" என்னும் பத3த்தாலே "நீ துவாரகையில் ஆட்சி புரிவது போலே எங்களுக்கும் அரசாட்சியைப் பெற்றுத்தரவேண்டும்", என்று விரும்பினாள் என்றும், "அச்யுத" என்றதாலே 'அடியவரை நழுவ விடாமையால் அச்சுதன் என்று பெயர்பெற்ற நீ என்னுடைய நழுவாமல் பார்த்துக்கொள்ள வேண்டும்' என்று விரும்பினாள் என்றும், "கோ3விந்த3" என்னும் பத3த்திற்கு 'அழகிய திருக்குழற்கற்றையை உடையவனே' என்று பொருள் கொண்டு, "நீ குழல் பேணி யிருப்பது போலே என் விரித்த குழலையும் முடிப்பிக்கவேண்டும்" என்று விரும்பினாள் என்றும், "புண்ட3ரீகாக்ஷ" என்னும் பத3த்தாலே "இமைபொருந்தும் செய்யாவிடிலும் இங்கே நேரில் வந்து உனது தாபத்தை அழிக்கின்ற தண்தாமரைக் கண்களாலே குளிர நோக்கி என்னை ஆறுதல் அடைவிக்க வேணும்" என்று விரும்பினாள் என்றும் வியாக்கியானம் செய்தார். ஆனால், 'கோ3விந்த3 நாமம் ஒன்றே புடவை சுரந்தது என்றும், மற்ற ப2லன்கள் அவளுக்கு அப்போது கிடைக்கவில்லை; பதின்மூன்று வருடங்க

ளுக்குப் பிறகு மஹாபாரத யுத்தம் முடிந்தபின்பே கிடைக்கச் செய்தான் எம்பெருமான்' என்று வியாக்யானம் செய்தார்.

கோவிந்தேதி யதாக்ரந்தத் க்ருஷ்ணா மாம் தூரவாஸிநம்
ருணம் ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாந் நாபஸர்ப்பதி ||
[பார-உத் 47-39]

[வெகுதூரத்திலிருந்த என்னை த்ரௌபதியானவள் 'கோவிந்தா' என்று கூப்பிட்டது வ்ருத்தியடைந்த கடன் போலே என் நெஞ்சிலிருந்து அகலகின்றதில்லை.] என்கிற மஹாபாரத ஸ்லோகத்திலும் கண்ணன் த்ரௌபதி கூக்குரலிட்டபோது தன்னால் உதவ முடியவில்லை என்றும், தான் தூரத்திலிருக்க நேர்ந்துவிட்டது என்றும், "கோவிந்தா என்று த்ரௌபதி கதறியது தன் நெஞ்சைப் புண்படுத்தியது" என்றும் அருளிச்செய்திருக்கிறான். இப்படி த்ரௌபதி ஆர்த்த ப்ரபத்திக்கு விரும்பின பலன்கள் உடனே கிடைக்காமையாலும், கிடைத்த ஒரு பலனாகிய வஸ்த்ர வ்ருத்தி கோவிந்த நாமத்தாலே விளைந்தது என்று கண்ணன் சொல்லுகையாலும், த்ரௌபதி சரணமடைந்தபின்பு ஆபத்தின் கனத்தாலே "இந்த கோவிந்த நாமமாவது நம் மானத்தைக் காப்பாற்றுதா" என்று கோவிந்த நாமத்தைச் சொல்லிக் கதறியிருக்கிறாள் என்றும், அதனாலேயே சணற்கயிறு கண்ட பிரம்மாஸ்திர நியாயத்தாலே மற்ற சரணாகதி பலன்கள் கிடைக்கவில்லை என்றும், கோவிந்தநாமம் ஸப்தசக்தியாலே புடைவை வளரும்படி செய்துவிட்டது என்றும் விளங்குகிறது. ஆக, எம்பெருமான் 'தூரவாஸிநம்' என்று தூரத்திலிருந்து உதவாத நிலையிலும், கோவிந்த நாமம் உதவியதிலிருந்து இவ்விஷயத்தை அறிந்து கொள்ளலாம் என்று கருத்து. இவ்விஷயத்தில் விரிவு வேண்டுவார் பாரதாதி தனி ச்லோகத்தில்—த்ரௌபதி சரணாகதி ஸ்லோகவிவரணத்திலும், அதற்கு விளக்கமாகஎழுந்த த்ரௌபதீ ப்ரபத்தி ஸித்தாஞ்ஜனம், ஸித்தாஞ்ஜன ஸம்ரக்ஷணம் ஆகிய நமது நூல்களிலும் கண்டு கொள்ளலாம்.

நாராயண நாமத்தின் பெருமையைக்கூறும் ப்ரகரணத்தில் கோவிந்த நாமத்தின் பெருமையைக் கூறியது பொருந்துமோ? எனில், 'நாராயண' நாமத்தில் அடங்கிய பல அர்த்தங்களில் ஒரு சிலவற்றையே தன்னுள் கொண்டிருக்கும் கோவிந்த நாமத்திற்கே இத்தகைய பெருமையிருந்தால் நாராயண நாமத்தின் பெருமை சொல்லாமலே விளங்கும் என்று கருத்து. ஆகையாலே பொருந்தும்.

மற்றும் ஒரு வழியாலே திருநாமத்தின் பெருமையை அடுத்த சூர்ணையில் அருளிச்செய்கிறார்,

ஸூ 17: சொல்லும் க்ரமம் ஒழியச்சொன்னாலும் தன் ஸ்வரூபம் கெட நில்லாது.

விவரணம் : அதாவது—பகவந்நாமம் தவிர மற்ற மந்திரங்கள் அனைத்தும் தன்னைத் தஞ்சமாக நம்பிச்சொன்னவர்களுக்கே காரியம் செய்யுமேயொழிய மற்றவர்களுக்குச் செய்யாது. பகவந் நாமமோ வெனில்:

ஸாங்கேத்யம் பாரிஹாஸ்யம் ச ஸ்தோபம் ஹேளநமேவ வா|
வைகுண்டநாமக்ரஹணமஶேஷாகஹரம் விது:||
[பாகவதம் 6-8-14]

[(வேறொருவருடைய) பெயரிட்டழைக்கும் போதும், பரிஹாஸத்திற்காகவும், அர்த்தமில்லாமலும, ஏளனமாகவும் வைகுண்டனுடைய பெயரைச் சொல்லுவதுங்கூட எல்லாப் பாபங்களையும போக்குவதென்று அறிகிறார்கள்,] என்கிறபடியே அஜாமிளனைப் போலே மகன் பெயரைச்சொல்லி அழைத்தாலும், சிசுபாலாதிகளைப் போலே பரிஹாஸமாகவோ, அர்த்தமில்லாமலோ, ஏளனமாகவோ சொன்னாலும் சொன்னவர்களை ரக்ஷிக்கிற தன் தன்மையைக் கைவிடாது என்று கருத்து.

இனி, இது எல்லாப் பலன்களையும் அளிக்கும் என்னும் இதன் பெருமையை அடுத்த சூர்ணையில் அருளிச்செய்கிறார்,

ஸூ 18. இதுதான் "குலந்தரும்" என்கிறபடியே எல்லா அபேக்ஷிதங்களையும் கொடுக்கும்.

விவரணம்: அதாவது—இந்த நாராயண மந்த்ரம்

"குலந்தரும் செல்வம் தந்திடும் அடியார் படுதுயராயின வெல்லாம்
நிலந்தரஞ் செய்யும் நீள்விசும்பருளும் அருளொடு பெருநிலமளிக்கும்
வலந்தரும் மற்றுந்தந்திடும் பெற்றதாயினும் ஆயின செய்யும்
நலந்தரும் சொல்லை நான் கண்டுகொண்டேன் நாராயணா என்னும் நாமம்!"
[பெரிய திரு 1—1—9]

என்று திருமங்கையாழ்வார் அருளிச்செய்தபடியே அவரவர் விருப்பத்துக்கும் தகுதிக்கும் தக்கபடி விரும்பியது அனைத்தையும் கொடுக்கும் என்று கருத்து.

இந்தச் சூர்ணையை அடுத்த சூர்ணையில் விவரிக்கிறார்.

மூ 19: ஐஶ்வர்ய கைவல்ய பகவல்லாபங்களை ஆசைப்பட்டவர்களுக்கு அவற்றைக் கொடுக்கும்.

விவரணம்: அதாவது—

ஐஹலௌகிகமைஶ்வர்யம் ஸ்வர்க்காத்யம் பாரலௌகிகம்।
கைவல்யம் பகவந்தஞ்ச மந்த்ரோயம் ஸாதயிஷ்யதி ॥
[வ்ருத்தஹாரீதஸ்ம்ருதி 6-50]

[இவ்வுலகச் செல்வத்தையும் சுவர்க்கம் முதலான மறுமைச் செல்வத்தையும் ஆத்மாநுபவமாகிற கைவல்யத்தையும் பகவதநுபவத்தையும் (அதையதை விரும்புவார்க்கு) இந்த மந்திரம் ஸாதித்துக் கொடுக்கும்]. என்கிறபடியே இவ்வுலகச் செல்வத்தையும், ஸ்வர்க்கம் முதலான மறுமைச்செல்வத்தையும், தன் ஆத்மாவைத் தான் அடைந்து அநுபவிப்பதாகிற கைவல்யத்தையும் மேலான புருஷார்த்தமான பகவத் ப்ராப்தியையும் ஆசைப்பட்ட அதிகாரிகளுக்கு, இந்த 'நாராயண' மந்திரமானது ஜபம், ஹோமம் முதலானவற்றாலே தானே ஸாதநமாய் நின்று அந்தப் புருஷார்த்தங்களைக் கொடுக்கும் என்று கருத்து.

அடுத்தபடியாக "கர்மயோகம் முதலான உபாயங்களில் ஈடுபடுவோர்க்கு இந்த மந்திரமானது அவற்றுக்குள்ள தடைகளைப் போக்கி அவ்வுபாயங்களை நிறைவடையச் செய்யும்" என்கிறார் அடுத்த சூர்ணையில்.

மூ 20: கர்மஜ்ஞாந பக்திகளிலே இழிந்தவர்களுக்கு விரோதியைப் போக்கி அவற்றைத் தலைக்கட்டிக் கொடுக்கும்.

விவரணம்: அதாவது—கர்மயோகத்தில் ஈடுபடுவோர்க்கு ஜபம், ஹோமம் முதலானவற்றால் இந்த மந்திரத்தை அங்கமாக (துணையாக)க் கொண்டார்களாகில் இந்த மந்திரமே கர்மயோகம் தொடங்குவதற்குத் தடையான பாபத்தைப் போக்கி, கர்மயோகத்தை இடையிடாமல் வளரும்படி செய்து அதனை நிறை

வேற்றிக் கொடுக்கும். முதலில் ஜ்ஞாநயோகத்திலே ஈடுபடுவோர்களுக்கு, தன்னைத் துணையாகக் கொள்வார்களானால், இம்மந்திரம் கர்மயோகத்தினால் உண்டாகும் ஜ்ஞாநயோகமும் தொடங்குவதற்குத் தடையாயுள்ள பாபத்தைப் போக்கி, அந்த யோகத்தை நாள்தோறும் வளரச் செய்து கொண்டு அதனை நிறைவேற்றிக் கொடுக்கும். பக்தியோகத்தில் ஈடுபடுவோர்களுக்கு, தன்னைத் துணையாகக்கொள்வார்களேயானால், இம்மந்திரம் பக்தியோகமும் தொடங்குவதற்குத் தடையாயுள்ள பாபத்தைப் போக்கி, பக்தியை நாள்தோறும் வளரச் செய்து அதை நிறைவேற்றிக் கொடுக்கும் என்று கருத்து.

இப்படி உபாயாந்தரங்களுக்கு உதவுவதோடல்லாமல் எம்பெருமானையே உபாயமாகக் கொண்ட ப்ரபந்நர்களுக்கு இம் மந்திரம் செய்யும் உபகாரத்தை அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

சூ 21: ப்ரபத்தியிலே இழிந்தவர்களுக்கு ஸ்வரூப ஜ்ஞாநத்தைப் பிறப்பித்துக் காலக்ஷேபத்துக்கும் போகத்துக்கும் ஹேதுவாயிருக்கும்.

விவரணம்: அதாவது— கீழ்ச்சொன்ன கர்மஜ்ஞாந பக்திகளைப் போலே அநுஷ்டிப்பதற்கு அரியதாய், எம்பெருமானுக்கு மிகவும் பாரதந்த்ரனான ஜீவனுடைய ஸ்வரூபத்துக்குத் தகாதது என்று சொல்லலாம்படி, தன் தன்மைக்குத் தான் பாடுபடுவதாயிராமல், அநுஷ்டிப்பதற்கு எளிதாய், எம்பெருமானையே உபாயமாகக் கொள்ளும் தன்மையாயிருக்கையாலே ஜீவஸ்வரூபத்துக்குத் தகுந்ததுமான ப்ரபத்தியாகிற உபாயத்தில் ஈடுபட்டவர்களுக்கு, அவர்களுக்கு வேண்டியதான பகவத்பாரதந்த்ர்யமாகிற ஸ்வரூப ஜ்ஞானத்தைத் தெளிவாக உண்டாக்கி, இம் மந்திரம் தன் பொருளை அநுஸந்திப்பது முதலானவற்றிலே போது போக்குகைக்குக் காரணமாய் இருந்துகொண்டு "எனக்கென்றும் தேனும் பாலும் அமுதுமாய திருமால் திருநாமம்" [பெரிய திரு 6-10-6] என்கிறபடியே இந்த மந்திரத்தால் சொல்லப்படும் எம்பெருமானைப்போலவே, தானும் இனியதாயிருக்கையாலே, அநுபவத்திற்கும் காரணமாயிருக்கும் என்று கருத்து.

அடுத்தபடியாக, ஆத்மா உய்வதற்குறுப்பாக அறியவேண்டிய அர்த்தங்கள் அனைத்தையும் அறிவிக்கையாகிற இதன் பெருமையை அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

ராம் வேற்றுமையாலே 'பல' ஸ்வரூபத்தையும் தெரிவிக்கையாலே இந்த மந்திரத்தில் ஐந்து அர்த்தங்களும் அறிவிக்கப்பட்டுள்ளமை தெளிவாய் விளங்குகிறது.

இதுவரையில் இந்த மந்திரத்தின் ஶப்தப் பெருமையை அருளிச்செய்தார். அடுத்த சூர்ணையில் மந்திரத்தின் அர்த்தப் பெருமையை அருளிச்செய்கிறார்,

மூ 24: பூர்வாசார்யர்கள், இதில் அர்த்தம் அறிவதற்கு முன்பு, தங்களைப் பிறந்தார்களாக நினைத்திரார்கள்; இதில் அர்த்த ஜ்ஞானம் பிறந்தபின்பு, "பிறந்தபின் மறந்திலேன்" என்கிறபடியே இத்தை ஒழிய வேறொன்றால் காலக்ஷேபம் பண்ணியறியார்கள்.

விவரணம்: அதாவது—நாதமுனி, யாமுனமுனி, யதிராஜர் முதலிய நம்முடைய பூர்வாசார்யர்கள் "அன்று நான்பிறந்திலேன்" [திருச்சந்த 64] என்கிறபடியே இந்த மந்திரத்தின் அர்த்தத்தை அறிவதற்கு முன்பு தங்களைப் பிறந்தவர்களாக நினைத்திருப்பதில்லை. இதில் அர்த்த ஜ்ஞானம் தங்களுக்கு விளைந்தபின்பு "பிறந்தபின் மறந்திலேன்" [திருச்சந்த 64] என்று திருமழிசையாழ்வார் அருளிச்செய்தபடியே, இம்மந்திரத்தின் பொருளையொழிய வேறொன்றால் போதுபோக்கி அறியார்கள் என்று கருத்து.

வேத சாத்திரங்கள், ஆழ்வார்கள் அருளிச் செயல்கள் ஆகியவற்றால் போது போக்கும் போதும் இம்மந்திரப் பொருளைச் சேர்த்தே அநுஸந்திக்கையாலே (இத்தையொழிய வேறொன்றால் காலக்ஷேபம் பண்ணியறியார்கள்) என்று அருளியது பொருத்தியதே.

இம்மந்திரத்தின் ஶப்தஶக்தியே மோக்ஷம் உள்ளிட்ட எல்லாப்பயன்களையும் ஸாதித்துக்கொடுக்கவல்லதாயிருக்க, இம்மந்திரத்தின் பொருளிலே இவ்வாசார்யர்கள் ஊன்றி நிற்பதற்குக் காரணத்தை அடுத்த சூர்ணையில் அருளிச்செய்கிறார்.

மூ 25: வாசகத்திற்காட்டில் வாச்யத்திலே ஊன்றுகைக்கடி, ஈஶ்வரனே உபாயோபேயமென்று நினைத்திருக்கை,

விவரணம்: அதாவது—எல்லாப்பயன்களுக்கும் இம்மந்திரத்தின் சப்தம் தானே ஸாதநமாய், மற்ற ஸாதநங்களுக்குத் துணையாகவுமிருந்து பலனை விளைத்துக்கொடுக்க வல்லதாயிருந்த போதிலும், அந்த சப்தத்தை ஜபம் ஹோமம் முதலானவற்றைச் செய்து பயன் பெறுவதில் ஊன்றியிருக்காமல், அந்த மந்திரத்தின் அர்த்தத்திலே பூர்வாசார்யர்கள் ஊன்றியிருந்ததற்குக் காரணம், நம்முடைய பூர்வாசார்யர்கள் மற்ற பயன்களை விரும்பும் உபேயாந்தரபரர்களாகவும் மற்ற ஸாதநங்களை அநுஷ்டிக்கும் உபாயாந்தரபரர்களாகவும் இல்லாமல் இருப்பதே ஆகும். மற்ற பயன்களை விரும்புகிறவர்கள் இம்மந்திரத்தின் சப்தத்தை ஸாதனமாகக்கொண்டு அப்பயன்களை ஸாதித்துக்கொள்வார்கள். மற்ற உபாயங்களில் ஈடுபடும் உபாயாந்தர பரர்களும் இதைத் துணையாகக்கொண்டு மோக்ஷம் உள்ளிட்ட பலன்களை ஸாதித்துக் கொள்வார்கள். நம்முடைய பூர்வாசார்யர்கள் இவர்களைப்போல் அல்லாமல் 'உபாயமும் உபேயமும் எம்பெருமானே' என்று அறுதியிட்டிருக்கும் பரமைகாந்திகளான ஜ்ஞானிகளாகையாலே இவர்கள் இந்த மந்திரத்தின் சப்தத்தில் ஊன்றியிராமல் அர்த்தமான எம்பெருமானிடத்திலேயே ஊன்றியிருப்பார்கள் என்று கருத்து.

இதுவரையில் திருமந்திரத்தினுடைய பலவகையான பெருமைகள் காட்டப்பட்டன. அவையாவன:—(1) மூன்றாவது, நான்காவது சூர்ணைகளாலே வாய்க்குவந்தபடி அநுஸந்திக்கத்தகாதபடியான இம்மந்திரத்தின் மதிப்பையும், (2) ஐந்தாவது, ஆறாவது சூர்ணைகளாலே ஈச்வரன் தானே சிஷ்யனுமாய் ஆசார்யனுமாய் நின்று வெளியிட்டருளுகையாலே வந்த சிறப்பையும், (3) ஏழு முதல் பதினாறு வரையிலுள்ள சூர்ணைகளாலே எல்லா சாஸ்திரங்களைக்காட்டிலும், எல்லா மந்திரங்களைக்காட்டிலும் மந்திரத்தால் சொல்லப்படும் எம்பெருமானைக்காட்டிலுங்கூட இம்மந்திரத்திற்கு உண்டான சிறப்பையும், (4) பதினேழாவது சூர்ணையில் இம்மந்திரம் முறைகெடச் சொல்லுகிறவர்களுக்கும் காரியம் செய்யும் சிறப்பையும், (5) பதினெட்டு, பத்தொன்பது சூர்ணைகளாலே விரும்பும் எல்லாப் பலன்களையும் கொடுக்கவல்லதாயிருக்கிற சிறப்பையும், (6) இருபதாவது சூர்ணையாலே கர்மயோகம் முதலான மற்ற உபாயங்களுக்குத் துணையாயிருக்கும் சிறப்பையும், (7) இருபத்தொன்று முதல் இருபத்துமூன்றுவரையிலுள்ள சூர்ணை

களாலே அறியவேண்டிய எல்லா அர்த்த$_2$ங்களையும் அறிவிக்கையால் வந்த சிறப்பையும், (8) இருபத்துநான்கு, இருபத்து ஐந்தாவது சூர்ணைகளாலே இம்மந்திரத்தில் சொல்லப்பட்ட அர்த்த$_2$த்தின் சீர்மையையும் அனைவரும் அறியும்படி வெளிப்படுத்தினாராயிற்று.

இனிமேல் இந்த மந்திரத்திற்கு இரண்டு வகையாக வாக்யார்த்த$_2$ம் சொல்லலாம் என்கிறார் அடுத்த சூர்ணையில்.

**மூ. 26. இது தன்னில் சொல்லுகிற அர்த்த$_2$ம் ஸ்வரூபமும் ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யமும்; ஸ்வரூபமும் உபாயமும் ப$_2$லமும் என்னவுமாம்.**

விவரணம்: அதாவது—இத்திருவெட்டெழுத்தில் சொல்லுகிற அர்த்த$_2$ம் ஜீவாத்மாவினுடைய ஸ்வரூபமான (ஸ்வரூபநிருபகத$_4$ர்மமான) சேஷத்வ பாரதந்த்ர்யங்களும், அந்த ஸ்வரூபத்துக்குத் தக்க ப்ராப்யமான கைங்கர்யமுமாகும். அப்படியல்லாமல் இம்மந்திரத்தில் சொல்லப்படுகிற அர்த்த$_2$ம் சேஷத்வமாகிற ஸ்வரூபமும், அந்த ஸ்வரூபத்துக்குத் தக்கதான உபாயமும், அவ்வுபாயத்தால் பெறப்படும் பயனும் என்றும் சொல்லலாம். இதில் முதல் யோஜனையில் முதலிரண்டு பதங்களான ப்ரணவ நமஸ்ஸுக்களாலே முறையே சொல்லப்படும் சேஷத்வ பாரதந்த்ர்யங்களாகிற ஸ்வரூபமும் மூன்றாம் பதத்தாலே சொல்லப்படும் கைங்கர்யமாகிற ப்ராப்யமும் சொல்லப்படுகிறது. இரண்டாவது யோஜனையில் ப்ரணவத்தாலே சேஷத்வமாகிற ஸ்வரூபமும், நமஸ்ஸாலே உபாயமும், நாராயண பத$_3$த்தாலே ப$_2$லமும் சொல்லப்படுகிறது.

ப$_2$லம் எத்தகையது என்னும் கேள்வியெழ, அடுத்த சூர்ணையில் அதற்குப் பதிலளிக்கிறார்.

**மூ. 27. ப$_2$லமிருக்கும்படி ப்ரமேயசேக$_2$ரத்திலும், ஆர்ச்சிராதி$_3$க$_3$தியிலும் சொன்னோம்.**

விவரணம்: அதாவது — ஜீவாத்மாவுக்கு அடையத்தக்க ப$_2$லம் — அர்ச்சிராதி$_3$ வழியாலே பரமபத$_3$த்திற்குச் சென்று பரிபூர்ணமாக எம்பெருமானை அநுப$_4$வித்து அந்த அநுப$_4$வத்தால் உண்டான உகப்பினால் தூண்டப்பட்டவனாய்ச் செய்யும் பல

வகைக் கைங்கர்யங்களேயாகையாலே, அது எத்தகையது என்பதைச் சுருக்கமாக "ப்ரமேயசேகரம்" என்னும் தமது க்ரந்தத்திலும், விரிவாக "அர்ச்சிராதிகதி" என்னும் தமது க்ரந்தத்திலும் தெளிவாகச் சொன்னோம். அங்கு கண்டுகொள்வது என்று கருத்து. [இவையிரண்டும் அஷ்டாதசரஹஸ்யத்தில் சேர்ந்தவை]

இனி, மேல் சூர்ணைகளிலே இந்த மந்திரத்திற்கு ஒவ்வொரு பதமாகப் பொருள் அருளிச்செய்வதாகத் திருவுள்ளம்பற்றி, முதலில் இதிலுள்ள எழுத்துக்கள் எவ்வளவு, பதங்கள் எவ்வளவு என்பதை அடுத்த சூர்ணையில் அருளிச்செய்கிறார்.

**சூ. 28. இது தான் எட்டுத் திருவக்ஷரமாய் மூன்று பதமாயிருக்கும்.**

**விவரணம்:** அதாவது—இம்மந்திரமானது

ஓமித்யேகாக்ஷரம்| நம இதி த்வே அக்ஷரே| நாராயணாயேதி
பஞ்சாக்ஷராணி| இத்யஷ்டாக்ஷரா சந்தஸா காயத்ரீ சேதி|
[நாராயணோபநிஷத்]

['ஓ' என்பது ஓரக்ஷரம்; 'நம:' என்பது இரண்டக்ஷரங்கள்; 'நாராயணாய' என்பது ஐந்தக்ஷரங்கள்; இப்படி இம்மந்திரம் எட்டு அக்ஷரமாகிறது. காயத்ரீ சந்தஸ்ஸையுடையதாகவுமாகிறது.]

ஓமித்யக்ரே வ்யாஹரேத்| நம இதி பஶ்சாத்|
நாராயணாயேத்யுபரிஷ்டாத்|| [நாராயணோபநிஷத்]

['ஓம்' என்று முதலில் சொல்லக்கடவன்; 'நம:' என்று அடுத்தபடியாகவும், அதற்குமேல் 'நாராயணாய' என்றும் சொல்லக்கடவன்] என்று நாராயண உபநிஷத்தில் ஓதியபடியே எட்டு எழுத்துக்கள் கொண்டதாய் மூன்று பதங்கள் கொண்டதாய் இருக்கும் என்று கருத்து. இது எட்டு எழுத்துக்கள் கொண்டது என்று நிரூபிக்கும்போது "'ஓம்' என்பது ஓரக்ஷரம்" என்று ப்ரணவத்தை ஓர் அக்ஷரமாகவும், "'நம:' என்பது இரண்டக்ஷரம்" என்று நமஸ்ஸை இரண்டக்ஷரமாகவும், "'நாராயணாய' என்று ஐந்து அக்ஷரங்கள்" என்று மூன்றாம் பதத்தை ஐந்து அக்ஷரமாகவும் நாராயண உபநிஷத்தில் சொல்லுகையாலே, ஸமஸ்த பதமாயிருக்கும் மூன்றாம் பதமான நாராயண பதத்தை "நார" "அயந" என்று பிரித்து ஆறு

அக்ஷரமாக்கி ப்ரணவமில்லாமலே சிலர் எட்டெழுத்தாகக் கணக்கிடுவது வேதத்தோடு முரண்பட்டதாகையாலே ஆதரிக்கத் தக்கதன்று.

இம்மந்திரத்தில் மூன்று பத$_3$ங்களும் எவ்வளவு அர்த்தங்களைச் சொல்லுகின்றன என்னும் கேள்வியெழ, அடுத்த சூர்ணையில் பதிலளிக்கிறார்.

ஸூ. 29. மூன்று பத$_3$மும் மூன்று அர்த்த$_2$த்தைச் சொல்லுகிறது.

விவரணம்: அதாவது—மூன்று பதங்களும் தனித்தனியாக மூன்று அர்த்த$_2$ங்களைச் சொல்லுகின்றன என்று கருத்து.

அந்த அர்த்த$_2$ங்கள் யாவை என்பதைத் தெளிவாக அருளிச் செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

ஸூ. 30. அதாவது—சேஷத்வமும், பாரதந்த்ர்யமும், கைங்கர்யமும்.

விவரணம்: முதல் பதமான ப்ரணவம் அவனுக்கே அடிமைப்பட்டிருக்கையாகிற சேஷத்வத்தையும், இரண்டாம் பதமான நம:பதம் அவனிட்டவழக்காயிருக்கையாகிற பாரதந்த்ரியத்தையும், மூன்றாவதான 'நாராயணாய' பதம் கைங்கர்யத்தையும் சொல்லுகிறது. 26வது சூர்ணையில் முதல் யோஜனையை ஒட்டியது இச்சூர்ணை.

இந்த மூன்று பத$_3$த்திலும் முதல் பதம் யாது என்னும் கேள்விக்கு அடுத்த சூர்ணையில் பதிலளிக்கிறார்.

ஸூ. 31. இதில் முதல் பத$_3$ம் ப்ரணவம்.

விவரணம்: பக்கம் 35ல் எடுத்த ப்ரமாணத்தில் "முதலில் ஓம் என்று ஓதவேண்டும்" என்ற வேதவாக்கியமே ப்ரணவத்தை முதல் பதமாகச் சொல்கிறது.

ப்ரணவாத்$_3$யாம் நமோமத்$_4$யாம் நாராயணபதா$_3$ந்திமாம் |
மந்த்ரமஷ்டாக்ஷரம் வித்$_3$யாத் ஸர்வஸித்$_3$தி$_4$கரம் ந்ருணாம் ||

[ஓங்காரத்தை முதற்பதமாகவும், நமஸ்ஸப்$_3$தத்தை நடுப்பத$_3$மாகவும், நாராயண பத$_3$த்தைக் கடைசியிலும் கொண்டதே அஷ்டாக்ஷரமென்று அறியக்கடவன்; இது மனிதர்களுக்கு எல்லா ஸித்$_3$தி$_4$களையும் அளிப்பது] என்று ஸ்ம்ருதியும் இப்படியே சொல்லுகிறது.

இனி, 74வது சூர்ணிகைவரையில் ப்ரணவத்தின் பொருளை அருளிச்செய்வதாகத் திருவுள்ளம்பற்றி ப்ரணவம் மூன்று எழுத்துக்கள் கொண்டது என்று அடுத்த சூர்ணிகையில் அருளிச்செய்கிறார்.

**சூ 82. இது "அ" என்றும் "உ" என்றும் "ம" என்றும் மூன்று திருவக்ஷரம்.**

**விவரணம்:** இந்த ப்ரணவம் பிரித்துப் பார்க்கும்போது 'அ, உ, ம' என்று மூன்று அக்ஷரமாய், மூன்று பதமாய், மூன்று பொருள்களைச் சொல்லுவதாயும், சேர்த்துப் பார்க்கும்போது ஓர் அக்ஷரமாய் ஒரு பதமாய் ஒரு பொருளைச்சொல்லுவதாயும் இருக்கிறதன்றோ.

பிரிந்திருக்கும் நிலையில் இந்த மூன்று எழுத்துக்கள் எப்படி உண்டாயின என்பதை ஒரு த்ருஷ்டாந்தம் காட்டி விளக்குகிறார் அடுத்த சூர்ணிகையில்.

**சூ 83: மூன்று தாழியிலே தயிரை நிறைத்துக் கடைந்து வெண்ணெய் திரட்டினாற்போலே மூன்று வேதத்திலும் மூன்று அக்ஷரத்தையும் எடுத்தது.**

**விவரணம்:**

பூ4ரிதி ருக்3வேதா3த3ஜாயத| பு4வ இதி யஜுர்வேதா3த்|
ஸுவரிதி ஸாமவேதா3த் | தானி ஶுக்ராண்யப்4யதபத் |
தேப்4யோऽபி4தப்தேப்4யஸ் த்ரயோ வர்ணா அஜாயந்த |
அகார உகார மகார இதி | தானேகதா4 ஸமப4ரத் |
ததே3ததோ3மிதி ||

[அத2ர்வவேத3ம் கோ3பத2ப்3ராஹ்மணம் பூர்வபா4க3ம்
ப்ரபா 1. ப்3ராஹ்மணம் 6]

['பூ4:' என்பது ருக்3வேத3ஸாரமாக உண்டாயிற்று; 'பு4வ:' என்பது யஜுர்வேத3ஸாரமாக உண்டாயிற்று; 'ஸுவ:' என்பது ஸாமவேத3ஸாரமாக உண்டாயிற்று; 'பூ4: பு4வ: ஸுவ:' என்னும் மூன்று வ்யாஹ்ருதிகளாகிற அந்தப் பரிசுத்தமான பொற்கட்டிகளை உருக்கினான் ப்ரஜாபதி; உருக்கின அவற்றிலிருந்து (அவற்றின ஸாரமான) 'அ உ ம' என்னும் எழுத்துக்கள் உண்டாயின.

அவற்றை ஒன்று கூட்டினான். அதுதான் இந்த ஓங்காரமாயிற்று.]
என்று அதர்வவேதத்திலும்,

அகாரஞ்சாப்யுகாரஞ்ச மகாரஞ்ச ப்ரஜாபதி: ।
வேதத்ரயாந் நிரப்ருஹத் பூர்புவஸ் ஸுவரிதி ச ॥

[மநு 2-76]

[பிரஜாபதி மூன்று வேதங்களிலிருந்து (அவற்றின் ஸாரமான) பூ: புவ: ஸுவ: என்னும் மூன்று வ்யாஹ்ருதிகளையும் (அவற்றின் ஸாரமான) 'அ உ ம' என்னும் எழுத்துக்களையும் எடுத்தான்] என்று மநு ஸ்ம்ருதியிலும் சொல்லுகிறபடியே. ருக்வேதம், யஜுர் வேதம், ஸாமவேதம் எனும் மூன்று வேதங்களிலிருந்தும் முறையே 'பூ: புவ: ஸுவ:' என்னும் மூன்று வ்யாஹ்ருதிகளையும் உண்டாக்கி, பொன்னைத் தூய்மைப்படுத்துவதற்காக உருக்கி ஓடவைப்பதுபோலே இந்த மூன்று வ்யாஹ்ருதிகளையும் தன் ஸங்கல்பத்தாலே ஓடவைத்து, அவற்றிலிருந்து முறையே அகாரம் மகாரம்.உகாரம் என்னும் மூன்று எழுத்துக்களும் படிப்படியாக உண்டாகும்படி பண்ணி, இப்படி ஸர்வேச்வரன் மூன்று வேதங்களின் ஸாரத்தைத் திரட்டியதைத் திருவுள்ளம் பற்றி மூன்று பாத்திரங்களிலும் உள்ள தயிரைத் தனித்தனியே கடைந்து அவற்றின் ஸாரமான வெண்ணெயை எடுத்து ஒன்று கூட்டுவதுபோலே (மூன்று வேதத்திலும் மூன்று அக்ஷரங்களையும் எடுத்தது) என்கிறார்.

முந்திய சூர்ணையால் தேறும அர்த்தத்தை அடுத்த சூர்ணையில் அருளிச்செய்கிறார்.

சூ 34: ஆகையால் இது ஸகல வேதஸாரம்.

விவரணம்: இந்த மூன்று எழுத்துகளும், ஒவ்வொரு வேதத்தின் ஸாரமாகத் திரட்டப்பட்டவையாகையாலே இந்த மூன்று எழுத்துக்களும் சேர்ந்த ப்ரணவம் எல்லாவேதங்களுக்கும் ஸாரம் என்று கருத்து.

ஆக 26 வது சூர்ணையிலிருந்து இதுவரையில் சொல்லப்பட்ட விஷயங்களாவன:— (1) 26 வது 27 வது சூர்ணைகளில் திருமந்த்ரத்தின் வாக்யார்த்தமும் (2) 28 வது சூர்ணையில் இம்மந்த்ரத்தின் அக்ஷர எண்ணிக்கையும், 'பத' எண்ணிக்கையும் (3) 29, 30 சூர்ணைகளில் திருமந்திரத்தின் மூன்று பதங்களும் மூன்று பொருள்களைச் சொல்லுகின்றன என்பதும். (4) மூன்று பதங்களில் முதல்

பதம் இன்னது என்பதும், (5) 32வது சூர்ணையில் அந்த முதல் பதம் மூன்று எழுத்துக்கள் கொண்டதாயிருக்கும் என்பதும், (6) 33, 34 சூர்ணைகளில், அந்த மூன்று எழுத்துக்களும் மூன்று வேதங்களின் ஸாரமாக உண்டானவையாகையாலே அவ்வெழுத்துக்களின் சேர்த்தியான ப்ரணவம் எல்லா வேதங்களின் ஸாரம் என்பதும் சொல்லப்பட்டது.

இனி இந்த ப்ரணவத்தின் மூன்று எழுத்துக்களுக்கும் ஒன்றன்பின் ஒன்றாகப் பொருள் அருளிச்செய்வதாகத் திருவுள்ளம்பற்றி முதலில் முதல் எழுத்தான 'அ' காரத்தின் அர்த்தத்தை அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

மூ 35: இதில் அகாரம் — ஸகல ஶப்3த3த்துக்கும் காரணமாய், நாராயண பத3த்துக்கு ஸங்க்3ரஹமாய் இருக்கையாலே ஸகல ஜக3த்துக்கும் காரணமாய் ஸர்வரக்ஷகனான எம்பெருமானைச் சொல்லுகிறது.

விவரணம்: அதாவது—ப்ரணவத்தில் அடங்கிய இந்தமூன்று எழுத்துக்களுக்குள் முதல் எழுத்தான அகாரம் எல்லாச் சொற்களுக்கும் காரணமாயிருக்கிறது, எப்படியெனில்;

நாமரூபஞ்ச பூ4தாநாம் க்ருத்யாநாஞ்ச ப்ரபஞ்சநம் |
வேத3ஶப்3தே3ப்4ய ஏவாதௌ3 தே3வாதீ3நாம் சகார ஸ:||
[வி பு 1-5-63]

[ஸ்ருஷ்டிகாலத்தில் தே3வ மநுஷ்ய திர்யக் ஸ்தா2வரங்களாகிற நாலுவகை யோனிகளிற் பிறந்த ஜீவராசிகளுக்கும் நாமரூபங்களையும் தொழில் முறைகளையும் வேதஶப்3த3ங்களிலிருந்தே ப்ரஜாபதி படைத்தான்] என்கிறபடியே உலகில் வழங்கும் எல்லாச் சொற்களுக்கும் வேதம் காரணம் என்று விளங்குகிறது.

ப்ரணவாத்3யாஸ் ததா2 வேதா3: ப்ரணவே பர்யவஸ்தி2தா:||
வாங்மய ப்ரணவஸ் ஸர்வம் தஸ்மாத் ப்ரணவமப்4யஸேத்||
[லக்4வத்ரிஸ்ம்ருதி 1-9]

[எல்லா வேதங்களும் ப்ரணவத்தை முதலிற்கொண்டவை; ப்ரணவத்தில் முடிகின்றன. எல்லாச் சொற்களும் ப்ரணவமாயிருக்கும்; ஆகையால் ப்ரணவத்தைக் கற்கவேண்டும்.]

விநிர்ஜக்⁴முர் முகே²ப்⁴யஸ்து ப்³ரஹ்மணோऽவ்யக்தஜந்மந:।
ஓங்காரப்ரப⁴வா வேதா³: ஜக்⁴முஸ்தே ச ரஸாதலம் ॥
[விஷ்ணுத⁴ர்மம் 67-6]

[காரணபரிய நாராயணனிடமிருந்து பிறந்த பிரமனின் நாலு முகங்களிலிருந்து ஓங்காரத்தைக் காரணமாகக்கொண்ட நான்கு வேதங்களும் தோன்றின. (பிறகு) அவை ரஸாதலத்தை அடைந்தன.] முதலான ப்ரமாணங்களின்படியே வேதங்களுக்கு ப்ரணவமாகிற ஓங்காரம் காரணமாகிறது.

யத்³வேதா³தௌ³ ஸ்வர: ப்ரோக்தோ வேதா³ந்தே ச ப்ரதிஷ்டி²த: ।
தஸ்ய ப்ரக்ருதிலீநஸ்ய ய: பர: ஸ மஹேஶ்வர: ॥
[தை-நா 10 — 24]

[யாதொரு ஸ்வரமாகிய ஓங்காரம் வேதத்தின் முதலில் ஓதப் படுகிறதோ, வேதத்தின் முடிவிலும் நிலைநிற்கிறதோ, தன் காரணத்தில் (அகாரத்தில்) அடங்கிய அந்த ஓங்காரத்திற்குப் பொருளாயிருப்பவனே மஹேஶ்வரன்] என்கிற ப்ரமாணத்தின்படி அந்த ப்ரணவத்திற்கு அதிலுள்ள முதல் எழுத்தான அகாரம் காரணமாயிருக்கிறது. இப்படி அகாரம் எல்லாச் சொற்களுக்கும் காரணமாயிருக்கும் விஷயம்

அகாரோ வை ஸர்வா வாக் [ஐதரேயம்]
[எல்லா வார்த்தையும் 'அ' என்னும் எழுத்தேயாம். (அதன் விகாரமாம் என்றபடி)]

ஸமஸ்த ஶப்³த³மூலத்வாத³காரஸ்ய ஸ்வபா⁴வத: ।
ஸமஸ்தவாச்ய மூலத்வாத் ப்³ரஹ்மணோऽபி ஸ்வபா⁴வத: ।
வாச்யவாசக ஸம்ப³ந்த⁴ஸ் தயோரர்த்தா²த் ப்ரதீயதே ॥
[வாமநம்]

[இயல்வாகவே அகாரம் எல்லாச்சொற்களுக்கும் மூலகாரணமாயிருக்கையாலும், இயல்வாகவே பரம்பொருளும் எல்லாப் பொருள்களுக்கும் மூலகாரணமாயிருக்கையாலும், அவ்வகாரத்திற்கும், அப்பரம்பொருளுக்கும் சொல்லும் (அதன்) பொருளுமாயிருக்கும் ஸம்பந்தம் சொற்பொருள் தன்மையால் தோன்றுகிறது.] என்கிற ப்ரமாணங்களில் சொல்லப்பட்டது. இப்படி எல்லாச்சொற்களுக்கும் காரணமாய், எம்பெருமான் எல்லாப் பொருள்களையும் சரீரமாகக்

கொண்டு அனைத்தையும் ரக்ஷிப்பவனும் பிருக்கைகளைச் சொல்லும் நாராயணபதத்திற்குச் சுருக்கமாயிருக்கையாலே

யதோ வா இமானி பூதானி ஜாயந்தே | யேந ஜாதாநி ஜீவந்தி |

யத்ப்ரயந்த்யபிஸம்விசந்தி | தத்விஜிஜ்ஞாஸஸ்வ தத் ப்ரஹ்மேதி || [தை ப்ருகு 1-1]

[இந்தப் பொருள்கள் யாதொன்றினிடமிருந்து தோன்றுகின்றனவோ, தோன்றியவை யாதொன்றினால் வாழ்கின்றனவோ, அழியும்போது யாதொன்றை அடைகின்றனவோ அதுவே ப்ரஹ்மமாகையால் அதை அறிவாய்.]

ஸ ஏவ ஸ்ருஜ்ய: ஸ ச ஸர்க்ககர்த்தா
ஸ ஏவ பாத்யத்தி ச பால்யதே ச |
ப்ரஹ்மாத்யவஸ்தாபிரசேஷமூர்த்திர்
விஷ்ணுர் வரிஷ்டோ வரதோ வரேண்ய: ||

[வி பு 1-2-70]

[ஸ்ருஷ்டிக்கப்படுமவனும் விஷ்ணுவே; ஸ்ருஷ்டியைச் செய்பவனும் அவனே; அவனே (இவற்றைக்) காப்பாற்றுகிறான். அவனே (ப்ரளயகாலத்தில் இவற்றை) உண்கின்றான். அவனே காப்பாற்றவும் படுகிறான். (உண்ணவும் படுகிறான்). மிகச் சிறந்தவனும், வரமளிப்பவனும், வரிக்கப்படுபவனுமான விஷ்ணுவே பிரமன் முதலான நிலைகளாலே எல்லா உலகையும் ஶரீரமாகக்கொண்டிருக்கிறான்.] முதலான ப்ரமாணங்களில் சொல்லுகிறபடியே எல்லாவுலகிற்கும் காரணமாய், அனைத்துக்கும் ரக்ஷகனுமிருக்கும் எம்பெருமானைச்சொல்லுகிறது அகாரம் என்று கருத்து. "அகரமுதல எழுத்தெல்லாம் ஆதிபகவன் முதற்றேஉலகு" [திருக்குறள் 1] என்று திருக்குறளும் தொடங்கும்போதே இவ்வர்த்தத்தைத் தெளிவாகப் பேசிற்று. சொற்களுக்குக்காரணமாயிருக்கையால் பொருள்களுக்குக் காரணமான ஸர்வேஶ்வரனைச் சொல்வதையிட்டு இந்த அகாரத்தில் காரணத்வம் சொல்லப்படுகிறது.

'அவ ரக்ஷணே' என்னும் தாதுவிலிருந்து இவ்வகாரம்தோன்றுகையாலே இதில் ரக்ஷகத்வமும் சொல்லப்படுகிறது. 'நார' ஶப்தத்தால் சொல்லப்படும் எல்லாப் பொருள்களையும் வியாபிப்பவனுயும்

அவற்றுக்கு ஆதாரமாயும் இருப்பவன் என்று சொல்லுகையாலே 'நாராயண' சப்தத்திலும் காரணத்வம் சொல்லப்படுகிறது. 'நார' ஶப்தத்தால் சொல்லப்படும் எல்லா ஜீவர்களுக்கும் ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் இருப்பவன் என்றும் நாராயண ஶப்தம் கூறுகையாலே அது ரக்ஷகத்வத்தையும் சொல்லுகிறது. அந்த 'நாராயண' பதத்திற்கு ஸங்க்ரஹமாயிருக்கையாலே இந்த 'அ'காரமும் காரணத்வத்தையும் ரக்ஷகத்வத்தையும் சொல்லுகிறது என்பது தன்னடையே தேறும்.

"ரக்ஷிக்கை என்பது என்ன" என்னும் கேள்வியெழ, அடுத்த சூர்ணையில் பதில் அருளிச்செய்கிறார்.

மூ 36: ரக்ஷிக்கையாவது-விரோதியைப் போக்குகையும் அபேக்ஷிதத்தைக் கொடுக்கையும்.

விவரணம்: அதாவது — ரக்ஷிக்கையாவது — சேதனர்களுக்கு வரும் அநிஷ்டங்களை (விரும்பத்தகாதவைகளை)ப் போக்குகையும் இஷ்டங்களை அடைவிக்கையுமாக இரு வகையாயிருக்கும். ஈஶ்வரன் ஜீவர்களை ரக்ஷிக்கையாவது — அவர்களுக்குத் துன்பத்தை அளிக்கும் விரோதியைப் போக்குகையும், இன்பத்தை அளிக்கும் விருப்பங்களைக் கொடுக்கையுமாகும் என்று கருத்து.

"ஜீவர்களுக்கு எம்பெருமான் போக்கும் விரோதி எது? கொடுக்கும் விரும்பத்தக்கது எது?" என்னும் கேள்வியெழ, அடுத்த சூர்ணையில் பதில் அருளிச்செய்கிறார்.

மூ 37: இவையிரண்டும் சேதநர் நின்ற நின்ற அளவுக்கு ஈடாயிருக்கும்.

விவரணம்: "சேதநர் நின்ற நின்ற அளவுக்கு ஈடாயிருக்கும்" என்றது அவரவர் விருப்பத்தையும் தகுதியையும் ஒட்டியிருக்கும் என்றபடி.

இதைத் தெளிவாக அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

மூ 38: ஸம்ஸாரிகளுக்கு விரோதி-ஶத்ரு பீடாதிகள். அபேக்ஷிதம் — அந்நபாநாதிகள்; முமுக்ஷுக்களுக்கு விரோதி-ஸம்ஸார ஸம்பந்தம், அபேக்ஷி

ஷம்—பரமபத ப்ராப்தி: முக்தர்க்கும் நித்யர்க்கும் விரோதி4-கைங்கர்யஹாநி அபேக்ஷிதம் கைங்கர்ய வ்ருத்3தி4.

விவரணம்: அதாவது—"தே3ஹத்தையே ஆத்மாவாக எண்ணு வதையும், தே3ஹத்தோடு தொடர்புடைய பொருள்களில் பற்றையும் ஶப்3தா3தி3 விஷயங்களில் அனுப4வத்தையும் போது போக்காகக் கொண்ட ஸம்ஸாரிகளுக்குப் போக்கவேண்டிய விரோதி4—எதிரிகளால் வரும் நலிவு முதலானவை, அவர்களுக்கு அடையத்தக்கதாய் (விரும்பப்படுவதாய்) இருப்பது சோறு தண்ணீர் முதலானவை" என்பது முதல் இரண்டு வாக்கியங்களுக்குக் கருத்து. முதல் வாக்யத்தில் 'ஶத்ரு பீடா3தி3கள்' என்கிற விடத்தில் 'ஆதி3' ஶப்3த3த்தாலே மனநோயாகிற 'ஆதி4', உடல் நோயாகிற 'வியாதி' முதலானவற்றாலே வரும் துன்பங்களைச் சொல்லுகிறது. 'அந்நபாநாதி3கள்' என்கிற விடத்தில் 'ஆதி3' ஶப்3த3த்தாலே, மாலை, வஸ்திரம், ஆபரணம், சந்தனம் முதலான உடற் பூச்சுக்கள், ஸ்திரீகளை அணைப்பது முதலானவற்றைச் சொல்லுகிறது.

"முமுக்ஷுக்களுக்கு" என்று தொடங்கும் இரு வாக்யங்களின் கருத்து பின்வருமாறு:— இவ்வுலக வாழ்க்கையில் வெறுப்பு விளைந்து பரமபத3த்திற்குச் செல்ல விரும்பும் முமுக்ஷுக்களுக்கு (மோக்ஷத்தில் ஆசையுடையவர்களுக்கு)ப் போக்கவேண்டிய விரோதி4—"பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கும் அழுக் குடம்பும்" [திருவிருத்தம் 1] என்று சொல்லப்படும் இவ்வுலகில் இருக்கையாகிற ஸம்ஸாரஸம்ப3ந்த4ம். அடையத்தக்க ப்ராப்யம்-எம்பெருமானை அனுபவித்துக் கைங்கர்யம் செய்வதற்கு உறுப்பாகப் பரமபதத்தை அடைகை என்றபடி.

"முக்தர்க்கும்" என்று தொடங்கும் இரு வாக்கியங்களுக்குக் கருத்து பின்வருமாறு:— ஒருகாலத்தில் ஸம்ஸாரத் தொடர்பு இருந்து அது நீங்கப்பெற்று ப4க3வத3நுபவம் செய்யும் முக்தர்களுக்கும், ஸம்ஸாரத்தொடர்பின் வாஸனையும் இல்லாமல் எம்பெருமானை அனுபவிப்பதால் உண்டான உகப்பாலே செய்யப் படும் கைங்கர்யத்திலேயே ஈடுபடும் நித்யர்களுக்கும் விரோதி4-ஸ்வரூபத்துக்குத்தக்க சேஷியான ஸர்வேஶ்வரன் திருவடிகளிலே ஸ்வரூபாநுரூபமாகச் செய்யும் கைங்கர்யத்திற்கு வரும் இடை

வெளி; அவர்களுக்கு வேண்டுவது-மேன்மேலும் அடிமை செய்வதாகிற கைங்கர்யத்தின் வளர்ச்சி என்றபடி.

ஆக, இவ்வண்ணமாக அவரவர் விருப்பத்திற்கும் தகுதிக்கும் தக்கபடி விரோதியைப்போக்கி அபேக்ஷிதத்தைக் கொடுக்கையால் ஈஶ்வரனே அனைவரையும் ரக்ஷிப்பவன் என்னும் விஷயத்தை விளக்கியதாயிற்று.

"இவ்வண்ணமாக ஈஶ்வரனே அனைவரையும் ரக்ஷிப்பவன் என்று சொல்லுவது பொருந்தவில்லையே. உலகில் தாய் தந்தை தொடக்கமாக மற்ற தெய்வங்கள் ஈருகப் பலரும் ரக்ஷகர்களாய் இருக்கிறார்களே" என்னும் கேள்வியெழ, அதற்குப் பதில் கூறுகிறார் அடுத்த சூர்ணையில்.

**ஸூ 39: 'ஈஶ்வரனையொழிந்தவர்கள் ரக்ஷகரல்லர்' என்னுமிடம் ப்ரபந்ந பரித்ராணத்திலே சொன்னோம்,**

விவரணம்: அதாவது—இயற்கையான உறவினனாய், எல்லாக்காலத்திலும் அனைவரையும் ரக்ஷித்துக்கொண்டிருக்கும் ஸர்வேஶ்வரனைத்தவிர, கர்மம் காரணமாகச் செயற்கை உறவினராயிருக்கும் தாய் தந்தை முதலான மற்றவர்களும், மோக்ஷம் கொடுக்க வல்லமையற்ற மற்ற தெய்வங்களும் ரக்ஷிப்பவரல்லர் என்னும் விஷயத்தைப் பிரமாணம் காட்டி, "ப்ரபந்ந பரித்ராணம்" என்னும் எம்முடைய கிரந்தத்திலே சொன்னோம். அதிலே கண்டுகொள்ளலாம் என்று கருத்து. (இந்நூல் அஷ்டாதஶரஹஸ்யத்தில் ஒன்று.)

அடுத்தபடியாக, தாத்பர்ய பலத்தாலே இந்த அகாரத்தில் எம்பெருமான் திருவின் நாயகனாகவே சொல்லப்படுகிறான் என்னும் விஷயத்தை அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

**ஸூ 40: ரக்ஷிக்கும்போது பிராட்டி ஸந்நிதி4 வேண்டுகையாலே, இதிலே ஶ்ரீ ஸம்ப3ந்த4மும் அநுஸந்தே4யம்,**

விவரணம்: அதாவது—

ஶக்த்யா ஸஹ ஹ்ருஷீகேஶோ தே3வ்யா காருண்யரூபயா |
ரக்ஷகஸ் ஸர்வஸித்3தா4ந்தே வேதா3ந்தேऽபி ச கீ3யதே ||

[லக்ஷ்மீதந்த்ரம் 28 14]

[கருணையே வடிவெடுத்தவளான லக்ஷ்மீதே₃வியோடு கூடிய இருடீகேசனே (பாஞ்சராத்திரத்திலுள்ள மந்த்ர ஆக₃ம தந்த்ர தந்த்ராந்தரங்களெனப்படும்) எல்லா ஸித்₃தா₄ந்தங்களிலும் வேதா₃ந்தங்களிலும் ரக்ஷகனாகக் கூறப்படுகிறான்.] என்று லக்ஷ்மீதந்த்ரத்தில் சொல்லியபடியே ரக்ஷகனான எம்பெருமான் ஜீவர்களை ரக்ஷிக்கும்போது அவர்களுடைய குற்றங்களைக் கண்டோ, தனது ஸ்வாதந்த்ரியத்தாலோ அவர்களை ஒதுக்காமலிருப்பதற்கு உறுப்பாக எம்பெருமானுடைய கிருபையைத் தூண்டிவிடும் புருஷகாரமாய் இருக்கும் பிராட்டியின் சேர்த்தி அவசியம் வேண்டியதாகையாலே, ரக்ஷகனான எம்பெருமானைச் சொல்லுகிற 'அ' என்னும் எழுத்தில் அவனுக்கு லக்ஷ்மியோடு உள்ள தொடர்பும் அநுஸந்திக்கத்தக்கது. மூலத்தில் 'லக்ஷ்மீ' என்னும் பதத்தைவிடாமல் 'ஸ்ரீ' என்னும் பதத்தைவிட்டது—

ஶ்ரயத இதி ஸ்ரீ: [ஸ்ரீஶப்₃த₃வ்யுத்பத்தி]

[எம்பெருமானை (எப்போதும்) ஆஶ்ரயித்திருக்கிறாளாகையால் 'ஸ்ரீ' எனப்படுகிறாள்.] என்கிறபடியே அவனை எப்போதும் ஆஶ்ரயித்திருப்பவளாகையாலே அவனோடு இவளுக்கு உண்டான பிரிக்கமுடியாத சேர்த்தியும்

ஸ்ரீயத இதி ஸ்ரீ: [ஸ்ரீஶப்₃த₃வ்யுத்பத்தி]

[(அனைவராலும்) ஆஶ்ரயிக்கப்படுகிறாளாகையால் 'ஸ்ரீ' எனப்படுகிறாள்.] என்கிறபடியே ஜீவர்கள் எப்போதும் இவளை ஆஶ்ரயித்திருப்பார்கள் என்பதும் விளங்குகைக்காக அந்த ஸ்ரீஶப்₃த₃ம் பலவ்யுத்பத்திகளாலே பிராட்டியின் புருஷகாரத்வத்தைக் காட்டுகிறதன்றோ.

மேலும் இந்த 'அ' என்னும் எழுத்தில் எம்பெருமானுக்கு ஸ்ரீதே₃வியோடு உள்ள சேர்த்தி தவறுமல் தோற்றும் என்னும் விஷயத்தை உள்ளதை உள்ளபடி உரைக்கும் பெரியவர் ஒருவருடைய வார்த்தையைக் கொண்டு மூதலிக்கிறார் அடுத்த சூர்ணையில்.

மூ 41: அத்ர பூ₄ர்வாத் ஸேநாபதிமிஶ்ரர் வாக்யம்:— அரங்கர் மார்பு விட்டுப்பிரியில் இவ்வக்ஷரம் விட்டுப்பிரிவது

விவரணம்: அதாவது—இவ்விடத்தில் அறிவிற் சிறந்தவரான ஸ்ரீ ஸேநாபதி ஜீயர் அருளிச்செய்யும், "'அகலகில்லேன் இறையும்' [திருவாய் 6-10-10] என்று அவன் திருமார்பிலே நித்யவாஸம் பண்ணும் இவள் அந்த மார்பைவிட்டுப் பிரிந்தால்தான் அவனைச் சொல்லும் இவ்வக்ஷரத்தைவிட்டுப் பிரிவாள்" என்னும் வாக்கியம் அநுஸந்திக்கத்தக்கது. மூலத்தில் கடைசியில் 'என்று' என்னும் பதத்தைச் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

இப்படிக் கூறியதால் அவன் திருமார்பில் சேர்த்தி இவளுக்கு என்றுமிருப்பதாகையாலே அவன் தோற்றுமிடத்தில் இவளும் தோற்றுகை உறுதியானதாகையாலே, அவன் திருமார்பில் சேர்த்திபோலே அவனைச் சொல்லும் அகாரத்தில் சேர்த்தியும் இவளுக்கு எப்போதும் உள்ளது என்று அருளிச்செய்தாராயிற்று. இவ்விடத்தில், "'ஶ்ரிய: பதி:' என்கிறபடியே பிராட்டி பகவத் ஸ்வரூப நிரூபகையாகையாலே......லக்ஷ்மீஸம்பந்தமும் ஆர்த்தமாக இவ்விடத்தில் சொல்லிற்றாயிற்று" என்று பரந்த ரஹஸ்யத்தில் பெரியவாச்சான்பிள்ளை அருளியதும் இங்கு அநுஸந்திக்கத் தக்கது.

மேலும் இவ்வர்த்தத்தை உறுதிப்படுத்துவதற்காக, ஈஶ்வரனைக் குறிக்கும் 'அ' என்னும் எழுத்திலும், ஜீவனைக் குறிக்கும் 'ம' என்னும் எழுத்திலும் இவளுக்கு எப்போதும் உள்ள சேர்த்தியை, ஒரு த்ருஷ்டாந்தம் காட்டி அருளிச் செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

மூ 42: பர்த்தாவினுடைய படுக்கையையும் ப்ரஜையினுடைய தொட்டிலையும் விடாதேயிருக்கும் மாதாவைப்போலே ப்ரதமசரம பதங்களை விடாதேயிருக்கும் இருப்பு.

விவரணம்: அதாவது— கணவனுக்கு அடிமைப்பட்டிருக்கும் தன் ஸ்வரூபத்திற்குப் பொருந்தும்படி அவனைத் தன் அழகை அனுபவிக்கச் செய்வதற்காக அவனுடைய படுக்கையையும் விடாமல், குழந்தையை ரக்ஷிப்பவளான தன் ஸ்வரூபத்திற்குப் பொருந்தும்படி அதை ரக்ஷிப்பதற்காக அக்குழந்தையின் தொட்டிலையும் விடாதேயிருக்கும் தாயைப்போலே, ஸர்வலோகமாதாவான இப்பிராட்டியும், தன் பர்த்தாவான ஈஶ்வரனைச் சொல்லும் முதல் எழுத்தான அகாரத்தையும், தன் குழந்தைகளான ஜீவர்களைச் சொல்

லும் மூன்றும் எழுத்தான மகாரத்தையும், அகார வாச்யனான எம்பெருமானை அநுபவிக்கைக்காகவும், மகாரவாச்யனான ஜீவனை ரக்ஷிக்கைக்காகவும் விடாதே இருக்கும் இருப்பு என்று கருத்து.

இச் சூர்ணையில் சொன்ன திருஷ்டாந்தத்தைக் குறிப்பிட்ட சிலர் விஷயமாக ஆக்கி விளக்குகிறார் அடுத்த சூர்ணையில்.

**மூ 43: ஸ்ரீநந்தகோபரையும் க்ருஷ்ணனையும் விடாத யசோதைப் பிராட்டியைப்போலே.**

விவரணம்: அதாவது—மனைவியான தன் ஸ்வரூபத்துக்குத் தக்கபடி அனுபவிக்கைக்காகக் கணவனான ஸ்ரீநந்தகோபரையும், தாயான தன் ஸ்வரூபத்துக்குத் தக்கபடி ரக்ஷிப்பதற்காகப் பிள்ளையான கிருஷ்ணனையும் விடாமல் "அம்பரமே" [திருப்பாவை 17] என்கிறபாட்டில் சொல்லுகிறபடியே நடுவிலே இருக்கும் யசோதைப் பிராட்டியைப்போலே முதல் மூன்றும் எழுத்துக்களால் சொல்லப் படும் ஈஸ்வர ஜீவர்கள் இருவரையும் விடாமல் இவளும் ப்ரணவத்தில் அவ்வெழுத்துக்களில் அனுஸந்திக்கப்படுகிறாள் என்று கருத்து

"'அகாரவாச்யனுக்கே அடிமைப்பட்டவன் மகாரவாச்யனான ஜீவன்' என்று சொல்லும் இப்பிரணவத்தில், ஜீவன் ஈஸ்வரனுக்கு அடிமைப்பட்டிருப்பதாகக் கூறியிருக்கிறதேயொழிய, பிராட்டிக்கு அடிமைப்பட்டதாகக் கூறவில்லையே. அப்படி இருக்கும்போது அகாரத்தில் எம்பெருமானுக்கு இவளுடைய ஸம்பந்தத்தை அநுஸந்திப்பதால் மாத்திரம் ஜீவன் இவளுக்கும் அடிமைப்பட்டவன் என்று எப்படித் தேறும்?' என்னும் கேள்வியெழ, அடுத்த சூர்ணையில் பதில் அருளிச்செய்கிறார்.

**மூ 44: ஒருவனடிமைகொள்ளும்போது க்ருஹிணிக்கென்றன்றே ஆவணவோலை எழுதுவது. ஆகிலும், பணிசெய்வது க்ருஹிணிக்கிறே; அதுபோலே நாம் பிராட்டிக்கு அடிமையாயிருக்கும்படி**

விவரணம்:—அதாவது—உலகத்தில் ஒருவன் வேலைக்காரர்களையும், வேலைக்காரிகளையும் அடிமையாகக் கொள்ளும்போது அடிமைப் பத்திரத்தில் தனக்கடிமையாக எழுதிக்கொள்ளுவானேயொழிய, தன் மனைவிக்கும் அடிமை என்று எழுதிக்கொள்வதில்லை. ஆனபோதிலும், வேலையாள் யஜமானனின் மனைவிக்கே

மிகுதியாக அடிமைத்தொழில் செய்யவேண்டியிருக்கும். அது போலவே ஈச்வரனுக்கு அடிமைப்பட்டவன் ஜீவன் என்று ப்ரணவத்தில் இந்த ஆகாரம் சொன்னதாகிலும், ஜீவர்களாகிய நாம பிராட்டிக்கும் அடிமை என்பது தன்னடையே தேறுகிறது என்று கருத்து.

இதுவரையில் சொன்ன எல்லாக் காரணங்களாலும் ஈச்வரனுக்கும், பிராட்டிக்கும் எல்லா நிலையிலும் பிரிவில்லாமையை அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

மூ. 45 ஆக, பிரிந்து நிலையில்லை.

விவரணம்: ஆக, எம்பெருமான் மோக்ஷபலத்தை அளிக்கும் ரக்ஷகனாகும்போது பிராட்டி புருஷகாரமாயிருந்து ரக்ஷிக்கிறானாகையாலே ரக்ஷிக்கும் நிலையிலும் இருவரும் பிரிந்திருப்பதில்லை என்று கருத்து.

இப்படி எம்பெருமானும் பிராட்டியும் எந்த நிலையிலும் பிரிந்திராமலிருக்கைக்கு இரண்டு த்ருஷ்டாந்தங்கள் அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

மூ. 46 ப்ரபையையும் ப்ரபாவானையும், புஷ்பத்தையும் மணத்தையும்போலே.

விவரணம்:—அதாவது—ஒளியும், அதையுடைய விளக்கு, சூரியன் போன்ற சோதிப்பொருள்களும் ஒன்றைவிட்டு ஒன்று பிரிந்திராதாப்போலவும், பூவும் அதனுடைய மணமும் ஒன்றைவிட்டு ஒன்று பிரிந்திராதாப்போலவும் எம்பெருமானும் பிராட்டியும் ஒருவரைவிட்டு ஒருவர் பிரிந்திரார்கள் என்று கருத்து.

அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா

ரா-ஸு 21-16

[சூரியனைவிட்டுப் பிரியாத ஒளிபோலே நான் ஸ்ரீராமபிரானைவிட்டுப் பிரியாமலிருப்பவள்] என்று பிராட்டியும்

அநந்யா ஹி மயா ஸீதா பாஸ்கரேண ப்ரபா யதா

ரா-யு 121-19

[சூரியனைவிட்டுப் பிரியாத ஒளிபோல, சீதை என்னைவிட்டுப் பிரியாமலிருப்பவள்] என்று பெருமாளும் ஸூர்யனையும் அதன் ஒளியையும்போலே தாங்கள் தனித்திருப்பதில்லையென்று ஒருபடிப்பட அருளிச்செய்தார்களன்றே.

தவ ஸ்பர்ஶாதீஶம் ஸ்ப்ருஶதி கமலே மங்கலபதம்
தவேதம் நோபாதேருபநிபதிதம் ஶ்ரீரஸி யத: |
ப்ரஸூநம் புஷ்யந்தீமபி பரிமளர்த்திம் ஜிகதிஷேர்
ந சைவந்த்வாதேவம் ஸ்வதத இதி கஶ்சித் கவயதே ||
[ஶ்ரீகுணரத்னகோஶம்-29]

[கமலையே! உன்னுடைய உறவாலே ஈஶ்வரன் மங்களம் என்ற சொல்லுக்குப் பொருளாகிறான். 'ஶ்ரீ:' என்னும் பெயரையே உடையவளாயிருப்பதால் உன்னை மங்களபதம் ஒரு காரணத்தால் குறிப்பதன்று; (இயற்கையாகவே குறிப்பது). பூவுக்குப் பெருமையளிக்கும் நறுமணச் சிறப்பைக் கவிபாட முற்பட்ட எவனும் (மணத்தாலே பூ இனியதாகிறது என்பதுபோலே). இன்னத்தாலே மணம் இனியதாகிறது என்று கவிபாடுவதில்லை.] என்கிற ஶ்லோகத்தில் ஈஶ்வரனைப் பூவினிடத்திலும், பிராட்டியை அதன் மணத்தினிடத்திலும் வைத்து பட்டர் அருளிச்செய்கையாலே பூவும் மணமும் போலே இருவரும் பிரிந்திருப்பதில்லை என்பது தன்னடையே தேறும்.

இங்கு ஒரு விஷயம் குறிக்கொள்ளத்தக்கது. இருவரும் பிரிந்திருப்பதில்லையென்று ஶாஸ்த்ரங்களிலும் பூர்வாசார்ய வசனங்களிலும் சொல்லுவது கொண்டு சிலர் பெருமாளுக்குள்ள ஈஶ்வரத்வம், பரப்ரஹ்மத்வம், உலகனைத்துக்கும் மூவகைக் காரணமாயிருக்கை முதலான பெருமைகளெல்லாம் பிராட்டிக்கும் உண்டு என்று வாதம் செய்கிறார்கள். பெருமாளும் பிராட்டியும் அருளிச்செய்த சற்றுமுன் எடுத்த பிரமாணங்கள் இரண்டிலும், இருவரும் ஒருவரை விட்டு ஒருவர் பிரிந்திருப்பதில்லை என்று சொல்லும்போது பெருமாளை ஸூர்யனின் ஸ்தானத்திலும் பிராட்டியை ஒளியின் ஸ்தானத்திலும் வைத்துப்பேசியிருப்பதைக் குறிக்கொள்ளவேண்டும். அதுபோலவே ஶ்ரீகுணரத்னகோஶ ஶ்லோகத்தில் பட்டரும் பெருமாளை மலரின் ஸ்தானத்திலும் பிராட்டியை மணத்தின் ஸ்தா

னத்திலும் வைத்துப் பேசியிருப்பதைக் கருத்தில் கொள்ள வேண்டும். ஸூர்யன் விளக்கு ரத்னம் முதலான ஒளியுடைய சோதிகளுக்கு அவற்றின் ஒளியாலேயே பெருமை என்பது உண்மையே; ஆனால் ஒளியின் ஸத்தைக்கே (Existance) அந்த ஒளியையுடைய சோதி காரணமாகும். அதுபோலவே பெருமானுக்குப் பிராட்டியாலேயே பெருமை. ஆனால் 'பிராட்டியின் ஸத்தைக்கே காரணம் பெருமான்' என்பது இந்த த்ருஷ்டாந்தங்களிலிருந்தே விளங்குகிறது. மேலும் 'ஏகமேவாத்₃விதீயம்' முதலான ஶ்ருதிகளைக்கொண்டு விசிஷ்டாத்வைத ஸ்ரீவைஷ்ணவமதத்தைச்சேர்ந்த பூர்வாசார்யர்கள் தன்னையொழிந்த அனைத்தையும் தனக்கு ப்ரகாரமாகக்கொண்ட பரம்பொருள் ஒன்றே என்று நிர்ணயித்திருக்கிறார்கள். ஆகையால் நாம் பிராட்டியைப் பெருமானுக்கு ப்ரகாரமாய், ஶரீரமாய், சேஷத்வ பாரதந்த்ர்யங்களையுடையவளாய் இருப்பவள் என்று கொண்டே தீரவேண்டும். ஸ்ரீராமாயணம் முதலான ஶாஸ்த்ரங்களும் இவ்வாறே முழங்குகின்றன. இப்படிக் கொள்ளாமல் "பிராட்டியும் பெருமானுக்குத் துல்யமான ஈஶ்வரியே, பரப்பிரம்மமே, உலகிற்கு மூவகைக் காரணமுமாயிருப்பவளே" என்று கூறினால் அது விசிஷ்டத்வைதமாகிவிடும் விசிஷ்டாத்வைதத்திற்குப் பொருந்தாது. அத்₃விதீய ஶ்ருதி, ஸ்ரீராமாயணாதி₃ ஶாஸ்த்ரங்கள் ஆகிய அனைத்துக்கும் விரோதிக்கும். இதன் விரிவை "விசிஷ்டாத்₃வைத ஸம்ரக்ஷணம்—வித்வான்களின் மனஸ்ஸாக்ஷியைக் குறித்துச் சில கேள்விகள்" முதலான கட்டுரைகள் அடங்கிய 'ஸ்ரீதத்வஸர்வஸ்வம்' என்னும் நமது நூலில் கண்டுகொள்க.

இந்த விட்டுப்பிரியாமையை அநுவாதம் செய்துகொண்டு பெருமானும் பிராட்டியுமான இச்சேர்த்தியே ஜீவர்களுக்கு உத்தேச்யமாகத் தேறினபடியை அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்,

மூ 47: ஆக, இச்சேர்த்தி உத்₃தே₃ஶ்யமாய் விட்டது.

விவரணம்: 'இச்சேர்த்தி உத்₃தே₃ஶ்யம்' என்கையாலே இவர்களைத் தனித்தனியே விரும்புவது ஏற்புடையது அன்று என்றதாகிறது. இருவரையும் பிரித்து விரும்பினால் (அங்கியான) பெருமானை விட்டுப் பிராட்டியை விரும்பிய இராவணனுக்குத் தலை போனது போலவும், (அங்கமான) பிராட்டியை விட்டுப் பெருமானை விரும்பிய சூர்ப்பணகைக்கு அங்கபங்கம் நேர்ந்தது போலவும

தீங்கே விளையும். பிராட்டியைப் புருஷகாரமாகக்கொண்டு பெருமாளைப் பற்றினால் தான் ஸ்ரீ விபீஷணாழ்வானைப் போலே வாழலாம் என்று இதிலிருந்து தேறுகிறது.

இதுவரையில் ப்ரணவத்தின் முதல் எழுத்தான அகாரத்தின் பொருள் விவரிக்கப்பட்டது; இனி இந்த அகாரத்தின் மேலே ஏறிக்கழிந்திருக்கும் வேற்றுமையின் அர்த்தத்தை அருளிச்செய்யத் தொடங்கி, முதலில் அது நாலாம் வேற்றுமை என்று குறிப்பிடுகிறார் அடுத்த சூர்ணையில்.

ஸூ 48: இதிலே, சதுர்த்தி₂ யேறிக்கழியும்,

விவரணம்: அதாவது—இந்த அகாரத்திலே நான்காம் வேற்றுமைப்புணர்ச்சி ஏற்பட்டு "ஸுபாம் ஸுலுக்" என்னும் வ்யாகரணஸூத்ரத்தாலே அது லோபமடைந்து கெட்டிருக்கிறது என்று கருத்து.

மற்ற வேற்றுமைகளிருக்கும் போது இந்த அகாரத்தில் நான்காம் வேற்றுமையே ஏறிக் கழிந்திருக்கிறது என்று கூறுவது எப்படி? என்கிற ஐயத்தை வெளிப்படுத்துகிறார் அடுத்த சூர்ணையில்.

ஸூ 49: 'சதுர்த்தி₂ யேறினபடியென்'? என்னில்—

விவரணம்: மற்ற வேற்றுமைகள் இருக்கும்போது நான்காம் வேற்றுமையின் புணர்ச்சியே இவ்வகாரத்திற்கு ஏற்பட்டிருக்கிறது என்று கூறுவதற்குக் காரணம் என்ன?—எனில்:

இந்த ஐயத்திற்கு விடை அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்,

ஸூ 50: நாராயணபத₃த்துக்கு ஸங்க்₃ரஹமாயிருக்கையாலே.

விவரணம்: அதாவது—ப்ரணவத்தை மந்த்ரசேஷமாகிற 'நமோ நாராயணாய' என்னும் இரண்டு பத₃ங்கள் விவரிக்கின்றன. அதில் அகாரத்தை 'நாராயணாய' என்னும் பத₃ம் விவரிப்பது அகாரவாச்யனானவன் நாராயணன் என்பதாலேயே தெளிவாகிறது; ஆகையால் 'நாராயணாய' என்னும் பத₃த்துக்குச் சுருக்கமே அகாரம். எனவே அதில் 'ஆய' என்னும் நாலாம் வேற்றுமை தெளிவாயிருக்கையாலே, இதிலும் நாலாம் வேற்றுமை புணர்ந்து கெட்டிருக்கிறது என்று கருத்து. இப்படிக் கொள்ளாவிடில் அகா

ரத்திற்கு 'நாராயணாய' என்னும் பதம் விவரணம் என்பது தேறுது.

அந்த நாலாம் வேற்றுமையால் சொல்லுகிற அர்த்தம் என்ன? என்னும் கேள்விக்குப்பதில் அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்:

சூ 51: இத்தால் ஈஶ்வரனுக்கு ஶேஷமென்கிறது.

விவரணம்: அதாவது—

தாதர்த்2யே சதுர்த்தீ2 [இலக்கண நூலார் வழக்கு]

[நான்காம் வேற்றுமையுருபு 'அதற்காக' என்னும்பொருளுடையது.] என்கிறபடியே இந்த நாலாவது வேற்றுமை, ஒன்று மற்றொன்றுக்கு ஶேஷபூதமானது என்று காட்டுமாகையாலே இங்கு மேலே மகாரத்தால் சொல்லப்படும் ஜீவஸமூஹம் கீழே அகாரத்தால் சொல்லப்படும் ஈஶ்வரனுக்கு ஶேஷமானது (அடிமைப்பட்டது) என்கிறது என்கை.

ஸர்வம் பரவஶம் து3:க்க2ம் ஸர்வமாத்மவஶம் ஸுக2ம்|
இதி வித்3யாத் ஸமாஸேந லக்ஷணம் ஸுக2து3:க்க2யோ:||

[மனு 4-160]

[பிறர்க்கு வஶப்பட்டிருப்பது எல்லாவகையிலும் துன்பமளிப்பது; தன் வசத்திலிருப்பது எல்லாவகையிலும் இன்பமளிப்பது; இன்ப துன்பமளிப்பவற்றின் லக்ஷணத்தை இவ்வாறு சுருக்கமாக அறியலாம்.]

ஸேவா ஶ்வவ்ருத்திராக்2யாதா தஸ்மாத் தாம் பரிவர்ஜயேத்|
[மனு 4-6]

[அடிமை செய்தல் நாய்த்தொழில் எனப்படுகிறது; ஆகையால் அதை அடியோடு விலக்கவேண்டும்] என்கிற உலகப் பொது வழக்கைக் கொண்டு ஒருவருக்கு அடிமைப்பட்டிருக்கையைத் துன்பமாக நினைக்கும் லௌகிகர்கள் கேட்கும் கேள்வியை வெளியிடுகிறார் அடுத்த சூர்ணையில்.

சூ 52: 'ஶேஷத்வம் து3:க்க2 ரூபமாகவன்றோ நாட்டிற்காண்கிறது' என்னில்:

விவரணம்: முன் எடுத்த மனு ஸ்ம்ருதி ஶ்லோகங்களில் சொல்லியபடி ஒருவன் மற்றொருவனுக்கு அடிமைப்பட்டிருப்பது துன்ப

மயமானதாகவன்றே உலகில்காண்கிறோம். அப்படியிருக்கும்போது இங்கு ஈச்வரனுக்கு ஜீவன் அடிமைப்பட்டிருப்பதாகச் சொல்லுவது பொருந்துமோ என்பது கேள்வியின் திரண்ட பொருள்.

இந்தக் கேள்விக்குப்பதில் அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

சூ 53: அந்த நியமம் இல்லை; உகந்த விஷயத்துக்கு சேஷமாயிருக்கும் இருப்பு ஸுகமாகக் காண்கையாலே.

விவரணம்: "பணியின் திருவருளென்னும் அம்சீதப்பைம்பூம் பள்ளி. அணிமென்குழலார் இன்பக்கலவியமுதுண்டார்" [திருவாய் 4-1-5] என்று ஆழ்வார் அருளியபடியே, பெரிய அரசர்களும் தாங்கள் உகந்த ஸ்த்ரீகளுக்கு அடிமைப்பட்டிருந்து அதில் இன்பம் காண்பதைப் பார்க்கிறோமாகையாலே, அடிமைப்பட்டிருப்பதெல்லாம் துன்பமில்லை என்று கருத்து.

இந்த ஸ்த்ரீகள் விஷயத்தில் அடிமைப்பட்டிருப்பது இன்பமாயிருப்பதற்குக் காரணம் அவர்களிடத்தில் அழகு முதலான குணங்கள் இருப்பதாலன்றோ. இங்கு அது பொருந்துமோ? என்னும் கேள்வியெழ, இங்கும் பொருந்தும் என்று அருளிச் செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

சூ 54: அகாரத்திலே கல்யாணகுணங்களைச் சொல்லுகையாலே, இந்த சேஷித்வமும் குணத்தாலே வந்தது.

விவரணம்: அதாவது—எம்பெருமானுடைய ரக்ஷகத்வத்தைச் சொல்லும் அகாரத்திலே அந்த ரக்ஷணத்திற்கு உறுப்பான கல்யாண குணங்களைச் சொல்லுகையாலே எம்பெருமான் விஷயமான இந்த சேஷத்வமும் அந்த குணங்கள் காரணமாக வந்தது என்று கருத்து. ஆகையால் இதுவும் இன்பமயமாய் இருக்கத்தட்டில்லை. என்று தாத்பர்யம்.

'இந்த சேஷத்வம் குணம் காரணமாக வருவதானுக் செயற்கையாய், இயல்வான ஸ்வரூபம் ஆகாமல் போய்விடுமே' என்னும் ஐயம் எழ அடுத்த சூர்ணையில் பதில் அருளிச்செய்கிறார்.

ஸூ 55: சேஷித்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபம்.

விவரணம்: அதாவது-மற்ற விஷயங்களில் துன்பமயமாயிருக்கும் அடிமைப்பட்டிருக்கை உகந்த விஷயத்தில் இன்பமயமாயிருக்குமென்று நிருபிப்பதற்கு எடுத்துக்காட்டாக ஸ்த்ரீகள் விஷயத்தில் அடிமைப்பட்டிருக்கை இன்பமாய் இருப்பதைச் சொன்னோமேயொழிய, அவ்விஷயத்திற் போலே இங்கு எம்பெருமானுக்கு அடிமைப்பட்டிருக்கை குணம் காரணமாகச் செயற்கையாய் வருதல்ல. பிரமாணங்களை ஆராய்ந்துபார்த்தால்

ஸ்வத்வமாத்மநி ஸஞ்ஜாதம் ஸ்வாமித்வம் ப்ரஹ்மணி ஸ்திதம் ।
உபயோரேஷ ஸம்பந்தோ ந பரோऽபிமதோ மம ॥
[ஸ்ரீவிஷ்ணுதத்வம்]

[உடைமையாயிருக்கும் தன்மை ஆத்மாவில் இயற்கையாயிருப்பது; உடையவனாயிருக்கும் தன்மை ப்ரஹ்மத்திடம் இயற்கையாயிருப்பது. இருவர்க்கும் இதுவே ஸம்பந்தம்; வேறெதையும் நான் ஒப்பவில்லை.]

ஸ்வோஜ்ஜீவநேச்சா யதி தே ஸ்வஸத்தாயாம் ஸ்ப்ருஹா யதி ।
ஆத்மதாஸ்யம் ஹரே: ஸ்வாம்யம் ஸ்வபாவம் ச ஸதா ஸ்மர ॥
[விஷ்ணுதத்வம்]

[நீ உய்வதில் உனக்கு விருப்பமுள்ளதாகில், உன் இருப்பிலே இஷ்டமிருந்ததாகில், ஆத்மாவின் அடிமைத் தன்மையையும் ஹரியின் தலைமையையுமே இயற்கையானதாக எப்போதும் நினைப்பாயாக.]

தாஸபூதா: ஸ்வத: ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மந: ।
நாந்யதா லக்ஷணம் தேஷாம் பந்தே மோக்ஷே ததைவ ச ॥ [ஹாரீதஸ்ம்ருதி]

[எல்லா ஆத்மாக்களும் இயற்கையாகவே பரமாத்மாவுக்கு அடிமைப்பட்டவர்களன்றோ, ஸம்ஸாரத்திலும் மோக்ஷத்திலும் அவர்களுக்கு வேறுவகை லக்ஷணமில்லை,] முதலான பிரமாணங்களிலே எம்பெருமானுக்கு அடிமைப்பட்டிருக்கையை ஆத்மாவுக்கு இயல்வாகச் சொல்லுகையாலே, சேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபம் (இயல்வான தன்மை) என்று கருத்து.

'ஶேஷத்வமே ஸ்வரூபம் என்று ஏகாரமிடலாமோ? ஜ்ஞானம் ஆனந்தம் ஆகியவற்றை இயல்வான தன்மைகளாகக் கொண்ட ஆத்மவஸ்துவுக்கு இந்த ஶேஷத்வம் இல்லாமற்போனாலும் ஸ்வரூபம் ஸித்தித்துவிடுமே' என்னும் கேள்வியெழ, அடுத்த சூர்ணையில் பதில் அருளிச்செய்கிறார்.

ஸூ 56: ஶேஷத்வம் இல்லாதபோது ஸ்வரூபம் இல்லை.

விவரணம்: ஶேஷத்வம் இல்லாவிடில் ஆத்மாவையே திருடுவதையொத்த 'ஸ்வதந்த்ரன்' என்னும் நினைவு உண்டாகி விடுமாகையாலே ஆத்மாவின் ஸ்வரூபம் அழிந்துவிடும் என்றுகருத்து.

இவ்விஷயத்தை இரண்டு வாக்கியங்கள் கொண்ட அடுத்த சூர்ணையில் விளக்குகிறார்.

ஸூ 57: ஆத்மாபஹாரமாவது ஸ்வதந்த்ரமென்கிற நினைவு; ஸ்வாதந்த்ரமாம்போது இல்லையாய் விடும்.

விவரணம்: அதாவது—

யோ*஽*ந்யதா$_2$ ஸந்தமாத்மாநமந்யதா$_2$ ப்ரதிபத்$_3$யதே ।
கிம் தேந ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா ॥
[ப$_4$ார-ஆதி$_3$ 74-28]

[பகவானுக்கு அடிமைப்பட்டிருக்கும் ஆத்மாவைத் தன்வசப்பட்டதாக எவன் அறிகிறானோ, ஆத்மாவைத் திருடும் அந்தத் திருடனால் என்ன பாவந்தான் செய்யப்படவில்லை?] என்று எல்லாப் பாபங்களுக்கும் மூலகாரணமாகச் சொல்லப்பட்ட ஆத்மாபஹாரமாவது தன் ஆத்ம ஸ்வரூபம் சுதந்திரமானது என்னும் நினைவு. இந்த நினைவு உண்டாகிவிட்டால்,

அஸந்நேவ ஸ ப$_4$வதி அஸத்$_3$ ப்$_3$ரஹ்மேதி வேத$_3$சேத் ।
அஸ்தி ப்$_3$ரஹ்மேதி சேத்$_3$ வேத$_3$ । ஸந்தமேநம் ததோ விது$_3$:
[தை-ஆந 6]

['ப்$_3$ரஹ்மத்தை அறிகிறான்' என்பது (ஒருவனுக்கு) இல்லையாகில் அவன் (இருந்தும்) இல்லாதவனாகவே ஆகிறான். 'ப்$_3$ரஹ்மத்தை அறிகிறான்' என்பது (ஒருவனுக்கு) உள்ளதாகில், அதனால் இவனை உள்ளவனாக (நல்லோர்கள்) அறிகிறார்கள்.] என்கிறபடியே இவனுடைய ஸ்வரூபம் இல்லையென்றே சொல்லத் தக்கதாகிவிடும் என்று கருத்து. ஆகையால் ஶேஷத்வம் இல்லாதபோது ஸ்வ

ரூபம் இல்லையென்று சென்ற சூர்ணையில் சொன்னது குறையில்லை என்று தாத்பர்யம்.

35 வது சூர்ணையிலிருந்து இதுவரையில் லுப்த சதுர்த்தியோடு கூடிய அகாரத்தின் பொருள் அருளிச்செய்யப்பட்டது. அதில் அகாரம் சொற்களுக்குக்காரணமாயிருக்கையாலே அவ்வெழுத்தால் சொல்லப்படும் எம்பெருமான் பொருள்களுக்குக் காரணம் என்னும் முறையில் எம்பெருமானுடைய காரணத்வமும், 'அவ-ரக்ஷணே' என்னும் தாதுவிலிருந்து அகாரம் தோன்றியதாகையாலே எம்பெருமானுடைய ரக்ஷகத்வமும் சொல்லப்பட்டதென்பது 35 முதல் 39 வது சூர்ணைவரையில் விளக்கப்பட்டது. பிராட்டி எம்பெருமானுடைய ஸ்வரூபத்தை நிரூபிப்பவளாயிருக்கையால் அவளும் அகாரத்தில் சேர்ந்திருக்கையாலே அகாரத்திற்கு ஶ்ரிய:பதித்வமும் (திருவின் நாயகனாயிருக்கையும்) பொருள் என்பது 40 முதல் 47 வரையிலுள்ள சூர்ணைகளில் விளக்கப்பட்டது. 48 முதல் 57 வரையிலுள்ள சூர்ணைகளாலே லுப்தமான (புணர்ந்து கெட்ட) நான்காம் வேற்றுமையால் ஜீவனுடைய ஶேஷத்வம் சொல்லப்படுகிறதாகையாலே அதோடு தொடர்புடைய எம்பெருமானுடைய ஶேஷித்வமும் அகாரத்தின் பொருள் என்று சொல்லப்பட்டதாயிற்று. ஆக இவ்வண்ணமாக இதுவரையில் அகாரத்தின் பொருள் விளக்கப்பட்டது.

அடுத்தபடியாக ப்ரணவத்தின் இரண்டாம் எழுத்தான உகாரத்துக்குப்பொருள் அருளிச்செய்யத் தொடங்குகிறார் அடுத்த சூர்ணையில்.

மூ 58: ஸ்தாந ப்ரமாணத்தாலே உகாரம் அவதாரணார்த்தம்,

விவரணம்: அதாவது—

ததேவ பூதம் தது பவ்யமா இதம் தத க்ஷரே பரமே
வ்யோமந் [தை-நா 2]

[பரம்பொருளே இறந்தகாலப் பொருள்: அதுவே வருங்காலப் பொருளாகவும், நிகழ்காலப்பொருளாகவுமிருக்கும். அது அழியாத பரமாகாஶத்தில் (பரமபதத்தில்) உள்ளது.]

ததேவாக்நிஸ் தத் வாயுஸ் தத் ஸூர்யஸ் தது
சந்த்ரமா: [தை-நா 2]

[பரம்பொருளே அக்னியாகும்; அதுவே வாயு; அதுவே ஸூர்யன்; அதுவே சந்திரன்.] முதலான வேதவாக்கியங்களில் 'ததேவ பூதம்' 'ததேவாக்நி:' என்று ஏவகாரத்தைப் பிரயோகம் செய்து, 'தது பூர்வம்' 'தது சந்த்ரமா:' என்று அடுத்தபடியாக ஏவ காரத்தினிடத்தில் உகாரத்தை வழங்கக் காண்கையாலே, இந்த ஸ்தல ப்ரமாணத்தையிட்டு உகாரம ஏவகாரப்பொருளை உடையதாயிருக்கும் என்று கருத்து.

ஏவகாரத்திற்கு இருவகையான பொருள் உண்டு. 'சங்கு வெளுப்பே' என்றவிடத்தில் 'சங்கில் வெண்மைநிறம் இல்லாமற்போவதில்லை' என்று வலியுறுத்துகையாலே, இது "அயோக வ்யவச்சேதம்" என்று வழங்கப்படும். "பார்த்தனே வில்லாளி" என்னுமிடத்தில் ஏகாரம் பார்த்தன் தவிர மற்றவர்கள் அவனைப் போன்ற வில்லாளிகளல்லர் என்று வலியுறுத்துகையாலே, இது "அந்யயோக வ்யவச்சேதம்" எனப்படும். இங்கு ஏகாரப் பொருளுடைய உகாரம் எப்பொருளைச் சொல்லுகிறது என்னும் கேள்விக்கு அடுத்த சூர்ணையில் பதில் அருளிச் செய்கிறார்.

மூ 59: இத்தால் பிறர்க்கு ஶேஷம் அன்று என்கிறது.

விவரணம்: அதாவது ஏகாரத்தைச் சொல்லும் இவ்வுகாரத்தால் அகாரத்தில் ஈஶ்வரனுக்கு அடிமைப்பட்டதாகச் சொல்லப்படும் இந்த ஆத்மவஸ்து மற்றவர்களுக்கு அடிமைப்பட்டதன்று என்று அந்யயோக வ்யவச்சேதத்தையே சொல்லுகிறது என்று கருத்து. லுப்தசதுர்த்தியாலே "ஆத்மா எம்பெருமானுக்கு அடிமைப்பட்டது" என்று சொல்லும்போது மற்றவர்களுக்கு அடிமைப்பட்டதா இல்லையா என்னும் ஆராய்ச்சி இங்கு வரக் காரணமென்ன? எனில்: உலகத்தில் ஒருவனுக்கு உடைமையான வீடு, வயல், பிள்ளை, வேலைக்காரர் முதலானவர்கள் வேறு சிலருக்கும் உடைமையாயிருப்பதைக் காண்கிறோமாகையாலே அதுபோலே எம்பெருமானுக்கு ஶேஷமான இந்த ஆத்மா வேறு சிலருக்கும் ஶேஷமாயிருக்குமோ? என்னும் ஐயம் உண்டாகுமன்றோ. ஆகையால் அவ்வண்ணமாக வேறு எவருக்கும் அடிமைப் பட்டிருப்பதில்லை இவ்வாத்மா என்று காட்டுகிறது உகாரம்.

உகாரத்திற்கு இப்பொருளைக் கொள்ளாமல், உகாரத்தாலே லக்ஷ்மீதேவியைச் சொல்லுவதாகக் கொண்டு "அவளுக்கும் அடிமைப்பட்டதாயிருக்கும் இவ்வாத்மா" என்று சொல்லுகிறது உகாரம் என்றும் சில ஆசார்யர்கள் பொருள் கூறுவார்கள் என்று அடுத்த சூர்ணையில் அருளிச்செய்கிறார்.

சூ 60: பெரிய பிராட்டியார்க்கு சேஷமென்கிறது என்றும் சொல்லுவர்கள்.

விவரணம்: அதாவது—

அகாரஶ்சித்ஸ்வரூபஸ்ய விஷ்ணோர் வாசக இஷ்யதே ।
உகாரஶ்சித்ஸ்வரூபாயா: ஶ்ரியோ வாசீ ததா₂ விது₃: ॥
மகாரஸ்து தயோர் தா₃ஸ இதி ப்ரணவலக்ஷணம் ॥

[பாஞ்சராத்ரம்]

[அகாரம் ஞானமயனான விஷ்ணுவைச் சொல்லுவதெனப்படுகிறது. அப்படியே உகாரம் ஞானஸ்வரூபிணியான ஸ்ரீதேவியைச் சொல்லுவதென அறிகிறார்கள். மகாரம் அவ்விருவர்க்கும் அடிமையான ஜீவனைச் சொல்லுகிறது; இதுவே ப்ரணவ லக்ஷணம்]

அகாரேணோச்யதே விஷ்ணு: ஸர்வலோகேஶ்வரோ ஹரி: ।
உத்₃த்₄ருதா விஷ்ணுநா லக்ஷ்மீருகாரேணோச்யதே ஸதா₃ ।
மகாரஸ்து தயோர் விப்ர ஸ்ரீநாராயணயோஸ் ஸதா₃ ॥
ஆத்மந: ஶேஷபூ₄தஸ்ய வாசக: ஶ்ருதிசோதி₃த: ॥

[பாஞ்சராத்ரம்]

[ஸர்வலோகேஶ்வரனும் ஸர்வவ்யாபியுமான ஹரி அகாரத்தால் சொல்லப்படுகிறான்; விஷ்ணுவினால் (திருமார்பில்) த₄ரிக்கப்பட்ட லக்ஷ்மீதே₃வி உகாரத்தால் சொல்லப்படுகிறாள்; அந்தணரே! ஸ்ரீநாராயணர்களான அவர்களுக்கு எப்போதும் அடிமையாயிருக்கும் ஜீவனுக்கு மகாரம் வாசகம் என்று வேத₃த்தில் சொல்லப்பட்டுள்ளது.] என்று ஸ்ரீபாஞ்சராத்ர சாஸ்த்ரத்தில் அகாரம் எம்பெருமானைச் சொல்லுவதாகவும், உகாரம் லக்ஷ்மீதே₃வியைச் சொல்லுவதாகவும், மகாரம் அவ்விருவருக்கும் அடிமைப்பட்ட ஜீவனைச் சொல்லுவதாகவும் சொல்லுகையாலே, உகாரத்தை மேலே சொன்னபடி ஏகாரப்பொருளைச் சொல்லுவதாகக் கொள்ளாமல், ஸ்ரீதேவியைச் சொல்லுவதாகக் கொண்டு, இந்த உகாரத்தாலே 'பெரியபிராட்டியாருக்கும் ஜீவன் அடிமைப்பட்

டவன்' என்று சொல்லப்படுவதாகப் பொருள் கூறுவர் சில ஆசார்யர்கள் என்று கருத்து.

'உகாரம் லக்ஷ்மியைச் சொல்லுகிறது' என்னும் இந்த நிர்வாஹத்தைக் காட்டிலும், 'உகாரம் ஏகாரப் பொருளைச் சொல்லுகிறது' என்னும் மூந்திய நிர்வாஹமே முக்கியமானது என்று அடுத்த சூர்ணையில் அருளிச்செய்கிறார்.

மூ 61: அதிலும் அந்ய ஶேஷத்வம் கழிகையே ப்ரதா₄நம்.

விவரணம்: அதாவது—பெரியபிராட்டியாருக்கு அடிமைப் பட்டிருக்கையாகிற அதைக்காட்டிலும் கீழே அகாரத்தில்சொன்ன ப₄க₃வச்சே₂ஷத்வத்திற்கு (எம்பெருமானுக்கே அடிமைப்பட்டிருக் கைக்கு) விரோதி₄யான அந்யஶேஷத்வம் (பிறர்க்கு அடிமைப் பட்டிருக்கை) நீங்குகையே ஆத்மாவிற்கு முக்கியமாகத் தேவைப் படுகிறது என்று கருத்து.

பிறர்க்கு அடிமைப்பட்டிருக்கை இவ்வளவு கொடியதோ? என்னும் கேள்வியெழ. அதன் கொடுமையை ஒரு த்₃ருஷ்டாந்தம் காட்டி விளக்குகிறார் அடுத்த சூர்ணையில்.

மூ 62: தே₃வர்களுக்கு ஶேஷமான புரோடா₃ஶத்தை நாய்க்கு இடுமாபோலே, ஈஶ்வரஶேஷமான ஆத்மவஸ்துவை ஸம்ஸாரிகளுக்கு ஶேஷமாக்குகை.

விவரணம்: அதாவது—யாகங்களில் ஆராதி₄க்கப்படுபவர்களான இந்திரன் முதலான தே₃வர்களுக்கு இனிய உணவாகையாலே, அவர்களுக்குரியதாக வைக்கப்பட்ட ஹவிஸ்ஸை, பார்ப்பதற்கும் தொடுவதற்கும் தகாததாம்படி மிகத் தாழ்ந்ததான நாய்க்கு இடுவதுபோலே, வகுத்த ஸ்வாமியான எம்பெருமானுக்கு அடிமைப்பட்ட ஆத்ம வஸ்துவை எல்லாவகையிலும் தாழ்ந்த ஸம்ஸாரிகளுக்கு அடிமைப் படுத்துகை மிகவும் தகாதது என்று கருத்து.

இப்படி மிகக்கொடியதான பிறர்க்கு அடிமைப்படுத்துகை நீங்குவதே ஆத்மாவுக்கு முக்கியமாகத் தேவைப்படுகிறது என்று முன் சொன்னதை உறுதிப்படுத்துகிறார் அடுத்த சூர்ணையில்.

சூ 63: ப₄க₃வச்சே₂ஷத்வத்திலும் அந்ய சே₂ஷத்வம் கழிகையே ப்ரதா₄நம்.

விவரணம்: அதாவது—லக்ஷ்மீதே₃விக்கு அடிமைப்பட்டிருப்பதைக் காட்டிலும் பிறர்க்கு அடிமைப்பட்டிருப்பதிலிருந்து நீங்கியிருப்பதே முக்₂யமென்று முன்சொன்ன அளவு மாத்திரமல்ல; அந்த லக்ஷ்மிக்கும் நாயகனான அந்த எம்பெருமானுக்கு அடிமைப்பட்டிருக்கையைக் காட்டிலும், பிறர்க்கு அடிமைப்பட்டிருக்கையிலிருந்து நீங்கியிருக்கையே ஆத்மாவுக்கு முக்கியமாகத் தேவைப்படுகிறது என்று கருத்து. அகாரத்திலேயே லக்ஷ்மீ ஸம்ப₃ந்த₄ம் கொள்ளப்படுகிறதாகையாலே, லக்ஷ்மீ சே₂ஷத்வம். அங்கேயே அநுஸந்திக்கப்பட்டுவிட்டது என்பதும் குறிக்கொள்ளத்தக்கது.

இவ்விஷயத்திற்கு அருளிச்செயலில் பிரமாணம் காட்டுகிறார் அடுத்த சூர்ணையில்.

சூ 64: "மறந்தும் புறந்தொழா மாந்தர்" என்கையாலே,

விவரணம்: அதாவது ஸ்ரீவிஷ்ணு புராணத்தில் உள்ளபடி யமனுக்கும் அவனுடைய கிங்கரனுக்கும் நடந்த பேச்சைக் குறிப்பிடும்போது திருமழிசைப்பிரான், "ப்ரபு₄ரஹமந்யந்ருணாம் ந வைஷ்ணவாநாம்" [வி பு 3-7-14] [நான் மற்றவர்களுக்கு ஸ்வாமியேயொழிய வைஷ்ணவர்களுக்கு அல்ல] என்றவிடத்தை,

திறம்பேன்மின் கண்டீர் திருவடி தன் நாமம்
மறந்தும் புறந்தொழா மாந்தர்—இறைஞ்சியும்
சாதுவராய்ப் போதுமின்கள் என்றான்—நமனும் தன்
தூதுவரைக் கூவிச் செவிக்கு. [நான் திருவ–68]

என்று மொழிபெயர்க்கும்போது விஷ்ணு புராணத்தில் 'வைஷ்ணவாநாம்' என்னும் பதத்திற்கு 'திருவடி தன் நாமம் மறந்தும் புறந்தொழா மாந்தர்' என்று பொருள் அருளிச்செய்கையாலே, எம்பெருமானுடைய திருநாமத்தை மறந்தார்களாகிலும் மற்ற எவருக்கும் அடிமைப்படாதவர்களே வைஷ்ணவர்கள் என்று தேறுகிறது. ஆகையாலே, 'ப₄க₃வச்சே₂ஷத்வத்தைக் காட்டிலும், பிறர்க்கடிமைப்பட்டிருக்கையிலிருந்து தவிருகை முக்கியம் என்று உணர்த்தப்படுகிறது என்று கருத்து

எம்பெருமானுக்கு அடிமைப்பட்ட ஜீவஸ்வருபத்திற்கு, தனக்கு அடிமைப்பட்டிருக்கை, பிறர்க்கு அடிமைப்பட்டிருக்கை ஆகிற இரண்டுமே அந்யசேஷத்வத்தில் சேர்ந்ததாகையாலே இரண்டையும் இந்த உகாரம் கழிக்கிறது என்று சொல்லி உகாரத்தின் பொருளைக் கூறுவதை நிறைவுபடுத்துகிறார் அடுத்த சூர்ணையில்.

சூ 65: இத்தால், தனக்கும் பிறர்க்கும் உரித்தன்று என்கிறது.

விவரணம்: அதாவது—பிறர்க்கு அடிமைப்பட்டிருக்கையைத் தவிர்க்கும் இவ்வுகாரத்தாலே, 'பிறர்' என்னும் சொல்லில் தானும் சேர்ந்தவனாகையாலே 'இந்த ஆத்ம வஸ்து தனக்கும் உடைமையானதன்று. தன்னிலும் வேறுபட்ட ஸம்ஸாரிகளுக்கும் உடைமையானதன்று' என்னும் விஷயத்தை இவ்வுகாரம் சொல்லுகிறது என்று கருத்து.

ஆக, இதுவரை உகாரத்தின் பொருளை அருளிச்செய்தாராயிற்று. இனி அடுத்த சூர்ணைதொடக்கமாக மூன்றாம் எழுத்தான மகாரத்தின் பொருளை விளக்குகிறார். அதில் அடுத்த சூர்ணையில் மகாரத்தின் பொருளை அருளிச்செய்கிறார்.

சூ 66: மகாரம் இருபத்தஞ்சாம் அக்ஷரமாய் ஜ்ஞாநவாசியுமாய் இருக்கையாலே ஆத்மாவைச் சொல்லுகிறது.

விவரணம்: அதாவது—

பூ₄மாதி ச கவர்க்கேண சவர்க்கேணேந்த்₃ரியாணி ச |
டவர்க்கேண தவர்க்கேண ஜ்ஞாநகந்தா₄தயஸ்ததா₂ ||
மந: பகாரேணைவோக்தம் ப₂காரேண த்வஹங்க்ருதி: |
ப₃காரேண ப₄காரேண மஹாந் ப்ரக்ருதிருச்யதே ||
ஆத்மா து ஸ மகாரேண பஞ்சவிம்ஸ: ப்ரகீர்த்தித: ||
[பாத்₃மோத்தரபுராணம் 254-25, 26, 27]

['க', 'க₂' 'க₃', 'க₄', ங என்னும் கவர்க்கம் ஐந்தினாலும் பூ₄மி முதலிய ஐந்து பூ₄தங்களும், சவர்க்கம் ஐந்தினாலும் ஐந்து கர்மேந்த்ரியங்களும், டவர்க்கம் ஐந்தினாலும் ஞானேந்திரியங்களைந்தும், தவர்க்கம் ஐந்தினால் க₃ந்த₄ம் ரஸம் முதலான ஐந்து பூ₄தகு₃ணங்களும், பகாரத்தினால் மனமும், ('ப₂') எனும் எழுத்தால் அஹங்காரமும் ('ப₃' 'ப₄') என்னும் எழுத்துக்களால் (முறையே). மஹானும் ப்ரக்ருதியும் சொல்லப் படுகின்றன. இருபத்தைந்தா

வது தத்துவமான ஜீவன் (இருபத்தைந்தாம் அக்ஷரமான) மகாரத்தினுல் சொல்லப்படுகிருன,] என்று பாத்மோத்தரபுராணத்தில் ககாரம் தொடங்கி பகாரம் வரையில் 24 உயிர்மெய் எழுத்துக்கள் முறையே பூமி தொடக்கமாக மூலப்ரக்ருதிவரையிலுள்ள 24 அசேதநதத்துவங்களைச் சொல்லுவதாகக் கூறப்பட்டது, அந்த இருபத்துநாலு அக்ஷரங்களுக்கும் அப்பாலிருப்பதான 25ம் அக்ஷரமாக இருக்கையாலே மகாரம் இருபத்தைந்தாவது தத்துவமான ஆத்மாவைச் சொல்லுகிறது. மேலும், 'மந-ஜ்ஞாநே' என்கிற தாதுவிலிருந்தோ, 'மநு-அவபோதநே' என்கிற தாதுவிலிருந்தோ இந்த மகாரம் உண்டானதாகையாலே, ஜ்ஞாநஸ்வரூபனும் ஜ்ஞாநத்தை குணமாகக் கொண்ட ஆத்மாவைச் சொல்லுகிறது என்று கருத்து.

பஞ்சவிம்ஶோऽயம் புருஷ:

[இந்தப் புருஷன் இருபத்தைந்தாமவன்]

பஞ்சவிம்ஶ ஆத்மா பவதி [யஜுர் அஷ்டகம் 1-2-47]

[ஆத்மா இருபத்தைந்தாம் தத்துவமாவான்] என்னும் ப்ரமாணங்களில் ஜீவாத்மா இருபத்தைந்தாவது தத்துவம் என்று குறிப்பிடப்பட்டதும்,

விஜ்ஞாநாத்மா புருஷ: [ப்ரஶ்நோபநிஷத் 4-9]

[ஜீவன் ஜ்ஞான ஸ்வரூபன்] என்னும் ப்ரமாணத்தில் 'ஜீவன் ஞான ஸ்வரூபன்' என்று குறிப்பிடப்பட்டதும்,

விஜ்ஞாதாரமரே கேந விஜாநீயாத் [ப்ருஹ 6-5-15]

[சீடனே! அறிபவனுன ஜீவனை எதனுல் அறியலாம்?] என்னும் பிரமாணத்தில் 'ஜீவன் அறிபவனுகவும் இருப்பவன்' என்று கூறியிருப்பதும் இங்கு குறிக்கொள்ளத்தக்கது.

அகாரத்தில் சொன்ன ஶேஷத்வம் பத்தர், முக்தர், நித்யர் என்னும் மூவகைப்பட்ட ஆத்மாக்களுக்கும் பொதுவாகையாலே, அந்த எல்லா ஆத்மாக்களையும் இந்த மகாரத்திற்குப் பொருளாகச் சொல்ல வேண்டுமென்பதை அடுத்த சூர்ணையில் அருளிச்செய்கிருர்.

ஸூ 67: இது தான் ஸமஷ்டி வாசகம்.

விவரணம்: அதாவது— இவ்வண்ணமாக ஆத்மாவைச் சொல்லும் இந்த மகாரம், ஆத்மாக்களனைவரும் அடங்கிய ஆத்ம ஸமஷ்டியைச் சொல்லும் என்று கருத்து.

மகாரம் ஒருமை (Singular) யாயிருக்க ஆத்மாக்களனைவரையும் சொல்லமுடியுமோ ? என்னும் ஐயத்திற்குப் பதில் கூறுகிறார் அடுத்த ஸூத்ரத்தில்.

ஸூ 68: ஜாத்யே கவசநம்

விவரணம்: அதாவது— ஒரு நெற்குவியலைப்பற்றிப் பேசுகிறவன் 'இது சம்பா நெல்' என்று கூறினால் அந்த ஒருமை அக்குவியலில் உள்ள அந்த ஜாதியைச் சேர்ந்த நெல் அனைத்தையும் குறிப்பது போலே இது ஆத்ம ஜாதியைச் சேர்ந்த அனைவரையும் குறிக்கும் என்று கருத்து.

இம்மகாரத்தால் ஆத்மாவின் எத்தன்மையாகக் குறிக்கிறது என்னும் கேள்விக்குப் பதில் அருளிச்செய்கிறார் அடுத்த ஸூத்ரத்தில்.

ஸூ 69: இத்தால், ஆத்மா ஜ்ஞாதாவென்று தேஹத்தில் வ்யாவ்ருத்தி சொல்லிற்றாயிற்று.

விவரணம்: அதாவது— இருபத்தைந்தாம் அக்ஷரமாய், முற்கூறியபடி சதுர்த்யக்ஷரத்தினாலே ஜ்ஞானத்தைச் சொல்லுவதாய் இருக்கும் இந்த மகாரத்தால். "சேஷத்வத்திற்கு இருப்பிடமான ஆத்மா ஜ்ஞானத்திற்கும் இருப்பிடமாய் இருப்பவன்" என்று காட்டுகையாலே, ஜ்ஞானத்திற்கு இருப்பிடமாயிராத தேகத்தைக் காட்டிலும் ஆத்மாவிற்குள்ள வேறுபாடு சொன்னதாகிறது என்று கருத்து. இது இருபத்தைந்தாம் அக்ஷரமாகையாலே முதல் இருபத்துநாலு அக்ஷரங்களால் சொல்லப்படும் ப்ராக்ருதமான அசித்துக்களைக் காட்டிலும் மேற்பட்டது என விளங்கும். சதுர்த்யக்ஷரத்தாலே முற்கூறியபடி ஜ்ஞானஸ்வரூபமாயிருக்கிறது என்றும் ஜ்ஞானத்திற்கு இருப்பிடமாய் (அறிபவனும்) இருக்கிறது என்றும் விளங்கும். (ஏறிக்கழிந்த) நாலாம் வேற்றுமையின் தொடர்பாலே இது எம்பெருமானுக்கு உரியது என்றும் விளங்கும். இப்படி ஜ்ஞானத்வம் (ஞானமாயிருக்கை), சேஷத்வம் (எம்பெருமானுக்கு உரியதாயிருக்கை), ஜ்ஞாத்ருத்வம் (அறிவுடையதாயிருக்கை), என்று மூன்று தன்மைகள் ஆத்மாவிலிருந்த போதிலும், எம்பெருமானுக்கு உரியதாயிருக்கையாகிற சேஷத்வம் சரீரத்திற்கும்

உண்டு; தானே ப்ரகாசிக்கையாகிற ஜ்ஞானத்வம் ப்ராக்ருதமான அசித்திற்கு இல்லாவிடிலும் அப்ராக்ருதமான அசித்தான சுத்த ஸத்வத்திற்கும் உண்டு. ஆகையால் அத்தன்மைகள் அசிதத்திலி ருந்து ஆத்மாவை வேறுபடுத்திக் காட்டமாட்டா. அறிவுடையனு யிருக்கையாகிற ஜ்ஞாத்ருத்வமோ எனில் எந்ததேஹத்திற்கும் கிடை யாது. இதனாலேயே மூலத்தில் சூர்ணையில் "ஆத்மா ஜ்ஞாதா வென்று தேஹத்தில் வ்யாவ்ருத்தி சொல்லிற்றுயிற்று" என்று அருளிச் செய்தார்,

"நான் தேவன்" "நான் மனிதன்" 'நான் பருத்தவன்" "நான் மெலிந்தவன்" என்று தேவனுகவோ, மனிதனுகவோ, பருத்தவனுகவோ, மெலிந்தவனுகவோ இருக்கும்தேஹத்தில் 'நான்' என்னும் வழக்கு காணப்படுகிறது. அப்படியிருக்கும்போது 'நான்' என்பதற்குப் பொருளான ஆத்மா தேஹத்தைக் காட்டிலும் வேறு பட்டது என்று முன் சூர்ணையில் சொன்னது எப்படிப் பொருந்தும்? என்னும் கேள்வியெழ அதற்கு அடுத்த சூர்ணையில் பதில் அளிக்கிருர்.

சூ 70: தேஹத்தில் வ்யாவ்ருத்தி தத்வ ஸேகரத்திலே சொன்னேம்.

விவரணம்: அதாவது-பல காரணங்களாலே தேஹம் ஆத்மா வல்ல என்று நிருபிப்பதன் மூலம் ஆத்மா தேஹத்தைக் காட்டி லும் வேறுபட்டது என்னும் விஷயத்தை (அஷ்டாதச ரஹஸ்யங் களில் ஒன்ருன) "தத்வ ஸேகரம்" என்னும் க்ரந்தத்திலே தெளி வாகச்சொன்னேம். அதிலே கண்டுகொள்வது என்று கருத்து. "நான் தேவன், நான் மனிதன், நான் பருத்தவன், நான் மெலிந்த வன்" என்னும் வழக்குகளில் ஜ்ஞானமயமான ஆத்மாவையும், தேஹத்தையும் ஒன்ருக வழங்குவதற்குக் காரணம், தேஹம் தான் இருக்கும் வரையில் ஆத்மாவை விட்டுப்பிரியாமல் இருக்கையே யாகும், இதுகொண்டு இரண்டையும் ஒன்று என்னல் இயலாது என்பதும் அறியத்தக்கது.

இந்த ப்ரணவத்தில் முதலில் உகாரத்தாலே ஆத்மாவின் குணமான ஸேஷத்வத்தைச் சொல்லி, அதற்குப்பின் அந்த குணத்தையுடைய ஆத்மாவை மகாரத்தாலே சொல்லிற்று. குணத்தையுடைய பொருளைச் சொல்லி அதற்குப்பின் குணத்தைச் சொல்லுவதுதானே முறை. இதைமாற்றிச் சொல்லுகைக்குக் கருத் தென்ன? என்னும் கேள்விக்கு அடுத்த சூர்ணையிலே பதில் அளிக்கிருர்.

மூ 71: மணத்தையும், ஒளியையுங்கொண்டு, பூவையும், ரத்நத்தையும் விரும்புமாபோலே, ஶேஷமென்று ஆத்மாவை ஆதரிக்கிறது. அல்லாதபோது "உயிரினாற் குறைவிலம்" என்கிறபடியே த்யாஜ்யம்; அதுதோன்ற ஶேஷத்வத்தைச் சொல்லி, பின்னை ஆத்மாவைச் சொல்லுகிறது.

விவரணம்: அதாவது—மணத்தை உடையது என்னும் காரணத்தாலே பூவை விரும்புவது போலவும், ஒளியையுடையது என்னும் காரணத்தாலே ரத்தினத்தை விருப்புவது போலவும் ஶேஷத்வத்தை உடையது என்னும் காரணத்தாலேயே ஆத்மாவை அறிவாளிகள் ஆதரிக்கிறார்கள்.

"தடம்புனல சடைமுடியன் தனியொரு கூறமர்ந்துறையும்
உடம்புடையான் கவராத உயிரினால் குறைவிலமே"

[திருவாய் 4—8—10]

என்று ஆழ்வாரும் 'எம்பெருமானுக்கு ஆட்படாத ஆத்மா தமக்குத் தேவையில்லை; அது கைவிடத்தக்கதே' என்று அருளிச்செய்தாரன்றோ. இப்படி ஶேஷத்வம் முக்கியமாக இருப்பதைக் கருதி, ப்ரணவத்தில் இப்படிப்பட்ட ஶேஷத்வத்தை உகாரத்தாலே முதலில் சொல்லி. பிறகு மகாரத்தாலே ஆத்மாவைச் சொல்லுகிறது என்று கருத்து. இவ்விடத்தில் திருக்கோட்டியூர் நம்பி கூரத்தாழ்வானுக்கு ஞானத்தைக்காட்டிலும், ஶேஷத்வம் ஆத்மாவுக்கு அந்தரங்க நிருபகம் என விளக்கிய (திருவாய்மொழியீட்டில் 8-8-2 ல் எடுக்கப்பட்ட) ஐதிஹ்யம் அனுஸந்திக்கத்தக்கது.

இப்படி அ, உ, ம என்று மூன்று பதங்கள் கொண்ட இந்த ப்ரணவத்தால் சொல்லப்படும் திரண்டபொருளை அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

மூ 72: ஆக, ப்ரணவத்தால் "கண்ணபுரமொன்றுடையானுக்கு அடியேன் ஒருவர்க் குரியேனோ" என்கிறபடியே ஜீவபரஸம்பந்தம் சொல்லிற்று.

விவரணம்: அதாவது—இதுவரையில் விளக்கப்பட்ட ப்ரணவத்தின் பதப்பொருள்களிலிருந்து தேறிய அர்த்தத்தை— திருமங்கையாழ்வார் ஒரு திருக்கண்ணபுரப்பாசுரத்திலே "கண்ணபுர

மொன்றுடையானுக்கு அடியேன் ஒருவர்க்குரியேனே'' [பெரிய திரு 8—9—3] என்று அருளிச்செய்தார். "கண்ணபுர மொன்றுடையானுக்கு" என்று நாலாம் வேற்றுமையை இறுதியில் கொண்ட அகாரத்தின் பொருளையும், ''அடியேன்'' என்று சேஷத்வத்தை உடைய ஜீவனைச்சொல்லும் மகாரத்தின் பொருளையும், ''ஒருவர்க்குரியேனே'' என்று பிறர்க்கடிமைப் படுவதைத் தவிர்க்கும் உகாரத்தின் பொருளையும் சொல்லிக்கொண்டு ப்ரணவத்தின் பொருளை அனுஸந்தித்த இந்தத் திருமங்கையாழ்வார் ஸ்ரீஸூக்தியின் படி ஜீவன் எம்பெருமானுக்குசேஷபூதன் (உடைமை)-எம்பெருமான் அவனுக்கு சேஷி (உடையவன், ஸ்வாமி) என்று இருவர்க்குமுள்ள தொடர்பு சொல்லப்பட்டது என்று கருத்து.

இதற்கு மேல் பொய்கையாழ்வாருடைய அருளிச்செயலில் ஜீவன் பெரியபிராட்டியாரோடு கூடிய எம்பெருமானுடைய ஒரு மிதுனத்திற்குரியவன் என்று சொல்லியிருப்பதைக் காட்டி, ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள தொடர்பை அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

ஸூ 73: இத்தால், ''தாமரையாள் கேள்வன் ஒருவனையே நோக்குமுணர்வு'' என்றதாயிற்று.

விவரணம்: அதாவது— இந்த ப்ரணவத்தால் சொல்லப்பட்ட அர்த்தத்தை ''தாமரையாள் கேள்வன் ஒருவனையே நோக்கும் உணர்வு'' [முதல் திருவ 67] என்று பொய்கையாழ்வார் அருளிச்செய்தார். அதில் ''தாமரையாள் கேள்வன்'' என்று அகாரத்தின் பொருளாய், கைங்கர்யம் கொள்பவனான திருமகள் நாதனையும், ''ஒருவனையே நோக்கும்'' என்று நாலாம் வேற்றுமையாலும் உகாரத்தாலும் சொல்லப்படும் அநந்யார்ஹசேஷத்வத்தால்(வேறு எவர்க்கும் ஆகாதபடி எம்பெருமானுக்கே அடிமைப்பட்டிருக்கையால்) உண்டாகும் ஆத்மாவினுடைய ததேகபரதையையும் (எம்பெருமானையே தன் அறிவுக்கு விஷயமாய்க் கொண்டமையையும்) ''உணர்வு'' என்று அந்த சேஷத்வத்தை உடையவரான மகாரத்தால் சொல்லப்பட்டவனாய், அறிவையிட்டே நிரூபிக்கவேண்டும் படியிருப்பவனான ஆத்மாவையும் சொல்லுகிறதாகையாலே ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள தொடர்பு ப்ரணவத்தால் சொல்லப்பட்டதாயிற்று என்று கருத்து.

71, 72, 73 சூர்ணைகளால் அகாரத்தில் ஏறிமறைந்திருக்கும் நான்காம் வேற்றுமையை முக்கியமாகக் கொண்டு ப்ரணவத்தின் பொருளை அருளிச்செய்தார். அடுத்த சூர்ணையில் ''அவ-ரக்ஷணே''

என்னும் தா4துவிலிருந்து தோன்றிய அகாரத்தை முக்கியமாகக் கொண்டு ப்ரணவத்திற்கு மற்றொரு விதமாகப் பொருள் அருளிச்செய்கிறார்.

சூ 74: அகாரத்தாலும், மகாரத்தாலும், ரக்ஷகனையும், ரக்ஷ்யத்தையும் சொல்லிற்று; சதுர்த்தி2யாலும், உகாரத்தாலும் ரக்ஷணஹேதுவான ப்ராப்தியையும், ப2லத்தையும் சொல்லிற்று.

விவரணம்: அதாவது— "அவ-ரக்ஷணே" என்னும் தா4துவிலிருந்து தோன்றிய அகாரத்தாலே ரக்ஷிப்பவனான எம்பெருமானைச் சொல்லிற்று; மகாரத்தாலே அவனால் ரக்ஷிக்கப்படும் ஆத்மாவைச் சொல்லிற்று. இப்படி எம்பெருமான் ஜீவனை ரக்ஷிப்பதற்குக் காரணம் ஜீவன் அவனுக்கு உடைமையாயிருக்கையேயாகையாலே நான்காம் வேற்றுமையாலே ரக்ஷிக்கைக்குக்காரணமான அந்த ஶேஷத்வத்தைச் சொல்லிற்று. ஜீவாத்மா எம்பெருமான் ஒருவனைத் தவிர வேறு எவர்க்கும் ஶேஷபூ4தனல்லன் என்று தெரிவிக்கும் உகாரத்தாலே, மற்றொருவர்க்கும் ஆகாமல் எம்பெருமான் ஒருவனுக்கே தன்னிஷ்டப்படி ஆளலாம்படியிருக்கையாகிற ரக்ஷண ப2லத்தைச் சொல்லுகிறது என்று கருத்து.

ஆக, இந்த மந்த்ரத்தில் முதல்பதமான ப்ரணவத்தின் பொருளை இதுவரையில் அருளிச்செய்தாராயிற்று.

இனி, ப்ரணவத்தை விவரிக்கும் மற்ற இரண்டு பதங்களுக்கும் பொருள் அருளிச்செய்யத் தொடங்கி மந்த்ரஶேஷம் (திருமந்திரத்தின் பின்னிரண்டு பதங்களும் அடங்கிய எஞ்சியபகுதி) இந்த ப்ரணவத்திற்கு விவரணமாயிருக்கும்படியை அடுத்த சூர்ணையில் அருளிச்செய்கிறார்.

சூ 75: இனிமேல் ப்ரணவத்தை விவரிக்கிறது.

விவரணம்: விவரணமாவது—விவரிக்கப்படும் அர்த்தத்திற்குத் தேவையான அர்த்தத்தைச்சொல்லிக்கொண்டு அதில் சொல்லப்பட்ட அர்த்தத்தைத் தெளிவுபடுத்துகையாகும், இவ்விஷயத்தை, "இவ்விடத்தில்விவரணமாகிறது, ப்ரஸ்துமான அர்த்த2த்துக்கு உபயுக்தமான அர்த்த2த்தைச் சொல்லிக் கொண்டு பூர்வோக்தமான அர்த்த2த்தை விஶதீகரிக்கை" என்று தீ3பப்ரகாஶத்திலும்.

உக்தார்த்த₂ விஶத்₃கார யுக்தார்த்த₂ந்தர போ₄த₄நம் ।
மதம் விவரணம் தத்ர மஹிதாநாம் மநீஷிணாம் ॥
[வாதி₃கேஸரிகாரிகை]

[சொல்லப்படும் பொருளைத் தெளிவுபடுத்தி, தக்க பொருள்களை உணர்த்துவதே வியாக்யானமாகும் என்று மேன்மைமிக்க பெரியோர்களின் கொள்கை] என்று ரஹஸ்யத்ரய விவரண நூலிலும் வாதிகேஸரி ஜீயர் அருளிச்செய்தாரன்றே.

ப்ரணவத்தை மற்ற இரண்டு பதங்கள் விவரிப்பது எப்படி? என்னும் கேள்விக்கு அடுத்த சூர்ணையில் விடை அருளிச் செய்கிறார்.

**ஸூ 76: உகாரத்தை விவரிக்கிறது நமஸ்ஸு; அகாரத்தை விவரிக்கிறது நாராயணபதம்; மகாரத்தை விவரிக்கிறது சதுர்த்தி₂; நாரபத₃ மென்றுஞ் சொல்லுவர்கள்.**

விவரணம்: அதாவது— (1) ஏகாரப்பொருளையுடைய உகாரம் ஜீவன் எம்பெருமானைத் தவிர வேறு எவருக்கும் அடிமைப்பட்டவன் அல்லன் என்று காட்டுகிறது. 'பிறர்க்கு அடிமைப்பட்டவன் அல்லன்' என்று கூறும்போது 'பிறர்' என்பதில் தானும் சேர்த்திருக்கையாலே "தனக்குத்தானே வசப்பட்டவன், அதாவது ஸ்வதந்த்ரமானவன்" என்னும் எண்ணத்தையும் இவ்வுகாரம் தவிர்த்த போதிலும், "நம:" என்னும் இரண்டாவது பதம் இதை வெளிப்படையாகச் சொல்லிக்கழிக்கிறதாகையாலே உகாரத்தை 'நம:' என்னும் பதம் விவரிக்கிறது. (2) அகாரத்தில் சொல்லப்பட்ட ரக்ஷகனான எம்பெருமான் யார் என்பதை அவனுடைய தனிப்பெயரைச் சொல்லிக் காட்டுகையாலும், 'நார' ஶப்₃த₃த்தாலே ரக்ஷிக்கப்படும் சேதநாசேதநங்களைச் சொல்லுகையாலும், 'அயந' ஶப்₃த₃த்தாலே ரக்ஷிப்பதற்குத் துணைபுரியும் வாத்ஸல்யம், ஸௌலப்₄யம் முதலான நீர்மைக் குணங்களையும் ஜ்ஞானம், ஶக்தி முதலான மேன்மைக்குணங்களையும் சொல்லுகையாலும், 'நாராயண' ஶப்₃த₃த்தின் ஸமாஸங்களாலே 'அந்தர்யாமியாகவும், உபாயமாகவும் எல்லா உறவாகவும் இருந்து ரக்ஷிப்பவன்' என்று கூறுகையால் ரக்ஷிக்கும் முறையையும் தெளிவாகச் சொல்லுகையாலும் அகாரத்தை நாராயணபதம் விவரிக்கிறது.

(8) நாகிஞ்சித்குர்வத: ஶேஷத்வம் [மீமாம்ஸகர் வழக்கு]
[கைங்கர்யம் செய்யாதவனுக்கு ஶேஷத்வமில்லை]

அகிஞ்சித்கரஸ்ய ஶேஷத்வாநுபபத்தி: [மீமாம்ஸகர் வழக்கு]

[கைங்கர்யம் செய்யாதவனுக்கு ஶேஷத்வம் பொருந்தாது] என்கிற மீமாம்ஸகர்களுடைய வழக்கின்படி கைங்கர்யம் செய்யாதபோது ஶேஷத்வம் ஸித்திக்காதாகையாலே. அந்த ஶேஷத்வம் ஸித்திப்பதற்கு உதவிபுரியும் கைங்கர்யத்தைச் சொல்லுகிற "ஆய" என்கிற நாலாம் வேற்றுமை அந்த ஶேஷத்வத்திற்கு இருப்பிடமான ஜீவாத்மாவைச் சொல்லும் 'ம'காரத்தை விவரிக்கிறது. (4) மகாரத்தால் சொல்லப்படும் ஆத்மா நித்யமானது என்பதையும், ஒருபடிப்பட்டிருப்பது என்பதையும், ஆத்மாக்கள் பலர் முதலான விஷயங்களையும் சொல்லுகையாலே நரஸமூஹங்களைச் சொல்லும் 'நாரபதம்' மகாரத்தை விவரிக்கிறது என்றும் சொல்லுவர்கள் என்று கருத்து.

ப்ரணவத்தில் 'அ' 'உ' 'ம' என்னும் வரிசையிலே எழுத்துக்கள் அமைந்திருக்கும்போது மற்ற இரண்டு பதங்களையும் அதே வரிசையில் விவரிக்காமல் மாறுன வரிசையில் விவரிப்பதற்குக் கருத்து என்ன என்பதை அடுத்த சூர்ணையில் அருளிச்செய்கிறார்.

ஸூ 77: அடைவே விவரியாதொழிகிறது - விரோதி₄ போய் அநுப₄விக்கவேண்டுகையாலே.

விவரணம்: அதாவது—முறைப்படி விவரிப்பதாயிருந்தால் முதலில் அகாரத்தின் விவரணமான நாராயண பத₃த்தைச் சொல்லவேண்டும். அப்படி விவரிக்காமல், முதலில் அடுத்தபதமான உகாரத்தை இரண்டாவது பதமான நமஸ்ஸாலே விவரித்ததற்குக் கருத்து பின்வருமாறு:— அகாரவிவரணமான நாராயணபதத்தில் எம்பெருமானை அனுபவித்துக் கைங்கர்யம் செய்ய வேண்டும் என்னும் விஷயம் சொல்லப்பட்டது. அந்த அநுப₄வகைங்கர்யங்களுக்குத் தடையான அஹங்காரம் மமகாரம் முதலானவை 'நம:' என்னும் இரண்டாவது பத₃த்தாலே கழிக்கப்பட்டபின்பே அந்த அநுப₄வகைங்கர்யங்கள் நடக்கவேண்டும். அதற்காகவே அந்த அஹங்கார மமகாரங்களைக் கழிக்கும் உகார விவரணமான நமஸ்ஸை முதலில் சொல்லி. அதற்குப் பிறகு அகார விவரணமான நாராயண பதத்தைச் சொல்லுகிறது என்று கருத்து.

இனி திருமந்திரத்தின் நடுப்பதமான நமஸ்ஸுக்குப் பொருள் அருளிச்செய்யத் தொடங்கி, அந்தப் பதத்திற்குள் இரண்டு பதங்கள் இருப்பதை அடுத்த சூர்ணையில் அருளிச்செய்கிறார்.

[redacted]மூ 78: நமஸ்ஸு "ந" என்றும் "ம:" என்றும் இரண்டு பதம்.

விவரணம்: 'நம:' என்னும் இரண்டாவது பதம் 'ந' என்றும் 'ம:' என்றும் இரண்டு பதங்களைத் தனக்குள் கொண்டது என்று கருத்து.

இந்த இரண்டு பதங்களுக்கும் அர்த்தம் என்ன என்னும் கேள்விக்கு விடையருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

மூ 79: 'ம:' என்கிற இத்தால் 'தனக்கு உரியன்' என்கிறது; 'ந' என்று அத்தைத் தவிர்க்கிறது.

விவரணம்: அதாவது ஆறும் வேற்றுமையுடைய 'ம:' என்னும் பதம் — 'ஜீவன் ஈஶ்வரனுக்கே உரியவன்' என்று கூறும் (அகாரத்தில் தொக்கு நிற்கும்) நான்காம் வேற்றுமையின் பொருளுக்கு மாறாகத் 'தனக்குத் தான் உரியவன்' என்னும் பொருளைக் கூறுகிறது. ஆனால் 'ந' என்னும் பதமோ எதிர்மறைப் பொருளைச் சொல்லுவதாகையாலே 'தனக்குரியன்' என்னும் பொருளைத் தடுத்து, 'தனக்குத் தான் உரியவன் அல்லன்' என்று தெரிவிக்கிறது.

இவ்விரண்டு பதங்களாலும் சொன்ன அர்த்தத்தைச் சேர்த்து அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

மூ 80: ஆக, 'நம:' என்கிற இத்தால், 'தனக்கு உரியனன்று' என்கிறது.

விவரணம்: ஆக 'நம:' என்னும் இவ்விரண்டாவது பதம் சேதனன் தனக்குத்தான் உரியவனல்லன் என்பதை அறிவிக்கிறது என்று கருத்து. 'நம:' என்னும் இப்பதத்தில் அடங்கிய 'ந' 'ம:' என்னும் இரு எழுத்துக்களுக்கும் அவை அமைந்திருக்கும் வரிசைப்படி பொருள் கூறாமல், மாற்றிக் கூறியதற்குக் கருத்து என்னவெனில், ஒரு பொருளை இல்லையென்று தள்ளும்போது தள்ளப்படும் அப்பொருளை முதலில்சொல்லி அதற்குப்பிறகே அதை இல்லையென்று தள்ளுவது பொருந்துமாகையாலே இப்படி மாற்றி அர்த்தம் கூறுகிறார். இப்படியல்லாமல் வரிசைப்படியே பொருள் கூறுவதும் உண்டு. "வீடுமின் முற்றவும்" [திருவாய் 1-2-1]

என்னுமிடத்தில் ஆழ்வார் முதலில் "விடுமின்" என்று தள்ளச் சொல்லி, அதற்குப் பிறகு 'முற்றவும்' என்று தள்ளப்படும் விஷயத்தைச் சொன்னது போலே, விடவேண்டியது மிக முக்கியம் என்று வலியுறுத்துவதற்காக 'ந' என்னும் பதத்தை முதலிலும் 'ம:' என்பதை அடுத்தபடியும் 'நம:' ஶப்₃த₃த்தில் கூறுகிறது என்றும் நிர்வஹிக்கலாம். இந்த நிர்வாஹத்தைப் பிள்ளைலோகாசார்யரே தம்முடைய 'பரந்தபடி'யில் அருளிச்செய்துள்ளார்.

'நம:' என்னும் பதம் ப்ரணவத்திலுள்ள உகாரத்தை விவரிக்கிறது என்று முன்னமே கூறப்பட்டது. உகாரமும் 'ஜீவன் பிறர்க்கும் தனக்கும் உரியவனல்லன்' என்னும் அர்த்த₂த்தைச் சொல்லுகிறது; இந்த 'நம:' பத₃ம் பிறர்க்கு உரியவனல்லன் என்பதை விவரிக்காமல் 'தனக்கு உரியவனல்லன்' என்பதை மாத்திரம் விவரிப்பதற்கு என்ன காரணம் என்னும் கேள்விக்கு அடுத்த சூர்ணையில் பதில் அருளிச்செய்கிருர்.

மூ 81: பிறர்க்கு உரியனன்ன அன்று தன் வைலக்ஷண்யத்தைக் காட்டி மீட்கலாம்; தனக்கென்று மன்று யோக்₃யதையுங்கூட அழியும்.

விவரணம்: அதாவது—இந்த ஜீவன் மற்றவர்களுக்கு அடிமைப்பட்டபோது ஒருவனுக்கு அடிமைப்படுவதற்கு இசைந்திருக்கையாலே அந்த மற்றவர்களைக்காட்டிலும் தனக்கு உள்ளதான ஸர்வ காரணத்வம் (அனைவருக்கும் காரணமாயிருக்கை) ஸர்வ ரக்ஷகத்வம் (அனைவரையும் காப்பாற்றுபவனுயிருக்கை) ஸர்வ ஶேஷித்வம் (அனைவருக்கும் ஸ்வாமியாயிருக்கை) முதலான தன்னுடைய சிறப்புகளைக் காட்டி எம்பெருமான் அவனை மற்றவர்களுக்கு அடிமையாயிருக்கும் நிலையை நீக்கித் தனக்கு அடிமையாகும்படி செய்யலாம்.

த்வம் மேஹம் மே குதஸ்தத் தத₃பி குத இத₃ம் வேத₃ மூலப்ரமாணத்
ஏதச்சாநாதி₃ ஸித்₃த₄ா த₃நுப₄வவிப₄வாத் ஸோபி ஸாக்ரோஶ ஏவ |
க்வாக்ரோஶ: கஸ்ய கீ₃தாதி₃ஷு மம விதி₃த: கோத்ர ஸாக்ஷீ ஸுதீ₄: ஸ்யாத்
ஹந்த த்வத்பக்ஷபாதீ ஸ இதி ந்ருகலஹே ம்ருக்₃ய-
மத்₄யஸ்த₂வத்த்வம் || [பட்டர் முக்தகம்]

[ஈஶ்வரன் — நீ எனக்கு (உரியவன்); ஜீவன் — நான் எனக்கு (உரியவன்) ஈச் - அது எப்படி? ஜீவன்:-நீர் சொல்லியதுதான் எப்படி? ஈச்: - நான் சொன்னது வேத$_3$மூலமான ஓங்காரமாகிற ப்ரமாணத்தாலே (நிருபிக்கப்படுகிறது); ஜீவன்:-நான் சொல்லியதும் அநாதி$_3$யான அநுப$_4$வப்பெருமையால் ஸித்$_3$தி$_4$க்கிறது. ஈச்:-அந்த அநுப$_4$வம் ஆக்ஷேபிக்கப்பட்டிருக்கிறது. ஜீவன்:- யார் எங்கு ஆக்ஷேபித்தார்கள்? ஈச்:- கீ$_3$தை முதலிய ஶாஸ்த்ரங்களில் என ஆக்ஷேபம் ஸம்ப்ரஸித்$_3$த$_4$ம். ஜீவன்:- அதற்கு ஸாக்ஷி யார்? ஈச்:- ஞானியே ஸாக்ஷியாவான். ஜீவன்:- ஐயோ! உன்னிடம் பக்ஷபாதமுள்ள அவன் எப்படி ஸாக்ஷியாக முடியும்? என்று இவ்வண்ணமாக ஜீவனோடு ஏற்பட்ட வழக்கில் (ஸாக்ஷியில்லாமையால்) ஸத்யம் செய்து உம்கட்சியை ஸ்தாபித்துக் கொள்ளுகிறவர்போலே தேவரீர் (துளஸிமாலையணிந்து திருமஞ்சனம் செய்து கொள்ளுமவராய்க்) காட்சியளிக்கிறீர்.] என்கிறபடியே 'எனக்கு நானே உரியவன்' என்று இந்த ஜீவன் நினைக்கும்போது நீ என்னுடையவன்' என்று எம்பெருமான் சொன்னால், 'நான் எனக்கே உரியவன்' என்று கூறுவானேயொழிய அவனுக்கு அடிமைப்பட இசைய மாட்டான். ஆகையால் இவனைத் தன் வசப்படுத்துவதற்குத் தகுதியும் இல்லாமல் போய்விடும் என்று கருத்து.

இந்த நமஸ்ஸால் செய்யப்படும் காரியம் என்ன? என்னும் கேள்விக்கு அடுத்த சூர்ணையில் பதில் அருளிச்செய்கிறார்.

மூ 82: இத்தால் விரோதி$_4$யைக் கழிக்கிறது.

விவரணம்: இந்த 'நம:' என்னும் பதத்தால் ஜீவாத்மாவுக்குள்ள தடையைக் கழிக்கிறது என்று கருத்து.

அத்தடைதான் ஒன்றோ பலவோ? என்னும் கேள்விக்கு விடையளிக்கிறார் அடுத்த சூர்ணையில்.

மூ 83: விரோதிதான் மூன்று.

விவரணம்: ஜீவனுக்குள்ள தடை மூன்று என்று கருத்து.

அந்த மூன்று தடைகளும் எவை? என்னும் கேள்விக்கு விடை அளிக்கிறார் அடுத்த சூர்ணையில்.

ஸூ 84. அதாவது—ஸ்வரூபவிரோதியும் உபாய விரோதியும், ப்ராப்யவிரோதியும்,

விவரணம்: முதல் பதமான ப்ரணவத்தில் ஆத்ம ஸ்வரூபம் எம்பெருமானுக்கே அடிமைப்பட்டது என்று சொல்லப்பட்டது. இரண்டாவது பதமான இந்த நமஸ் ஸப்தத்தில் தாத்பர்யார்த்தமாக 'என் கார்யத்தை நானே செய்துகொள்ள உரியவனல்லேன்' என்று கூறுகையாலே, எம்பெருமானே உபாயம் என்னும் அர்த்தம் உணர்த்தப்படுகிறது. மூன்றாவது பதத்தில் 'நாராயணனுக்குக் கைங்கர்யம் செய்வதே பலம்' என்று உணர்த்தப்படுகிறது. நடுவில் இருக்கும் இந்த நமஸ்ஸப்தமும் தான் உபாய விரோதியைக் கழிப்பதோடன்றி முன்பதத்தோடு சேர்த்துப்பார்க்கும்போது ஸ்வரூப விரோதியையும் பின் பதத்தோடு சேர்த்துப் பார்க்கும்போது ப்ராப்யமாகிற பலத்திற்கு விரோதியையும் கழிக்கக்கூடியதாயிருக்கிறது என்றுகருத்து. காக்கையின் ஒரே கண்மணி அதன் இரண்டு கண்களிலும் தொடர்புகொண்டு பார்ப்பதுபோலே ஒருபதம் மற்றொரு பதத்தோடு தொடர்பு கொள்வதைக் காகாக்ஷி ந்யாயம் என்று கூறுவர்.

இந்த மூன்று விரோதியும் கழிகையாவது என்ன? என்னும் கேள்விக்கு வரிசையாக மூன்று வாக்கியங்களில், அடுத்த சூர்ணையில் பதில் அருளிச்செய்கிறார்.

**ஸூ 85: ஸ்வரூபவிரோதி கழிகையாவது—"யானே நீ என்னுடைமையும் நீயே" என்றிருக்கை; உபாயவிரோதி கழிகையாவது—"களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்" என்றிருக்கை; ப்ராப்ய விரோதி கழிகையாவது—"மற்றை நங்காமங்கள் மாற்று" என்றிருக்கை.**

விவரணம்: (1) "யானே எனக்குரியன்" என்றிருக்கும் அஹங்காரமும் "என்தனதே இப்பொருள்கள்" என்று எண்ணும் மமகாரமும் ஸ்வரூபவிரோதியாகும். இதையே நம்மாழ்வார் "யானே என்னை அறியகிலாதே யானே என் தனதே என்றிருந்தேன்" [திருவாய் 2-9-9] என்று அருளிச்செய்தார். அது கழிகையையும், அடுத்த அடியில் "யானே நீ என்னுடைமையும் நீயே" [யானும் எம்பெருமானுக்கே உரிமைப்பட்டவன்; என்னுடைமையும் அவனுக்கே உரிமைப்பட்டது] என்று அருளிச்செய்கையாலே இதுவே ஸ்வரூபவிரோதிகழிகையாகிறது. (2) 'எம்பெருமானே உபாயம்'

என்னும் எண்ணத்திற்கு மாருகத் தன்னைக் காத்துக் கொள்ளத் தான் முயல்வது உபாய விரோதியாகும். அது கழிகையாவது இவ்வண்ணம் தன்னைக்காத்துக்கொள்ளத் தான் முயலாமல், "களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்" [திருவாய் 5—8—8] என்று ஆழ்வார் அருளிச்செய்தபடியே "நீ என் துன்பத்தைப் போக்கிஞலும் சரி; போக்காவிட்டாலும் சரி. துன்பத்தைப் போக்கிக்கொள்ள வேறொருவனைப் பற்றமாட்டேன்" என்று இருக்கை. (3) எம்பெருமான் உகப்பையே உத்தேசித்துக் கைங்கர்யம் செய்வது ப்ராப்யமாகும்; கைங்கர்யம் செய்வதைத் தன் உகப்புக்கும் உறுப்பாக நினைப்பது அதற்கு விரோதியாகும். அது கழிகையாவது "உனக்கே நாம் ஆட்செய்வோம் மற்றை நம் காமங்கள் மாற்று" [திருப்பாவை 30] என்று ஆண்டாள் அருளிச்செய்தபடியே "உனக்குக் கைங்கர்யம் செய்யும்போது உன்னுடைய உகப்புக்கு மாறுபட்ட என்னுடைய ஆசைகளை மாற்று" என்று இருக்கை என்று கருத்து.

இவ்வண்ணமாக, அவனுக்கே அடிமைப்பட்டிருக்கையாகிற ஸ்வரூபம், அவனையே தஞ்சமாகக் கொண்டிருக்கையாகிற உபாயம், அவனுகப்புக்கே கைங்கர்யம் செய்கையாகிற புருஷார்த்தம் ஆகிய மூன்றிற்கும் விரோதியாயிருப்பது இந்த ஜீவனுடைய அஹங்கார மமகாரங்களேயாகையாலே, அதனுடைய கொடுமையையும் அவை நீங்கிஞல் உண்டாகும் நன்மையையும் அடுத்த சூர்ணையில் அருளிச்செய்கிருர்.

மூ 86; 'ம:' என்கை ஸ்வாதந்த்ர்யம். 'நம:' என்கை ஸ்வரூபோஜ்ஜீவநம்.

விஷயஸ்ச அத்ர ஹேது—
சேதநஸ்ய யதா அபாயாத் ஸ்வாத்மநி ஸ்வீயே ச வஸ்துநி |
மம இத்யக்ஷரத்வந்த்வம் ததா மமதயோச்யதே ||
[அஹிர்புத்ந்ய ஸம்ஹிதை 52-25]

[தன்னிடத்திலும் தன்னை ஒட்டியிருக்கும் பொருள்களிடத்திலும் என்னுடையது என்னும் எண்ணம் எப்போது ஏற்படுகிறதோ, அப்போது 'மம' (என்னுடையது) என்னும் அவ்விரண்டு எழுத்துக்களும் (ஜீவனுடைய) (அஹங்கார) மமகாரத்தைக் காட்டுகின்றன.] என்கிறபடியே 'ம:' என்னும் பதத்திலே நான், எனது

என்னும் அஹங்கார மமகாரங்கள் இரண்டும் உண்டாகையாலே அவற்றுடன் சேர்ந்திருக்கை பரமாத்மாவிற்கு அத்யந்த பாரதந்த்ரமான இந்த ஆத்மாவை அழிக்கக்கூடியது. 'நம:' என்று அந்த அஹங்கார மமகாரங்களோடு தொடர்பற்றிருப்பது இந்த ஸ்வஸ்வரூபத்தை உய்விக்கக்கூடியது என்று கருத்து.

த்3வ்யக்ஷரஸ்து ப4வேந் ம்ருத்யுஸ் த்ர்யக்ஷரம்
ப்3ரஹ்மண: பத3ம் |

மமேதி த்3வ்யக்ஷரோ ம்ருத்யுர் ந மமேதி ச ஶாஶ்வதம் ||
[பா4ரத சாந்தி 13-4]

[இரண்டு அக்ஷரங்கள் ஆத்மாவுக்கு யமன்; மூன்று அக்ஷரங்களோ அழிவின்மையைத் தருவது (அவையெவை யென்னில்) 'மம' என்னும் இரண்டு அக்ஷரமும் ஆத்மாவை அழிப்பது. 'ந மம' என்னும் மூன்றெழுத்துக்கள் அழிவின்மையை அளிப்பது] என்று பா4ரதத்தில் சொல்லப்பட்டதன்றோ.

இவ்வண்ணமாக ஸ்வரூபம் உபாயம் புருஷார்த்த2ம் ஆகிய மூன்றுக்கும் விரோதிகளைக் கழிப்பதோடல்லாமல் 'நம:'பத3ம் இந்த மூன்றையும் காட்டுவதையும் செய்கிறது என்று அடுத்த சூர்ணையில் அருளிச்செய்கிறார்.

**மூ 87: இதுதான் ஸ்வரூபத்தையும் உபாயத்தையும் ப2லத்தையும் காட்டும்.**

விவரணம்: இந்த 'நம:'பத3ம் ஸ்வரூபம், உபாயம், புருஷார்த்த2ம் ஆகிய மூன்றையும் தெளிவாக வெளிப்படுத்துகிறது என்று கருத்து.

இவ்விஷயத்தை அடுத்த சூர்ணையில் மூன்று வாக்யங்களாலே விவரிக்கிறார்.

**மூ 88: "தொலைவில்லி மங்கலந்தொழும்" என்கையாலே ஸ்வரூபம் சொல்லிற்று. "வேங்கடத்து உறைவார்க்கு நம" என்கையாலே உபாயம் சொல்லிற்று. "அந்தி தொழுஞ் சொல்" என்கையாலே ப2லம் சொல்லிற்று.**

விவரணம்: இந்த "நம:"பதம் ஸ்வரூபம், உபாயம், பலம் ஆகிய மூன்றையும் தெளிவாக வெளிப்படுத்துகிறது என்பது நம்மாழ்வாரின் மூன்று பாசுரங்களிலிருந்து விளங்குகிறது.

(1) "தொலைவில்லி மங்கலம் தொழும் இவளை" [திருவாய் 6—5—1] என்று நமஸ் ஸப்தத்தின் பொருளைச்சொல்லும் 'தொழும்' என்னும் பதத்தாலே ஆழ்வார்தாம் அவனுக்கு அடிமைப்பட்டிருப்பதோடல்லாமல், அவன் உகந்தருளின நிலமான தொலைவில்லி மங்கலத்துக்கே அடிமைப்பட்டிருப்பதாகக் கூறுகையாலே இந்த நம:பதம் ஸ்வரூபத்தைச் சொல்லுகிறது என விளங்குகிறது,

(2) "வேங்கடங்கள் மெய்ம்மேல் வினை முற்றவும்
தாங்கள் தங்கட்கு நல்லனவே செய்வார்
வேங்கடத்துறைவார்க்கு நமவென்ன
லாம் கடமை — அது சுமந்தார்கட்கே"

[திருவாய் 3—3 6]

என்னும் பாட்டிலே ஆழ்வார் முதல் அடியாலே சேதனனுடைய பாபங்கள் நீங்குவதைச்சொல்லி, அதற்கு உபாயத்தைச்சொல்லும் போது "வேங்கடத்துறைவார்க்கு நமவென்னல் ஆம்கடமை" என்று "நமஸ்ஸப்தத்தாலே திருவேங்கடமுடையானுக்கு அடிமைப் பட்ட நான் எனக்குரியேனல்லன்" என்று தன்னைக்காத்துக் கொள்வதற்குத் தான் முயலத் தகுதியில்லாத ஸ்வரூபபாரதந்த்ர்யத்தைச் சொல்லுகையால் அவனே உபாயம் என்று தேறுகையாலே நமஸ்ஸப்தம் உபாயத்தைச் சொல்லுகிறது என்று கருதது.

(3) "உண்டு களித்தேற்கு உம்பர் என்குறை?—மேலைத்
தொண்டு உகளித்து அந்திதொழும் சொல்லுப்பெற்றேன்"

[திருவாய் 10—8—7]

என்னும் பாட்டில் நம்மாழ்வார் "மேலைத்தொண்டு உகளித்து" என்று எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்வதில் சுவைமிகுவதைச் சொல்லி, அப்பொழுது அது தன்னுடைய ஆனந்தத்துக்கு உறுப் பாகக் கூடாது என்பதை "முக்தாநாம் லக்ஷணம் ஹ்யேதத்..... நம இத்யேவ வாதிந:" ["நம:" என்றுசொல்லுவதே முக்தர்களின் லக்ஷணம்] என்கிறபடியே தம் உகப்புக்கு உறுப்பாகதை முக் தர்கள் 'நம:' என்று தடுப்பதை "அந்தி தொழும் சொல்" என்

னும் தொடராலே காட்டுகையாலே "தொழுஞ்சொல்" எனப்படும் நமஸ்ஸப்தமும் அவனுகப்புக்கே உறுப்பாகும் கைங்கர்யமாகிற பலத்தையும் காட்டுகிறது என்று கருத்து.

இந்த "நம:"பதத்திலே எம்பெருமானுடைய அடியார்க்கு ஆட்பட்டிருக்கையும் தாத்பர்யார்த்தமாக அநுஸந்திக்கத்தக்கதாகையாலே அதனை அடுத்த சூர்ணையில் அருளிச்செய்கிறார்.

சூ 89: "உற்றதும் உன்னடியார்க்கடிமை" என்கிறபடியே இதிலே பாகவதசேஷத்வமும் அநுஸந்தேயம்.

விவரணம்: அதாவது — "உற்றதும் உன்னடியார்க்கடிமை— மற்றெல்லாம் பேசிலும் நின் திருவெட்டெழுத்தும் கற்று" [பெரிய திரு 8-10-3] எனனும் பாசுரத்தில் திருமங்கையாழ்வார் "திருவெட்டெழுத்தாகிற திருமந்த்ரத்தில் பல அர்த்தங்கள் சொல்லப்பட்டிருந்தபோதிலும், நான் அதிஸாரமாகக் கைக்கொண்டது உன அடியார்களுக்கு அடிமைப்பட்டிருப்பதே" என்று அருளிச்செய்கையாலே அஹங்கார மமகாரங்கள் நீங்கி பாகவதசேஷத்வம் உள்ளபடி வெளிப்படுகிற இந்த 'நம:' பதத்திலே அதன எல்லை நிலமாக பாகவத சேஷத்வமும் (அடியார்க்கு ஆட்பட்டிருக்கையும்) தாத்பர்யார்த்தமாக அநுஸந்திக்கத்தக்கது என்று கருத்து.

இப்படி தாத்பர்யார்த்தமாக அநுஸந்திக்கப்படும் பாகவத சேஷத்வத்தை இந்த 'நம:' பதத்தில் அல்லாமல் ப்ரணவத்தில் உள்ள அகார உகாரங்களில் அநுஸந்திப்பாரும் உண்டு என்பதை அடுத்த சூர்ணையில் அருளிச்செய்கிறார்.

சூ 90: இது அகாரத்திலே என்றும் சொல்லுவர்கள்: உகாரத்திலே என்றும் சொல்லுவர்கள்.

விவரணம்: அதாவது — ப்ரணவத்தில் அகாரத்தில் தொக்கு நிற்கும் நாலாம்வேற்றுமையாலே ஜீவாத்மா எம்பெருமானுக்கு அடிமைப்பட்டவன் என்று சொல்லுகையாலே அதன் எல்லை நிலமான இந்த பாகவத சேஷத்வம் அகாரத்திலேயே தாத்பர்யார்த்தமாக அநுஸந்திக்கத்தக்கது என்றார் சிலர் சொல்லுவர்கள். உகாரம் "எம்பெருமானுக்கே அடிமைப்பட்டவன்" என்று

அநந்யார்ஹ ஶேஷத்வத்தைச் சொல்லுகையாலும், எம்பெருமானுடைய அடியார்க்கும் ஆட்பட்டிருப்பது அந்த அநந்யார்ஹ ஶேஷத்வத்திற்கு எல்லை நிலமாகையாலும் இந்த பாகவத ஶேஷத்வத்தை உகாரத்திலே தாத்பர்யார்த்தமாக அநுஸந்திக்கவேண்டுமென்றும் சிலர் சொல்லுவார்கள் என்று கருத்து. ஶப்தசக்தியா லல்லாமல் தாத்பர்யார்த்தமாகக் கூறுகையாலே அந்த உகாரங்களிலும் இதை அநுஸந்திக்கலாமென்றபடி. அஹங்கார மமகாரங்களாகிற விரோதி கழிந்த இடமாகிற இந்த 'நம:' பதத்திலே தாத்பர்யார்த்தமாக இதை அநுஸந்திப்பதே தக்கது என்று கருத்து.

இந்த நமஶ்ஶப்தத்தின் பொருளை அறிவதற்கு முன் ஜீவனுக்கு உள்ள நினைவைக் காட்டிலும் அதை அறிந்த பின்பு விளையும் நினைவின் சிறப்பை அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

சூ 81: "ஈஶ்வரன் தனக்கேயாயிருக்கும்; அசித்துப்பிறர்க்கேயாயிருக்கும்; ஆத்மா தனக்கும் பிறர்க்கும் பொதுவாயிருக்கும்" என்று முற்பட்ட நினைவு; அங்ஙனன்றிக்கே, அசித்தைப்போலே பிறர்க்கேயாக எண்ணக்கொள்ளவேணுமென்கிறது நமஸ்ஸால்.

விவரணம்: அதாவது—

ஸ்வரூபம் ஸ்வாதந்த்ர்யம் பகவத இதம் சந்த்ரவதநே
த்வதாஶ்லேஷோத்கர்ஷாத் பவதி கலு நிஷ்கர்ஷ ஸமயே |
த்வமாஸீர் மாத: ஶ்ரீ: கமிதுரிதமித்தந்த்வவிபவ:
ததந்தர்பாவாத் த்வாம் ந ப்ருதகபிதத்தே ஶ்ருதிரபி ||
[ஶ்ரீகுணரத்நகோஶம் 28].

[சந்திரனையொத்த முகமுடைய ஸ்ரீதேவித்தாயே! பகவானுடைய இந்த ஸ்வரூபமும் ஸ்வாதந்த்ரியமும் பரதத்வ நிர்ணய ஸமயத்தில் உன்னோடு சேர்ந்திருக்கும் பெருமையைக்கொண்டு அறுதியிடப்படுகிறது. உனக்கு இனியவனான பிரானுக்கு நீர் ஸ்வரூபநிருபக தர்மமாயிருக்கும் பெருமையையுடையீர். (இப்படி) அவரோடு ஒன்றி நிற்கையால் தேவரீரை வேதமும் தனித்துப் படிப்பதில்லை,] என்கிறபடியே ஸ்வாதந்த்ரியத்தையே இயல்வாகக்கொண்ட ஸர்வேஶ்வரன் அனைத்தையும் தன் விருப்பப்படியே நடத்துபவனாய் இருப்பான். அறிவற்றதாகையாலே தன் விருப்பம் என்பதற்குத்

ஸூ 93: அழிக்கைக்கு ஹேது—கீழே சொல்லிற்று; மேலுஞ்சொல்லும்.

விவரணம்: அதாவது—ஈச்வரன் வலியவந்து பக்த பரதந்த்ரனாகப் பரிமாறும்போது ஜீவன் தன் தாழ்வை அநுஸந்தித்து ஈச்வரனுடைய பரிமாற்றத்தை இசையாமல் அவனுடைய அநுபவத்தை அழிப்பதற்குக் காரணம்—'அடிமைத் தன்மையே ஆத்மாவுக்கு இயல்வு' என்று கீழ்ப்பதமான ப்ரணவத்திலும் சொல்லிற்று. மேல் பதமான நாராயண பதத்திலும் 'ஆய' என்கிற நாலாம் வேற்றுமையாலே ஜீவன் கைங்கர்யம் செய்வதையே இயல்வாக உடையவன் என்று சொல்லுகையாலே மேல் பதத்திலும் இப்படி அழிக்கைக்குக் காரணத்தைச்சொல்லும் என்று கருத்து.

இனி நமஶ்ஶப்தத்தாலே அறிவிக்கப்படும் பாரதந்த்ர்ய நிலையினுடைய பெருமையைப் பலவிதமாக அருளிச்செய்துகொண்டு இப்பதத்தின் பொருளை நிறைவுபடுத்துகிறார் அடுத்த சூர்ணையில்,

ஸூ 94: இந்நினைவுபிறந்தபோதே க்ருதக்ருத்யன்; இந்நினைவில்லாதபோது எல்லா துஷ்க்ருதங்களும க்ருதம்; இந்நினைவிலே எல்லா ஸுக்ருதங்களும் உண்டு, இது இன்றிக்கே இருக்கப்பண்ணும் யஜ்ஞாதிகளும் ப்ராயச்சித்தாதிகளும் நிஷ்ப்ரயோஜனங்கள்; இது தன்னாலே எல்லாபாபங்களும் போம், எல்லாபலங்களும் உண்டாம்.

விவரணம்: 'இந்நினைவு பிறந்த போதே க்ருதக்ருத்யன்' என்றது—''தனக்கேயாக எனைக்கொள்ள' [திருவாய் 2-9-4] வேணும்: இந்த அசித்தைப்போலே பரதந்த்ரன் நான'' என்ற நினைவு பிறந்தவுடன் தன்னுடைய தன்மைக்கு உறுப்பாக இவன் செய்யவேண்டியது அனைத்தையும் செய்துமுடித்தவனுவான் என்று கருத்து.

'இந்நினைவு இல்லாதபோது எல்லாதுஷ்க்ருதங்களும் க்ருதம்' என்றது—''நான் எம்பெருமானுக்குப் பரதந்த்ரன்'' என்னும் இந்நினைவு இல்லாதபோது.

யோந்யதா ஸந்தமாத்மாநமந்யதா ப்ரதிபத்யதே।
கிம் தேந ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா॥
[பார ஆதி 74-28]

[பகவானுக்கு அடிமைப்பட்டிருக்கும் ஆத்மாவை, தன் வசப்பட்டதாக எண்ணுகிறானே. ஆத்மாபஹாரத் திருடும் அந்தத் திருடனால் என்ன பாபந்தான் செய்யப்படவில்லை ]

"இது தன்னாலே எல்லாப் பாபங்களும் போய், எல்லாப்பலங்களும் உண்டாய." என்றது இந்தப் பாரதந்த்ரிய நினைவாலே எம்பெருமான் இவனிடம் மிகச்சிறந்த அருளைப் பொழிகையாலே அவனுடைய கோபரூபமான எல்லாப்பாபங்களும் போய் விடும். "உன்னடியார்க்கு என்செய்வன் என்றேயிருத்தி நீ" [பெரிய திரு. 58] என்கிறபடியே எம்பெருமான் இவனுக்கு எத்தைச் செய்வோம் என்று மேன்மேலும் நன்மைகளை அளிக்கையாலே, ஸம்ஸாரம் நீங்குவது முதலாக, கைங்கர்யம் கிடைப்பது ஈறாக எல்லாப் பலன்களும் உண்டாகும் என்றபடி. ஆக இதுவரையிலும் திருமந்திரத்தின் நடுப்பதமான நமஸ்ஸப்தத்தின் பொருளை அருளிச்செய்ததாயிற்று.

இனி அடுத்த சூர்ணை தொடங்கி 104 வது சூர்ணை வரையில் மூன்றாவது பதமான 'நாராயண' ஸப்தத்தின் பொருளை அருளிச் செய்யத் தொடங்கி, அடுத்த சூர்ணையில் 'நாராயண' என்னும் பதத்தின் பொருளை அருளிச்செய்கிறார்.

மூ 95. நாராயணனென்றது நாரங்களுக்கு அயநமென்றபடி.

விவரணம்:—அதாவது—நாராயண பதம் "நாராணாம் அயநம் ய: ஸ: நாராயண:" [நாரங்களுக்கு எவன் இருப்பிடமோ அவன் நாராயணன்] என்று தத்புருஷஸமாஸத்தின் படியும், "நாரா: அயநம் யஸ்ய ஸ:" [நாரங்கள் எவனுக்கு இருப்பிடமோ அவன் நாராயணன்] என்று பஹுவ்ரீஹி ஸமாஸத்தின்படியும் இரண்டு விதமான பொருளைத் தருவது. அதில் தத்புருஷ ஸமாஸத்தின் படியான பொருளை 'நாரங்களுக்கு அயநம்' என்று இங்கு அருளிச்செய்கிறார்.

'நாரங்கள் எனப்படுபவை எவை?' என்னும் கேள்விக்கு அடுத்த சூர்ணையில் பதில் அருளிச்செய்கிறார்.

சூ 96: நாரங்களாவன—நித்யவஸ்துக்களினுடைய திரள்.

விவரணம்:— 'நார' என்னும் பத3ம் 'நர' என்னும் பத3த்திலிருந்து தோன்றியது. 'நர' என்னும் பத3ம் வடமொழி இலக்கணத்தின்படி 'நார' என்றாகி, அதனுடைய பன்மை 'நாரா:' என்று ஆகிறது. ''ரிங்—க்ஷயே'' [ரிங் தாது அழிவது என்னும் பொருளையுடையது] என்கிற 'ரிங்' தாதுவிலிருந்து உண்டான 'ர' என்னும் பதம் 'அழியும்' பொருளைச் சொல்லுகிறது. நகாரம் அதைத்தள்ளுகிறதாகையாலே 'நர' என்னும் பத3ம் அழிவில்லாத நித்ய வஸ்துவைச் சொல்லுகிறது. வடமொழியிலக்கணப்படி 'நார' பத3ம் நரஸமூஹம் என்று பொருள்படுமாகையாலே நித்யவஸ்துக்களின் கூட்டத்தைச்சொல்லுகிறது. 'நாரா:' என்னும் பத3ம் பன்மையாகையாலே அந்த நித்ய வஸ்துக்களின் கூட்டம் பல என்று காட்டுகிறது. இதையே ''நித்ய வஸ்துக்களினுடைய திரள்'' என்கிறார். இதில் நித்ய என்கையால் 'நர' சப்தத்தின் பொருளும், 'வஸ்துக்கள்' என்கையாலே 'நார' சப்தத்தின் பொருளும் அவற்றின் திரள் என்கையாலே பன்மையின் பொருளும் சொல்லப்பட்டது என்பது குறிக்கொள்ளத்தக்கது.

இனி, இந்த நித்ய வஸ்துக்களின் திரள் எவை? என்னும் கேள்விக்கு விடையை அடுத்த சூர்ணையில் அருளிச்செய்கிறார்.

சூ 97:-அவையாவன-ஜ்ஞாநாநந்தா3மலத்வாதி3களும் ஜ்ஞாநஶக்த்யாதி3களும், வாத்ஸல்யஸௌஶீல்யாதி3களும், திருமேனியும், காந்தி ஸௌகுமார்யாதி3களும், திவ்ய பூ4ஷணங்களும், திவ்யாயுத4ங்களும் பெரிய பிராட்டியார் தொடக்கமான நாச்சிமார்களும், நித்யஸூரிகளும், ச2த்ரசாமராதி3களும், திருவாசல் காக்கும் முதலிகளும், க3ணாதி4பரும், முக்தரும், பரமாகாஶமும் ப்ரக்ருதியும், ப3த்3தாத்மாக்களும் காலமும் மஹதா3தி3 விகாரங்களும் அண்டங்களும், அண்டத்துக்கு உட்பட்ட தே3வாதி3பதா3ர்த்த2ங்களும்

விவரணம்:— (ஜ்ஞாநாநந்தா3மலத்வாதி3கள்) எம்பெருமானுடைய குணங்களிலே அவனுடைய ஸ்வரூபத்தை நிரூபித்துத் தரும் குணங்கள் ஸ்வரூப நிரூபக த4ர்மங்கள் என்று சொல்லப்

படும். எந்த குணங்களைத் தெரிந்துகொண்டாலன்றி ஒரு பொரு ளின் ஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்ள முடியாதோ அந்த குணங்கள். அப்பொருளுக்கு ஸ்வரூபக நிரூபக தர்மங்கள் எனப்படும். இவை சுருக்கமாக ஸ்வரூபம் என்றும் சொல்லப்படும். 'விஜ்ஞாந கநः'' [ப்ருஹ 4-4-1] [அறிவே வடிவமாயிருப்பது பரம் பொருள்] ' ஆநந்தோ ப்ரஹ்மேதி வ்யஜாநாத்'' [தை-ஆந 6-1] [ஆனந்தத்தை பிரம்மம் என்று அறிந்தான்] ''ஸத்யம் ஜ்ஞாநம் அநந்தம் ப்ரஹ்ம'' [தை-ஆந 1] [ஸத்யமாகவும் (விகாரமற்றதாகவும்), அறிவாகவும், அளவற்றதாகவும் இருப்பது ப்ரஹ்மம்] ''அத பரா யயா தததக்ஷரம் அதிகம்யதே யத்ததத்ரேஶ்யம் அக்ராஹ்யம் அகோத்ரம் அவர்ணம் அசக்ஷுःஶ்ரோத்ரம் தத்பாணி பாதம்'' [முண்டக 1-1-5, 6] [பரவித்யையாலே ஜ்ஞாநேந்த்ரியங்களுக்கும், கர்மேந்த்ரியங்களுக்கும்புலப்படாததும், குலமற்றதும், ப்ராஹ்மணர் முதலான வர்ணமற்றதும், கர்மேந்த்ரியங்களும், ஜ்ஞாநேந்த்ரியங்களும் இல்லாததுமான அந்த அக்ஷரம் எனப்படும் ப்ரஹ்மம் அடையப்படுகிறது] முதலான வேத வாக்யங்கள் மூலமே நாம் ப்ரஹ்மத்தைத் தெரிந்துகொள்ளவேண்டியிருக்கிறது. அந்த வேத வாக்யங்கள் ப்ரஹ்மத்தை 'ஜ்ஞாநம்' என்றும் 'ஆநந்தம்' என்றும் 'அநந்தம்' (அளவு படாதது) என்றும், 'அமலம்' (தாழ்வுகளற்றது) என்றும் தெரிவிக்கையாலே இவை ப்ரஹ்மத்தின் ஸ்வரூப நிரூபக குணங்கள் எனப்படுகிறது. இங்கு மூலத்தில் ஜ்ஞாநத்வம், ஆநந்தத்வம், அமலத்வம் ஆகியவற்றைச் சொல்லி ஆதி ஶப்தத்தாலே அநந்தத்வத்தைச் சொல்லுகிறது. (ஜ்ஞாந ஶக்த்யாதிகள்) முற்கூறிய ஸ்வரூப நிரூபககுணங்களைத் தவிர்ந்த மற்ற (ப்ரஹ்ம) குணங்கள் நிரூபித ஸ்வரூப விஶேஷணங்கள், (ஸ்வரூப நிரூபக குணங்களால் நிரூபிக்கப்பட்ட ஸ்வரூபத்தின் மற்ற குணங்கள்) எனப்படும் கணக்கற்ற இந்த குணங்களில் முக்கியமாயிருப்பவை ஆறு குணங்கள். அவையே ஜ்ஞாந ஶக்த்யாதிகள் என்று இங்கே எடுக்கப்படுகின்றன. அவையாவன;— ஜ்ஞாநம், ஶக்தி, பலம், ஐஶ்வர்யம், வீர்யம், தேஜஸ் எனப்படும் ஆறு குணங்கள்.

ப்ரஹ்மத்திற்கு மிகவும் சிறப்பை (அளிப்பவையாகையாலே) இவ்வாறு குணங்களும் முக்கியமானவையாகச் சொல்லப்படு

கின்றன. (வாத்ஸல்ய ஸௌசீல்யாதி3கள்) முற்கூறிய ஷட்குணங்களை நோக்கும்போது மற்ற கு3ணங்கள் அமுக்2யமாகின்றன. அவையாவன:— அடியார்களின் குற்றங்களையும் குணமாகக் கொள்ளும் வாத்ஸல்யம், மிகப் பெரியவனான எம்பெருமான் மிகத் தாழ்ந்தவர்களோடு ஒருநீராகக்கலந்து பரிமாறுகைக்கு உறுப்பான ஸௌசீல்யம், அனைவருக்கும் உடையவனாயிருக்கையாகிற ஸ்வாமித்வம், அனைவருக்கும் எளியனாயிருக்கையாகிற ஸௌலப்4யம் முதலான எண்ணிக்கையற்ற கல்யாண கு3ணங்கள். (திருமேனியும்) எம்பெருமானுக்கே உரியதான அப்ராக்ருதமான தி3வ்ய மங்க3ள விக்3ரஹம் இங்கு திருமேனி எனப்படுகிறது. திருமேனி என்று ஒருமையில் வழங்கியது ஜாத்யேகவசனமாகையாலே பரமபத3த்திலே என்றுமே பிரகாசிக்கும் பரவாஸுதேவவிக்ரஹத்தையும் அவன் தன்விருப்பத்தாலே எடுத்துக்கொள்ளும் வ்யூஹம் விபவம் முதலானமற்ற திருமேனிகளையும் சொல்லுகிறது. இப்படிக்கொள்ளாவிடில் 'நார' ஶப்3த3த்திற்குச் சொன்ன சூர்ணையில், நித்யவஸ்துக்களின் திரள்' என்றுபொருள்கொண்டது பொருந்தாது. இவ்விஷயம் நடுவில் திருவீதிபட்டர் அருளிய ரஹஸ்ய விவரணமான க்3ரந்த2த்திலும் பெரியவாச்சான் பிள்ளை அருளிய பரந்தரஹஸ்யத்திலும் தெளிவாகவே சொல்லப்பட்டிருக்கிறது. (காந்தி ஸௌகுமார்யாதி3களும்) முற்கூறிய திருமேனியின் கு3ணங்களான ஸௌந்த3ர்யம் (அவயவங்களின் அழகு), ஸௌகுமார்யம் (மென்மை) ஸௌக3ந்த்4யம் (நறுமணம்), லாவண்யம் (முழுத்திருமேனியின் அழகு), யௌவனம் (வாலிபப்பருவம்) முதலியவை. (தி3வ்யபூ4ஷணங்களும்) சரணாக3தி க3த்யத்தில் எம்பெருமானுடைய திருவாப4ரணங்களை அடுக்கும் (எட்டாவது) சூர்ணையில் பா4ஷ்யகாரர் அருளிச்செய்தபடியே கிரீடம், மகுடம், சூடா3வதம்ஸம் என்னும் தலையலங்காரங்கள், செவிக்கலங்காரமான மகரகுண்டலம், திருக்கழுத்தில் சாத்தும் க்3ரைவேயகம், திருமார்பில் அணியும் ஹாரங்கள், தோளில் அணியும் கேயூரம் (தோள்வளைகள்), முன்கையில் சாத்தும் கடகம் (வளைகள்), ஸ்ரீவத்ஸம் (திருமார்பிலுள்ள மறு), கௌஸ்துப4ம் (மார்பிலுள்ள நீலமணி), முக்தா தா3மம் எனப்படும் முத்துமாலைகள், வயிற்றில் சாத்தும் உத3ரப3ந்த4நம், திருவரையில் சாத்தும் பீதாம்பரம், இந்தப் பீதாம்பரத்தின் மேல் அணியும் அரைநாண் கயிறு, நூபுரம் என்னும் திருவடிச்சிலம்பு முதலானவை (தி3வ்யாயுத4ங்களும்) திருமேனி அழகுக்குப், அடியார்கள் விரோதி4களைப்

போக்குவதற்கும் உறுப்பாயிருக்கும் சங்கம், சக்ரம், கதை, வாள், வில் முதலான எண்ணிக்கையற்ற அப்ராக்ருதமான படைக்கலங்கள். (பெரிய பிராட்டியார் தொடக்கமான நாச்சிமார்களும்)

ஸ்வாபி₄மத நித்ய நிரவத்₃யாநுரூப ஸ்வரூப ரூப கு₃ண விப₄வைஶ்வர்ய
ஶீலாத்₃யநவதி₄காதிஶயாஸங்க்₂யேய கல்யாண கு₃ண க₃ண ஶ்ரீவல்லப₄! (சரணாக₃தி க₃த்₃யம் 3)

[(ஸர்வேஶ்வரனுடைய) தனக்கு இனியதும், எப்போதுமுள்ளதும், குற்றமற்றதும், தனக்கேற்றதுமான ஸ்வரூபம், ரூபம், ரூபகுணங்கள், விப₄வங்கள், ஐஶ்வர்யம், ஶீலம் முதலான எல்லையற்ற பெருமையையுடைய கணக்கற்ற மங்க₃ள குணக்கூட்டங்கள் ஆகிய வற்றையுடைய பெரியபிராட்டியாருக்கு இனியவனே! இப்படிப் பட்ட பூ₄மிப்பிராட்டிக்கும் நப்பின்னைப் பிராட்டிக்கும் நாயகனே!]

போ₄க்₃யா வாமபி நாந்தரீயகதயா புஷ்பாங்கு₃ராத்₃யைஃ ஸமம்
நிர்வ்ருத்த ப்ரணயாதிவாஹநவிதௌ₄ நீதாஃ பரீவாஹதாம் |
தே₃வி த்வாமநு நீளயா ஸஹ மஹீ தே₃வ்யாஃ ஸஹஸ்ரம் தத₂
யாபி₄ஸ்த்வம் ஸ்தநபா₃ஹு த்₃ருஷ்டிபி₄ரிவ ஸ்வைர்விபு₄ஃ
ப்ரியம் ஶ்லாக₄ஸே || ஶ்ரீகு₃ண 26]

[ஸ்ரீதே₃வியே! பதிபத்னிகளாகிற உங்களிருவர்க்கும் புஷ்ப சந்த்₃ரநாதி₃களைப்போல் இன்றியமையாதவையாயிருப்பதினால் இனியவர்களாயிருப்பவர்களாய், கரைபுரண்ட காதல் வெள்ளப்பெருக்கிற்கு வெட்டிவிடப்பட்ட மடைபோல் நியமிக்கப்பட்டிருப்பவர்களாய் விளங்குகின்றனர் உன்னையொட்டியிருக்கும் நீளாதே₃வியோடு கூடிய பூ₄தே₃வியும் மற்றும் ஆயிரக்கணக்கான தே₃வியரும். உம்முடைய கொங்கை, திருக்கைகள், திருக்கண்ணுக்கு ஆகிய வற்றால் காந்தனை உகப்பிப்பதுபோலே இவர்களாலும் அவனை உகப்பிக்கிறீர்.] என்கிறபடியே பட்டமஹிஷியான பெரிய பிராட்டியார் முதலாக அவனையொத்த பூமிநீள தேவிகளும், மற்றும் பலராகச்சொல்லப்படுகிற தேவிகளும்; "லக்ஷ்மீ ப்ரப்₄ருதி மஹிஷீ வர்க்கங்களும்" என்று பெரியவாச்சான்பிள்ளை பரந்த ரஹஸ்யத்தில் இவ்விஷயத்தை அருளிச்செய்தார். (நித்ய ஸூரிகளும்) அநந்தர்.

கருடர், விஷ்வக்ஸேநர் முதலான கணக்கற்ற நித்யஸூரிகளும். (சத்ர சாமராதிகளும்) அந்த நித்ய ஸூரிகள் எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்யக் கருவிகளாயிருக்கும் குடை, சாமரம், விசிறி, வட்டில், படிக்கம் முதலானவை. (திருவாசல் காக்கும் முதலிகளும்) சண்டர், ப்ரசண்டர், பத்ரர், ஸுபத்ரர் முதலான த்வாரபாலர்களும், (கணாதிபர்களும்) குமுதர், குமுதாக்ஷர், புண்டரீகர், வாமநர், ஸங்குகர்ணர், ஸர்வநேத்ரர், ஸுமுகர், ஸுப்ரதிஷ்டிதர் முதலான நித்யஸூரி கணத்தலைவர்கள். (முக்தரும்) "கரைகண்டோர்" [திருவாய் 8-3-10] என்கிறபடியே ஸம்ஸாரக்கடலைக் கடந்து அக்கரையாகிற பரமபதம் சேர்ந்து நித்யஸூரிகளையொத்த பெருமைகளை உடையவராய், எம்பெருமானுக்கு ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமைசெய்யும் எண்ணிக்கையற்ற ஜீவர்கள். (பரமாகாசமும்) பரமேஷ்டி, புமான், விஸ்வன், நிவ்ருத்தன், ஸர்வன் என்னும் பெயருடைய ஐந்து உபநிஷத்துக்கள் என்று சொல்லப்படும் ஐந்து த்ரவ்யங்களாலான பரமபதமும். இதுவும் பஞ்சோபநிஷத்துக்களால் ஆனதாகையாலே ஸூக்ஷ்மமாகவேயிருக்கும். ஆகையால் நித்ய வஸ்துக்களுடைய திவ்யமான நார ஸப்தப்பொருளாயிருக்கக் குறையில்லை, 'பஞ்சோபநிஷந்மயமாகையாலே பரமபதமும் ஸூக்ஷ்மாத்மகமாய் இருக்கும்' என்று பெரியவாச்சான் பிள்ளையும் பரந்த ரஹஸ்யத்தில் அருளிச்செய்தார்.

ஆக இதுவரையில் (1) ஸ்வரூப நிரூபக தர்மங்கள், (2) நிரூபித ஸ்வரூப விசேஷணங்கள் என இருவகைப்பட்ட கல்யாண குணங்களையும் (3) அக்குணங்களை வெளிக்காட்டும் திருமேனியையும் (4) அத்திருமேனியின் குணங்களான ஸௌந்தர்யம் முதலானவற்றையும் (5) "முடிச்சோதியாய் உனது முகச்சோதி மலர்ந்ததுவோ" [திருவாய் 3-1-1] என்கிறபடியே 'அந்தத் திருமேனியழகே இந்தத் திருவாபரணங்களாகப் பூத்ததோ?" என்று எண்ணும்படியான திவ்யாபரணங்களையும், (6) அந்த ஆபரணங்களோடு சேர்க்கும்படியான திவ்யாயுதங்களையும், (7) இவையனைத்தும் காட்டில் எரித்த நிலாப்போலே வீணாகாதபடி அருகிலேயே இருந்து அனுபவிக்கிற நாச்சிமாரையும், (8) நாச்சிமாரும் பெருமானுமாகிற இச்சேர்த்தியிலே அடிமை செய்கிற நித்யஸூரிகளையும், (9) அவர்கள் செய்யும் கைங்கர்யத்திற்குக் கருவிகளாயிருக்கும் குடை சாமரம் முதலானவைகளையும், (10) இச்

சேர்த்திக்கு எத்திங்கும் நேராயிருக்கவேண்டும் என்னும் அஸ்தாநேபயசங்கையாலே பாதுகாவலர்களாயிருக்கும் திருவாசலைக் காக்கும் முதலிகளையும், (11) அவ்வண்ணமே பல்லாண்டு பாடுகிறவர்களாய் அவ்வைகுண்டநகரம் முழுவதையும் பாதுகாக்கும் கணத்தலைவர்களையும், (12) ஸம்ஸாரக் கடலைக் கடந்து சென்று அவர்களோடு ஒத்தவர்களாகி அடிமைசெய்யும் முக்தர்களையும், (13) அந்த அடிமையை வளரச்செய்கிற பரமபதத்தையும் அருளிச்செய்தாராயிற்று.

இனி 'நார' சப்தத்திற்குப் பொருளாக இந்த லீலாவிபூதியிலுள்ளவற்றை அருளிச்செய்கிறார் மேலே (ப்ரக்ருதியும்) ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் மூன்று குணங்களோடு கூடியிருக்கையால் இதுவும் ஸமூஹமாகவேயிருக்கிறது. ஆகவே 'நார' சப்தத்திற்குப் பொருளாகிறது. "குணத்ரயாத்மிகையாகையாலே மூலப்ரக்ருதியும் ஸமூஹாத்மிகையாயிருக்கும்" என்று பரந்த ரஹஸ்யத்தில் பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்தார். (பத்தாத்மாக்களும்) உரைமெழுகில் பொதிந்து கிடக்கும் பொன்போலே இந்த மூலப்ரக்ருதிக்குள்ளே அறிவற்ற ஜடம்போலே கிடக்கும் ஸம்ஸாரி ஜீவர்களும். (காலமும்) இரவு பகல் முதலான பிரிவுகளோடு கூடியதாகையாலே ஸமூஹமாயிருக்கும் ஓர் அசித்து. "அஹோராத்ராதி விபாகங்கள் அநேகமாகையாலே, காலமும் ஸமூஹாத்மகமாயிருக்கும்" என்று இதையும் பெரியவாச்சான்பிள்ளை பரந்த ரஹஸ்யத்தில் அருளிச்செய்தார்.

இது வரையில் ஸ்வரூபத்தாலே நித்யமாயிருக்கும் பொருள்களைச் சொன்னார்.

இனிமேல் ப்ரவாஹரூபத்தாலே நித்யமாயிருக்கும் பொருள்களைச் சொல்லுகிறார். ஸ்வரூபத்தால் நித்யமாயிருக்கையாவது— உள்ளதான ஒருபொருளுக்குத் தோற்றம் அழிவு ஆகியவை அடியோடு இல்லாமல் இருக்கை. ப்ரவாஹரூபத்தால் நித்யமாயிருக்கையாவது — தோற்றமும் அழிவும் கூடியதாயிருந்தபோதிலும் முற்காலத்திலுள்ள நாமம் ரூபம் அடையாளம் ஆகியவை மாறாமலிருக்கை சுருங்கக் கூறினால் தோற்றமும் அழிவும் இருந்தபோதிலும் ஒவ்வொரு கல்பத்திலும் முன்கல்பத்தில் போலவே படைக்கப்படும் சூரியன் சந்திரன் முதலானவை ப்ரவாஹரூபத்தால் நித்யம் என்று அறியலாம்.

(மஹதா₃தி₃ விகாரங்களும்) மூலப்ரக்ருதியிலிருந்து உண்டான (1) மஹாந் (2) அஹங்காரம் (3) மனம் என்னும் தலைமைபெற்ற இந்த்ரியம் (4 முதல் 13 வரை) ஜ்ஞாநேந்த்ரியங்கள் ஐந்தும் கர்மேந்த்ரியங்கள் ஐந்தும் (14 முதல் 18 வரை) ஐந்து தன்மாத்ரைகள். (19 முதல் 23 வரை) ஐந்து பூ₄தங்கள் ஆகிய 23 தத்துவங்கள், (அண்டா₃ங்களும்) இந்த மஹாந் முதலான 23 தத்துவங்களாலே ஆனவையாய்

அண்டா₃நாந்து ஸஹஸ்ராணாம் ஸஹஸ்ராண்யயுதாநி ச |
ஈத்₃ருஶாநாம் ததா₂ தத்ர கோடி கோடி ஶதாநி ச ||
[வி பு 2-7-27]

[ஆயிரமண்டங்களின் ஆயிரங்களும் பதினாயிரங்களும் அப்படியே இப்படிப்பட்ட அண்டங்களின் கோடி கோடி நூறுகளும் ப்ரக்ருதி மண்டலத்தில் உள்ளன] என்கிறபடியே கணக்கற்றவையாயிருக்கும் பிரமமாண்டங்கள். (அண்டத்துக்கு உட்பட்ட தே₃வாதி₃ பதா₃ர்த்த₂ங்களும்) அண்டத்திற்கு உள்ளேயிருப்பவர்களான தேவர், மனிதர், குறுக்கே வளரும் விலங்கு பறவைகளான திர்யக்குகள், தாவரங்கள் ஆகியவை. ஆக, 'நார' பத₃த்தின் பொருள் அருளிச் செய்யப்பட்டது.

அடுத்த சூர்ணையில் 'அயந' பத₃த்தின் பொருளை அருளிச் செய்கிறார்.

மூ 98: அயநம் என்றது — இவற்றுக்கு ஆஶ்ரயமென்றபடி,

விவரணம்: அதாவது 'அயந' ஶப்₃த₃ம் இருப்பிடத்தைக்குறிக்குமாகையாலே 'அயநம்' என்றது 'இந்த நாரங்களுக்கு இருப்பிடம்' என்று பொருள்படுகிறது என்று கருத்து. இது 95 வது சூர்ணையில் சொன்னபடி தத்புருஷ ஸமாஸத்தின்படி உண்டாகும் பொருள்.

"நாரா: அயநம் யஸ்ய ஸ: நாராயண:" என்கிற ப₃ஹுவ்ரீஹி ஸமாஸத்தின்படி உண்டாகும் பொருளை அடுத்த சூர்ணையில் அருளிச்செய்கிறார்.

மூ 99: அங்ஙனன்றிக்கே, இது தன்னை ஆஶ்ரயமாகவுடையனென்னவுமாம்.

விவரணம்: அதாவது—'நாரங்களுக்கு இருப்பிடம்' என்று சென்ற சூர்ணையில் தத்புருஷ ஸமாஸமாகச் சொன்னதுபோலன்றிக்கே, "நாரங்களை இருப்பிடமாக உடையவன்" என்று பஹுவ்ரீஹி ஸமாஸமாகவும் சொல்லலாம் என்று கருத்து.

நாரங்களுக்கு இருப்பிடம் என்னும் தத்புருஷ ஸமாஸத்தில் எம்பெருமான் தன்னுடைய குணங்களுக்கும் இருப்பிடமாக அதாவது ஆதாரமாக இருக்கையாலே குணங்களும் நாரஶப்தத்திற்குப் பொருளாகும்; நாரங்களை இருப்பிடமாக உடையவன் என்னும் பஹுவ்ரீஹி ஸமாஸத்தில், 'நாரங்கள் எம்பெருமானால் வியாபிக்கப்படுகின்றன' என்று சொல்லப்படுகிறது. இங்கு 'நார' ஶப்தத்தாலே குணங்களைச் சொல்லமுடியாது. ஏனெனில்: "குணங்களை எம்பெருமான் வியாபித்திருக்கிறான்" என்று சொல்லும் போது குணங்களோடு கூடியவனாகவே வியாபிக்கிறான், குணமற்ற பொருள் இல்லாமையாலே; அப்போது வியாபிக்கப்படும் குணங்களே வியாபிக்கும் குணங்களாகவும், வியாபிக்கும் குணங்களே வியாபிக்கப்படும் குணங்களாகவும் ஆகையாலே குணங்கள் தம்மைத்தாமே வியாபித்திருக்கின்றன என்னும் ஆத்மாஶ்ரய தோஷம் உண்டாகும். மேலும் முற்கூறிய தோஷத்தைத் தவிர்ப்பதற்காக, சிலகுணங்களோடு கூடிய எம்பெருமான் மற்ற குணங்களை வியாபிக்கிறான் என்று கொண்டால், அந்தச் சில குணங்களையும் சில குணங்களோடு கூடிய எம்பெருமான் வியாபிக்கவேண்டும்; அந்த குணங்களையும் சில குணங்களோடு கூடிய எம்பெருமான் வியாபிக்கவேண்டுமென்று ஓரிடத்தில் நில்லாமல் இப்படியே நீண்டுசெல்கையால் 'அநவஸ்தை' என்னும் தோஷம் உண்டாகும். இவ்விஷயத்தை —"தன் குணங்களிலே ஈஶ்வரன் வ்யாபிக்கும்போது குணவிஶிஷ்டனாயே வியாபிக்கவேணும்; நிர்குணமாய் வஸ்து இராமையாலே. அப்போது, வ்யாப்ய குணங்களே வ்யாபக குணங்களாய், வ்யாபக குணங்களே வ்யாப்ய குணங்களாயறுகையாலே ஆத்மாஶ்ரய தோஷமுண்டாம். அதுக்குமேலே தன்குணங்களிலே குணி வ்யாபிக்கவென்று புக்கால், ததாஶ்ரயமான குணங்களையும் குணி வ்யாபிக்க

வேணும்; அந்த வ்யாபகனுடைய கு₃ணங்களையும் கு₂ணி வ்யா பிக்க வேணும். ஆகையாலே அநவஸ்த₂ாது₃:ஸ்த₂மாம்'' என்று இவ்விஷயத்தை மிகத் தெளிவாகப் பரந்த ரஹஸ்யத்தில் பெரிய வாச்சான் பிள்ளை அருளிச்செய்தார். ஆகையால் ப₃ஹுவ்ரீஹி ஸமாஸத்தில் நாராஸப்₃த₃த்திற்கு₃ கு₃ணங்கள் பொருளாக முடியாது.

இந்த இரண்டு ஸமாஸத்தாலும் தேறும் பொருளை அருளிச் செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

சூ 100; இவை இரண்டாலும் ப₃லித்தது பரத்வ ஸௌலப்₄யங்கள்,

விவரணம்: அதாவது—(1) ''நாரங்களுக்கு இருப்பிடம்'' (2) ''நாரங்களை இருப்பிடமாக உடையவன்'' என்கிற இரண்டு ஸமா ஸத்தாலும் (1) தன்னைத் தவிர்ந்த எல்லாப் பொருளுக்கும் தான ஆதாரமாயிருக்கையாகிற மேன்மையும் (2) இப்படி மிகப்பெரியவ னான தான் எல்லாச் சேதனாசேதனங்களிலும் தன்னை அமைத்துக் கொண்டு புகுந்திருக்கையாகிற எளிமையும் தேறுகின்றன என்று கருத்து.

மேலும் ஒருவகையாலே இந்த இரு ஸமாஸங்களாலும் தேறும் பொருளை அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

சூ 101: அந்தர்யாமித்வமும், உபாயத்வமும், உபேயத்வமும் ஆகவுமாம்.

விவரணம்: அதாவது—ப₃ஹுவ்ரீஹி ஸமாஸத்தாலே எம் பெருமான் அனைத்தையும் வியாபித்திருப்பவன் என்று தேறுகிறது. தத்புருஷ ஸமாஸத்தாலே எம்பெருமான் அனைத்தையும் தரித் திருப்பவன் என்று தேறுகிறது. ப்₃ருஹதா₃ரண்யக ஸுபா₃ல உபநிஷத்துக்களில் படிக்கப்படும் அந்தர்யாமி ப்₃ராஹ்மணம் முதலான விடங்களில் சொல்லுகிறபடியே, எல்லாச் சேதநாசேதநங் களிலும் அந்தராத்மாவாக இருந்துகொண்டு நியமிக்கையாகிற அந்தர்யாமித்வம் இவ்விரு ஸமாஸங்களாலும் தேறுகிறது. 'அயந' பத₃ம் ''இண் க₃தௌ'' அல்லது ''அய க₃தௌ' என்கிற தா₄துக் களிலிருந்து வந்ததாகக்கொண்டால் ''எதனால் அடையப்படுகிறதோ அவ்வுபாயம் அயநமாகிறது'' என்னும் கரணே வ்யுத்பத்தியால் அடையும் வழியாயிருக்கையாகிற உபாயத்வமும், ''எது அடையப்

படுகிறதோ அது அயநமாகிறது'' என்னும் கர்மணி வ்யுத்பத்தியால் அடையப்படுவதாயிருக்கையாகிற உபேயத்வமும் தேறுகிறது என்று கருத்து. பஹுவ்ரீஹி ஸமாஸத்தின்படி பொருள் கொள்ளும் போது நாரஶப்தம் குணங்கள் தவிர்த்த மற்ற பொருள்களையே சொல்லுகிறது என்று 90 வது சூர்ணையில் பொருள் கொண்டது போலே, 'அயந' ஶப்தத்திற்கு 'நாராணும் அயநம் நாராயண:' என்னும் தத்புருஷ ஸமாஸத்திலும் முற்கூறிய படி உபாயத்வ உபேயத்வங்களைப் பொருளாக கொள்ளும்போது எம்பெருமான் அசேதந வஸ்துக்களுக்கு உபாயமோ, உபேயமோ ஆக முடியாதாகையாலே 'நார' ஶப்தம் அசேதநங்களைக் குறிக்காமல்சேதநர்களை மட்டுமே குறிப்பதாகக் கொள்ளவேண்டும்.

நாரஸ் த்விதி ஸர்வபும்ஸாம் ஸமூஹ: பரிகத்யதே |
கதிராலம்பநம் தஸ்ய தேந நாராயண: ஸ்ம்ருத: ||
[பாத்மோத்தர புராணம் 254-52]

[நார ஶப்தத்தாலே (அழிவில்லாத) ஜீவஸமூஹம் முழுவதும் சொல்லப்படுகிறது; அதற்கு அடைவிக்கும் உபாயமாகவும் அடையப்படும் ப்ராப்யமாகவும் இருப்பதால் நாராயணனெனப்படுகிறான்.

நாரஶப்தேந ஜீவாநாம் ஸமூஹ: ப்ரோச்யதே புதை: |
தேஷாமயநபூதத்வாந் நாராயண இஹோச்யதே ||
[ ]

[அறிவாளிகளால் ஜீவ ஸமூஹம் நாரஶப்தத்தால் சொல்லப்படுகிறது: அவர்களுக்கு ப்ராப்யமும் ப்ராபகமுமாகிற அயநமாவதால் நாராயணனெனப் படுகிறான்.] முதலான ப்ரமாணங்களிலும் இவ் விஷயம் சொல்லப்பட்டதன்றோ.

முற்கூறிய கர்மணி வ்யுத்பத்தியினால் தேறும் உபேயத்வம் எம்பெருமான் எல்லாவகையாலும் அடையத்தக்கவனுயிருப்பவன் என்று காட்டுகையாலே, அடையத்தக்கவைகளில் உறவினரின் லாபமும் சேர்ந்ததாகையாலே, எம்பெருமான் எல்லாவகை உறவாயுமிருப்பான் என்பதையும் 'நாராயண' ஶப்தம் கூறும் என்பதை அடுத்த சூர்ணையில் அருளிச் செய்கிறார்.

சூ 102: "எம்பிரானெந்தை" என்கையாலே ஈஶ்வரனே எல்லா உறவுமுறையுமென்று சொல்லும்.

விவரணம்: அதாவது 'நாராயண' ஶப்தத்தின் பொருளை அநுஸந்திக்கிற திருமங்கையாழ்வார் "எம்பிரான் எந்தை என்னுடைச் சுற்றம் எனக்கரசு என்னுடை வாணாள்........நாராயணா வென்னும் நாமம்" [பெரிய திருமொழி 1-1-6] என்று அருளிச்செய்கையாலே, எம்பெருமானே இந்த ஆத்மாக்களுக்கு எல்லா வகையுறவுமாவான் என்று 'நாராயண' ஶப்தம் சொல்லும் என்று கருத்து.

இப்படி உறவினனாயிருந்துகொண்டு இச்சேதனனுக்கு அவன் செய்யும் காரியம் என்ன? என்னும் கேள்விக்கு விடையருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

சூ 103: நாம் பிறக்கணித்த அன்றும் அவன் நமக்காயிருக்கும்.

விவரணம்: அதாவது—நாம் எம்பெருமானோடு தொடர்பில்லாமல் பிறர்க்கே உழைத்துக்கொண்டிருக்கும் காலத்திலும் அவன் நமக்கு ரக்ஷகனாகவே இருப்பான் என்று கருத்து.

இப்படி நாம் பிறரிடம் ஈடுபட்டிருக்கும்போதும் நம்மை ரக்ஷிப்பவனாயிருந்து அவன் செய்யும் காரியம் என்ன? என்னும் கேள்விக்கு விடையருளிச் செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

சூ 104: இராமடம் ஊட்டுவாரைப் போலே உள்ளே பதிகிடந்து ஸத்தையே பிடித்து நோக்கிக்கொண்டு போரும்

விவரணம்: அதாவது-பிள்ளைகள் தாய்தகப்பனிடம் கோபித்துக்கொண்டு வீட்டில் சாப்பிடாமல் ஆணவத்துடன் பட்டினி கிடந்து திரியும்போது, அத்தகையவர்களை யுபவிட முடியாமல், தாய்தந்தையர் எவருக்கும் தெரியாதபடி இரவில் சத்திரத்தில் இருப்பவர்கள் மூலம் அவர்களுக்கு உணவளிப்பதுபோலே, எம்பெருமானை வணங்க இசையாமல் சேதநர் 'நாம் ஸ்வதந்த்ரர்' என்னும் எண்ணத்தோடு திரியும்போதும் இவர்களறியாதபடி அந்தர்யாமியாய் இருந்து கொண்டு உள்ளே மறைந்திருந்து இவர்களுடைய ஸத்தை ஸ்திதி ப்ரவ்ருத்தி ஆகிய அனைத்தையும் தன் அதீனமாக்கிக் கொண்டு நமக்கு எல்லாவகையான ரக்ஷணங்களையும் செய்து வருகிறான் என்று கருத்து.

ஆக, 95 வது சூர்ணையிலிருந்து தொடங்கி இதுவரையில் சேதநர்களுடைய கைங்கர்யத்தை ஏற்றுக்கொள்கிறவனான எம்பெருமானுடைய தன்மையை நாராயணபதத்தாலே அருளிச்செய்ததாயிற்று.

இனி, 'ஆய' என்கிற நாலாம் வேற்றுமையாலே கைங்கர்யத்தைப் பிரார்த்திக்கிறபடியை அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்,

**மூ 105: ஆய என்கிற இத்தால் "சென்றால் குடையாம்" என்கிறபடியே எல்லா அடிமைகளும் செய்யவேணுமென்று அபேக்ஷிக்கிறது.**

விவரணம்: அதாவது—'ஆய' என்கிற இந்த நாலாம் வேற்றுமையாலே

சென்றால் குடையாம் இருந்தால் சிங்காசனமாம்
நின்றால் மரவடியாம் நீள்கடலுள்—என்றும்
புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும்
அணையாம் திருமாற்கு அரவு. [முதல் திருவ 53]

என்கிறபாட்டில் சொல்லுகிறபடியே திருவனந்தாழ்வானைப்போலே எல்லாவிதமான கைங்கர்யங்களையும் செய்யவேணுமென்று பிரார்த்திக்கிறது என்று கருத்து.

"நடுப்பதமான 'நம:' என்னும் சொல்லாலே தனக்கென்று ஒன்றை விரும்புவதற்குத் தகுதியில்லாத அத்யந்த பாரதந்த்ர்யத்தைச் சொல்லியிருக்க, இக்கைங்கர்யத்தைத் தான் விரும்பிக் கேட்பது ஒட்டாதே" என்று சிலர் ஐயமுறக்கூடும்; அவர்களுடைய அந்த ஐயத்தை அடுத்த சூர்ணையில் எடுத்துக் கூறுகிறார்.

**மூ 106: "நமஸ்ஸாலே தன்னோடு உறவில்லையென்று வைத்து கைங்கர்யத்தை ப்ரார்த்திக்கக் கூடுமோ" என்னில்:**

விவரணம்: அதாவது-'நமஶ்ஶப்தத்தாலே தனக்கென்றுஒன்றை விரும்பத் தகுதியில்லை என்று சொன்ன பின்பு, கைங்கர்யத்தைத் தனக்காகப் பிரார்த்திக்கலாமா?' என்பது சிலருக்கு எழக்கூடிய ஐயம் என்று கருத்து.

இவ்வையத்திற்கு பதில் அருளிச்செய்கிறார் அடுத்தசூர்ணையில்.

**சூ 107: "படியாய்க் கிடந்து உன் பவளவாய் காண்பேனே" என்கிறபடியே கைங்கர்யப்ரார்த்தனை வந்தேறியன்று; ஸ்வரூப ப்ரயுக்தம்.**

விவரணம்: அதாவது—"படியாய்க்கிடந்து உன் பவளவாய் காண்பேனே" [பெருமாள் திரு 4-9] என்கிற குலசேகராழ்வார் பாசுரத்தில் 'படியாய்க் கிடந்து' என்கையாலே அசேதநமான படி போலே அத்யந்த பாரதந்த்ரியத்துடன் தான் போக்தா எனனும நினைவற்றிருக்க வேண்டும் என்றும். "பவளவாய் காண்பேனே" என்கையாலே, எம்பெருமானுடை உகப்புக்கான கைங்கர்யத்தைப் பிரார்த்திக்க வேண்டும் என்றும் விளங்குகையாலே, கைங்கர்ய ப்ரார்த்தனை "தான் போக்தா" என்னும் அஹங்காரத்தால் உண்டான வந்தேறியான (இடையில் வந்த) செயலன்று. கைங்கர்யம் கொள்ளும் சேஷியான எம்பெருமானுக்கு உகப்பை விளைதல்லது தன்னால் தரிக்கமுடியாதபடி இருக்கும் தன்ஸ்வரூபத்தைப் பற்றி இயல்வாக வந்தது என்று கருத்து. தனக்கே இன்பம் உண்டாக வேண்டும் என்னும் அஹங்காரக்கலப்போடு எம்பெருமானுக்குச் செய்யும் கைங்கர்யமும் கூடாது; தனக்கும் எம்பெருமானுக்கும் இன்பம் உண்டாகவேண்டும் என்னும் பொதுநோக்குடன் செய்யும் கைங்கர்யமும் கூடாது. 'தான் புரியும் தொண்டு எம்பெருமானுக்கே இன்பமளிப்பதாய் இருத்தல் வேண்டும்' என்னும் எண்ணத்தோடு செய்யும் கைங்கர்யமே தக்கது என்றபடி.

இப்படிக் கைங்கர்ய ப்ரார்த்தனை இடையில் வந்ததாயிராமல் தன் நிலைபற்றிவந்ததாயிருக்கையாலே கைங்கர்ய ப்ரார்த்தனை எப்படியிருக்கவேண்டும் என்பதை நாலாம் வேற்றுமை காட்டுகிறது என்கிறார் அடுத்த சூர்ணையில்.

**சூ 108: ஆகையால் "வழுவிலா அடிமைசெய்ய வேண்டும் நாம்" என்கிற ப்ரார்த்தனையைக் காட்டுகிறது.**

விவரணம்: அதாவது — கைங்கர்ய ப்ரார்த்தனை இடையில் வந்ததல்லாமல், தன் நிலைபற்றிவந்ததாகையாலே "வழுவிலா அடிமை செய்யவேண்டும் நாம்" [திருவாய் 3 3-1] என்று நம்மாழ்வார் அருளிச்செய்தபடியே 'அடிமையில் ஒன்றும் விடாதபடி எல்லாவற்றையும் நாம் செய்யவேண்டும்' என்கிற விருப்பத்தை இந்த நாலாம் வேற்றுமை தெரிவிக்கிறது என்று கருத்து.

இனி இத்தக் கைங்கர்ய ப்ரார்த்தனையை இடைவிடாமல் செய்வதற்கு உறுப்பான வேட்கையை உடையவர்களுடைய தன்மையை அருளிச் செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

சூ 109: "கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கும் உண்டோ கண்கள் துஞ்சுதல்" என்கிறபடியே காண்பதற்கு முன்பு உறக்கமில்லை; கண்டால் "ஸதா₃ பஶ்யந்தி" ஆகையாலே உறக்கமில்லை.

விவரணம்: அதாவது—'இமையோர்கள் குழாம் தொழுவதும் சூழ்வதும் செய் தொல்லை மாலைக் கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கும் உண்டோ கண்கள் துஞ்சுதல்" [திருவிருத்தம் 97] என்னும் பாசுரத்தில் "நித்ய ஸூரிகளுடைய ஸமூஹமானது எப்போதும் அனுபவிக்கிற எம்பெருமானைக் கண்கள் நிறையும்படி கண்டால் ஒழியக் கழியாதபடியான காதலிலே நிலை நின்றார்க்குக் கண்கள் உறங்குதல் உண்டோ?" என்று நம்மாழ்வார் அருளிச் செய்தபடியே, எம்பெருமானைக் காண்பதற்கு முன்பு அவனைக் காணவேண்டும் என்னும் துடிப்பாலே, அத்துடிப்பற்ற ஸம்ஸாரிகளுக்கே உண்டாகும் அறிவு சுருங்கிக் கிடக்கையாகிற உறக்கம் இல்லை. மோக்ஷமடைந்து அவனைக்கண்ட காலத்தில்,

தத்₃ விஷ்ணோ: பரமம் பத₃ம் | ஸதா₃ பஶ்யந்தி ஸூரய:|

[யஜுர் காண்டம் 4—2—29]

[விஷ்ணுவினுடைய அந்தப் பரமபத₃த்தை நித்யஸூரிகள் எப்போதும் காண்கிறார்கள்.] என்கிறபடியே நித்யஸூரிகளைப் போலே எப்போதும் அனுப₄வித்துக்கொண்டிருக்கையாலே உறக்கமில்லை என்று கருத்து.

மற்றும் ஒருகாரணத்தினாலும் இவனுக்கு உறக்கம் உண்டாகாது என்பதை அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

சூ 110: "பழுதே பல பகலும் போயின" என்று இழந்த நாளுக்குக் கூப்பிடுகிறவனுக்கு உறங்க விரகில்லை.

விவரணம்: அதாவது—"செங்கண் அடலோத வண்ணர் அடி அரவணை மேல் கண்டு தொழுதேன், பலபகலும் பழுதே போயின என்று அஞ்சி அழுதேன்" [முதல் திருவ 16] என்று பொய்கையாழ்வார் அருளிச் செய்தபடியே எம்பெருமானைக் கண்டு அனுபவித்தவுடன் "இப்படி அனுபவித்திருக்க வேண்டிய முற்காலமெல்லாம் வீணே போய்விட்டதே" என்று இழந்த நாளைக்குறித்து வருந்திக் கதறுகின்றவனுக்கு மேல் உள்ள நாளில் உறங்குவதற்கு வழியேயில்லை என்று கருத்து.

மேலும் இவ்விஷயத்தில் அறிவு பிறந்தவர்களுக்கு இதை மறக்கமுடியாது என்பதைப் பிரமாணத்தைக் காட்டி ஒப்புக்கொள்ளும்படிசெய்கிறார்.

மூ 111: "அன்று நான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன்" என்றுநின்றார்களிறே.

விவரணம்: அதாவது—

நின்றதெந்தை ஊரகத்து இருந்தது எந்தை பாடகத்து
அன்று வெஃகணைக்கிடந்தது என்னிலாத முன்னெலாம்
அன்று நான் பிறந்திலேன் பிறந்த பின் மறந்திலேன்
நின்றதும் இருந்ததும் கிடந்ததும் என்நெஞ்சுளே
[திருச்சந்தவிருத்தம் 64]

என்ற பாட்டில் திருமழிசையாழ்வார் "அவன் என்னைப்பெறுவதற்காக திவ்ய தேசங்களிலே நிற்பது இருப்பது கிடப்பது முதலான செயல்களைச் செய்ய, அக்காலத்தில் நான் பகவத்விஷயத்தைப் பற்றிய அறிவைப் பெற்றிருக்கையாகிற பிறப்பை உடையவனாகப் பெற்றிலேன். அந்தப் பிறப்பு உண்டான பின்பு அவனை ஒருகாலும் மறந்திலேன்" என்று அருளிச்செய்தாரன்றோ. ஆக, ப்ராப்யமான கைங்கர்யத்தின் சிறப்பை அறிந்தவர்கள் இருக்கும்படி இதுவாகையாலே, இந்தக் கைங்கர்யத்தைப் ப்ரார்த்திப்பது இடைவிடாமல் நடக்கும் என்று கருத்து.

இனி, இந்தக்கைங்கர்யத்துக்கு தேசம், காலம், நிலை ஆகிய நிர்ப்பந்தங்கள் இல்லாமையை அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

மூ 112: இவ்வடிமைதான் "ஒழிவில் காலமெல்லாம் உடனாய்மன்னி" என்கிறபடியே ஸர்வதேசு ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் அநுவர்த்திக்கும்.

விவரணம்: இந்த ஆத்மாவினுடைய ஸ்வரூபத்திற்குத் தக்கதான இந்தக் கைங்கர்யம்தான் "ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்யவேண்டும் நாம்" [திருவாய் 3-3-1] என்று 'எல்லாக்காலத்திலும் எல்லா தேசத்திலும் எம்பெருமானோடு எல்லா நிலைகளிலும் பிரியாது நின்று குற்றமற்ற அடிமைசெய்ய வேண்டும்' என்று நம்மாழ்வார் அருளிச் செய்தபடியே எல்லா தேசத்திலும் எல்லாக் காலத்திலும், எல்லா நிலைகளிலும் நடந்து செல்லும் என்று கருத்து.

மனைவிக்கு மங்களஸூத்ரமாகிற தாலியைத் தரிப்பது 'அவள் கணவனுக்கே ஆட்பட்டவள்' என்று காட்டுவதுபோலே, திருமந்திரத்தைத் தரிப்பது, சேதனர்கள் எம்பெருமானுக்கே ஆட்பட்டவர்கள் என்று காட்டும் என்னும் விஷயத்தை, திருமந்திரத்தை ஒரு மங்கள ஸூத்ரமாக உருவகப்படுத்துவதன் மூலம் அருளிச் செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

மூ 113: எட்டிழையாய் மூன்று சரடாயிருப்பதொரு மங்களஸூத்ரம் போலே திருமந்த்ரம்.

விவரணம்: அதாவது—பதினாறு இழையாய், இரண்டு சரடாயிருக்கும் உலகில் வழங்கும் தாலிச்சரடு போல் அல்லாமல், எட்டு இழையாய் மூன்று சரடாய் இருக்கும் தாலிச் சரடு போலே, எட்டு எழுத்துகளோடும் மூன்று பதங்களோடும் கூடியிருக்கிறது இத்திருமந்திரம் என்று கருத்து.

'இப்படி உருவகப்படுத்திச் சொன்னதால் எந்த அர்த்தத்தை உணர்த்துகிறது' என்னும் கேள்விக்குப் பதிலை அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

மூ 114: இத்தால் ஈஶ்வரன் ஆத்மாக்களுக்குப் பதியாய் நின்று ரக்ஷிக்கும் என்கிறது.

விவரணம்: அதாவது-இந்தத்திருமந்திரத்தை மங்களஸூத்ரமாக (தாலிச்சரடாக) உருவகப்படுத்தியதால், ஸர்வேஶ்வரன் இத்திருமந்திரத்தோடு தொடர்புடைய ஆத்மாக்களுக்குப் பதியாய் நின்று அவர்களைக் காப்பாற்றுகிறான் என்று உணர்த்துகிறது.

இனி, இந்த மந்திரத்தால் சொல்லப்படும் பொருளைச் சுருக்கமாகச் சொல்லி இந்தத் திருமந்திர ப்ரகரணத்தை நிறைவுபடுத்துகிறார் அடுத்த சூர்ணையில்,

மூ 115: ஆக, திருமந்த்ரத்தால், "எம்பெருமானுக்கு உரியனான நான் எனக்கு உரியனன்றிக்கே ஒழியவேணும்; ஸர்வஶேஷியான நாராயணனுக்கே எல்லா அடிமைகளும் செய்யப்பெறுவேனாக வேணும்" என்றதாயிற்று.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே சரணம்

திருமந்த்ர ப்ரகரணம் முற்றிற்று.

விவரணம்: 'ஆக' என்று மூலத்தில் அருளியதால், இந்தத் திருமந்த்ரப்ரகரணம் முழுவதிலும் அருளிச்செய்த எல்லா அர்த்தங்களையும் இந்தச் சூர்ணையில் தொகுத்துக் கூறுகிறார் என்று தோற்றுகிறது. (எம்பெருமானுக்கே உரியேனான நான்) இதில் 'எம்பெருமானுக்கு' என்று நாலாம்வேற்றுமையோடுகூடிய முதலெழுத்தான 'அ' காரத்தின் பொருளையும், 'ஏ'காரத்தாலே நடுஎழுத்தான 'உ'காரத்தின் பொருளையும் 'உரியேனான நான்' என்று மூன்றும் எழுத்தான 'ம'காரத்தின் பொருளையும் சொல்லுகையாலே முதல் பதமான ஓங்காரத்தின் பொருளைச்சுருக்கிச் சொன்னதாயிற்று. (எனக்கு உரியனன்றிக்கே ஒழியவேணும்) இதில் "எனக்குரியன்" என்று ஆறும் வேற்றுமையுடன் கூடிய மகாரத்தின் பொருளையும், 'அன்றிக்கேயொழிய' என்கையாலே நகாரத்தின் பொருளையும், "வேணும்" என்கையாலே இவ்விஷயம் சேதனனால் பிரார்த்திக்கத் தக்கது என்பதையும் சொல்லுகையாலே, நடுப்பதமான "நம:" ஶப்தத்தின் பொருளைச் சுருக்கிச்சொன்னதாயிற்று. (ஸர்வ ஶேஷியான நாராயணனுக்கே எல்லா அடிமைகளும் செய்யப் பெறுவேனாக வேணும்) இதில் "ஸர்வ ஶேஷியான நாராயணனுக்கே" என்று கைங்கர்யத்தை ஏற்கின்றவனையும், கைங்கர்ய ப்ரார்த்தனையை வெளிப்படுத்தும் நாலாவது வேற்றுமையையும்,

'எல்லா அடிமைகளும் செய்யப்பெறுவேனாகவேணும்' என்றுகைங்கர்யத்தைப் ப்ரார்த்திக்கும் முறையையும் சொல்லுகையாலே. மூன்றாவது பதமான 'நாராயணாய' என்னும் பதத்தின் பொருளைச் சுருக்கிச் சொன்னதாயிற்று. 'என்றதாயிற்று' என்றது "என்று சொன்னதாயிற்று" என்னும் கருத்துடையது.

இந்த ப்ரகரணம் முழுவதும் விரிவாக அருளிச்செய்ததை மறுபடியும் இப்படிச் சுருக்கமாக அருளிச்செய்தது இந்தத் திருமந்திரத்தின் பொருளை அனைவரும் அறிந்து அநுஸந்திக்கைக்காக ஆகையாலே அனைவருக்கும் இந்தத்திருமந்திரத்தின் பொருள் எப்போதும் அநுஸந்திக்கத்தக்கது எனக் காட்டுவதற்காக. இந்தத் திருமந்திரப் பொருளையே பரமாசார்யரான பட்டர் தமது அஷ்ட ஶ்லோகியில் முதல் நாலு ஶ்லோகங்களில் அருளிச்செய்தார், அந்த நாலு ஶ்லோகங்களையும் மொழிப்புரையுடன் கொடுத்து, இந்தத் திருமந்திரவிவரணத்தை நிறைவுபடுத்துகிறோம்.

1 அகாரார்த்தோ விஷ்ணுர் ஜகதுதயரக்ஷாப்ரளயக்ருத்
மகாரார்த்தோ ஜீவ: ததுபகரணம் வைஷ்ணவமிதம் |
உகாரோऽநந்யார்ஹம் நியமயதி ஸம்பந்தமநயோ:
த்ரயீஸாரஸ்த்ர்யாத்மா ப்ரணவ இமமர்த்தம் ஸமதிஶத் ||

[எல்லா உலகங்களுக்கும் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகியவற்றைச்செய்யும் ஸர்வவ்யாபகனான விஷ்ணு (ப்ரணவத்திலுள்ள) அகாரத்தின் பொருளாவான். (ஜ்ஞாநத்தை வடிவாகவும் குணமாகவும் உடைய) ஜீவாத்மா மகாரத்தின் பொருளாவான். இந்த ஜீவாத்ம வஸ்துவானது எம்பெருமானுக்கே உரித்தான அடிமைப் பொருள் (என்பது மறைந்திருக்கும் நாலாம் வேற்றுமையின் பொருள்) (ப்ரணவத்தின் நடு எழுத்தான) உகாரமானது இந்த ஜீவாத்ம பரமாத்மாக்களுக்கு உண்டான உறவை, கணவன் மனைவிக்குப்போலே ஜீவன் பரமாத்மாவுக்கே உரியவன் என்று கட்டுப்படுத்துகிறது ஆக. இப்படி விவரிக்கப்பட்ட பொருளை மூன்று வேதங்களுடைய ஸாரமாகவும் மூன்று எழுத்தாகவும் மூன்று பதமாகவும் இருக்கின்ற ஓங்காரமானது தெரிவித்தது.]

2. மந்த்ர ப்₃ரஹ்மணி மத்₄யமேந நமஸா பும்ஸ: ஸ்வரூபம் க₃தி:
க₃ம்யம் ஶிக்ஷிதம் ஈக்ஷிதேந புரத: பஶ்சாத₃பி ஸ்தா₂நத: |
ஸ்வாதந்த்ர்யம் நிஜரக்ஷணம் ஸமுசிதா வ்ருத்திஶ்ச நாந்யோசிதா
தஸ்யைவேதி ஹரேர் விவிச்ய கதி₂தம் ஸ்வஸ்யாபி நார்ஹம் தத: ||

[மிகச்சிறந்த மந்த்ரமாகிற திருவெட்டெழுத்தில் இடையில் உள்ள நமஸ் ஶப்₃த₃த்தினால் முன்னேயுள்ள ப்ரணவத்தோடு சேரும்போது ஜீவாத்மாவினுடையஸ்வரூபம் (எம்பெருமானுக்கே உரியது என்று) நன்கு காட்டப்பட்டது. தன் ஸ்தானத்திலேயே "நமோ நம:" என்று ஆவ்ருத்தி பெற்றபோது உபாயம் (எம்பெருமானே என்று) நன்கு காட்டப்பட்டது. பின்னேயுள்ள "நாராயணாய" என்னும் பதத்தோடு சேர்ந்தபோது ப₂லம் (எம்பெருமானுக்கேயான கைங்கர்யம் என்று) நன்கு காட்டப்பட்டது. (இதனால் தேறினவை எவை யெனில்) (1) ஸ்வதந்த்ரமாயிருக்கும் தன்மை (2) தன்னைக் காத்துக் கொள்வது (3) ஜீவனுடைய ஶேஷத்வத்திற்குப் பொருத்தமான கைங்கர்யம் ஆகியவை அந்த எம்பெருமானுக்கே உரியவை. மற்றை யோர்க்கு உரியவையல்ல என்று வகுத்துக் கூறப்பட்டதாயிற்று. ஆகையால் கீழ்ச்சொன்ன மூன்றும் மற்றையோரில் ஒருவனை தனக்கும் உரியதல்ல (என்பது தேறிற்று)

3. அகாரார்த்தா₂யைவ ஸ்வமஹமத₂ மஹ்யம் ந நிவஹா:
நராணாம் நித்யாநாம் அயநமிதி நாராயண பத₃ம் |
யமாஹாஸ்மை காலம் ஸகலமபி ஸர்வத்ர ஸகலாஸு
அவஸ்தா₂ஸ்வாவி: ஸ்யுர்மம ஸஹஜகைங்கர்ய வித₄ய: ||

[மகாரத்தால் சொல்லப்படும் நான் அகாரத்தால் சொல்லப்படும் நாராயணனுக்கே அடிமைப்பட்டவன், (இது ப்ரணவார்த்த₂ம்) அதற்குமேல் எனக்கு உரியேன் அல்லேன் (இது நம: பத₃த்தின் அர்த்த₂ம்) நாராயண பத₃மானது 'நித்ய வஸ்துக்களினுடைய திரள்களுக்கு ஆதா₄ரமாயிருப்பவன் நாராயணன்' என்று தத்புருஷ ஸமாஸத்தாலும்) 'நித்ய வஸ்துக்களுடைய திரள் களை இருப்பிடமாக(வியாபிக்கப்படுவனவாக) உடையவன் நாரா யணன்' (என்று ப₃ஹுவ்ரீஹி ஸமாஸத்தாலும்) எந்த எம்பெரு மானைச் சொல்லுகிறதோ அந்த எம்பெருமானுக்கு எல்லாக் காலங் களிலும், எல்லா இடங்களிலும், எல்லா நிலைகளிலும் என்னுடைய இயல்வான அடிமைத் தொழில்கள் விளையக்கடவன. (இது "நாரா யணாய" என்னும் பதத்தின் பொருள்,)]

4. தேஹாஸக்தாத்ம புத்திர்யதி பவதி பதம் ஸாது
 வித்யாத் த்ருதீயம்
ஸ்வாதந்த்ர்யாந்தோயதிஸ்யாத் ப்ரதமம்
 இதரஶேஷத்வதீஶ்சேத்த்விதீயம்
ஆத்மத்ராணோந்முகஶ்சேந்நம இதி ச பதம்
 பாந்தவாபாஸலோல:
ஶப்தம் நாராயணாக்யம் விஷயசபலதீஶ்சேத்
 சதுர்த்தீம் ப்ரபந்ந: ||

[தேஹத்தையே ஆத்மாவென்று உறுதியாக நினைப்பவனாகில் ப்ரணவத்தில் மூன்றாவது பதமாய் (ஆத்மா அறிவு மயமானவன் என்று காட்டும்) மகாரத்தை நன்கு நினைக்கக்கடவன், ஆத்மா ஸ்வதந்த்ரன் என்னும் மயக்கமுடையவனாகில் (அவன் எம்பெருமானுக்கு அடிமைப்பட்டவன் என்று காட்டும் நாலாவது வேற்றுமையோடு கூடிய) முதல் பதமான அகாரத்தை அறியக்கடவன். ஆத்மா மற்றவர்களுக்கு அடிமைப்பட்டது என்னும் மயக்கமுடையவனாகில் (எம்பெருமானுக்கே அடிமைப் பட்டவன் என்று காட்டும் ஏகாரப்பொருளுடைய) இரண்டாவது பதமான உகாரத்தைச் சிந்திக்கக்கடவன்: தன்னை ரக்ஷித்துக்கொள்வதில் ஊக்கமுடையவனாகில் (தன்னைத் தானும் ரக்ஷித்துக்கொள்ள முடியாது என்று காட்டும்) 'நம: என்னும் நடுப்பதத்தை நோக்கக்கடவன்; மேலெழுந்தோன்றும் ப்ராக்ருதரான உறவினரிடம் பாசமுடையவனாகில் (எல்லா உறவும் எம்பெருமானே என்று காட்டும்) "நாராயண" பதத்தைச் சிந்திக்கக் கடவன், ஶப்தாதிவிஷயங்களில் ஈடுபட்ட புத்தியை உடையவனாகில் (எம்பெருமானுக்கு அடிமை செய்வதே மிக இனிது என்று காட்டும் நாராயண பதத்தின் மேலுள்ள) நாலாவது வேற்றுமையைச் சிந்திக்கக் கடவன். (இப்படி அறிய வேண்டியவன்) ப்ரபந்நாதிகாரியாவான்.]

ஆக இவ்வளவால் பட்டர் தொடக்கமாக மணவாளமாமுனிகள் ஈறாகவுள்ள ஆசார்யர்களின் திருவுள்ளப்படி திருமந்திரத்தின் பொருள் நிறைவுற்றது.

ஸ்ரீ க்ருஷ்ணஸ்வாமி தாஸன் (ஸுதர்சனர்) எழுதிய
ரஹஸ்யத்ரய விவரணத்தில் முதல் பகுதியான
திருமந்திர விவரணம் நிறைவுற்றது.

# த்வயவிவரணம் — அவதாரிகை

ரஹஸ்யத்ரயத்தில் முதல் ரஹஸ்யமான திருமந்திரத்தின் அர்த்த₂த்தை விவரித்த பிறகு, அதில் நடுப் பத₃மான நம:பதத்தால் சொல்லப்பட்ட உபாயத்தையும், மூன்றும் பத₃மான நாராயண பத₃த்தால் சொல்லப்பட்ட உபேயத்தையும் தெளிவாகக் கூறும் த்₃வயத்தினுடைய அர்த்த₂ம் விவரிக்கப்படுகிறது.

பெரியவாச்சான் பிள்ளை பரந்த ரஹஸ்யத்திலும், வாதிகேஸரி ஜீயர் ரஹஸ்யத்ரயத்தை விவரிக்கும் தம நூல்களிலும திருமந்திரத்தை விவரித்தபின் த்₃வயத்தையே விவரித்ததும் இந்தக் கருத்தாலேயே ஆகும்.

ஆனால் பிள்ளைலோகாசார்யர் தாம் முமுக்ஷுப்படிக்கு முன் அருளிச்செய்த யாத்ருச்சிகப் படியிலும் பரந்தபடியிலும் ஸ்ரீயப்பதிப் படியிலும் திருமந்திரத்தை விவரித்தபிறகு சரமஶ்லோகத்தையும அதற்குப்பிறகு த்₃வயத்தையும விவரித்துள்ளார் இதற்குக் கருத்து பின்வருமாறு:—

1. திருமந்திரம் மந்த்ர ரஹஸ்யம் எனப்படும். உபாயத்தை விதிக்கும் சரம ஶ்லோகம் விதி₄ ரஹஸ்யம் எனப்படும். உபாயத்தின் அனுஷ்டா₂னத்தைக் காட்டும் த்₃வயம் அனுஷ்டான ரஹஸ்யம் எனப்படும். முதலில் விதியைச்சொல்லி அதற்குப்பிறகு அனுஷ்டானத்தைச் சொல்வதே தக்கதாகையாலே, இந்த மூன்று ரஹஸ்யநூல்களிலும் முதலில் சரமஶ்லோகத்தை விவரித்துப் பிறகு த்₃வயம் விவரிக்கப்படுகிறது.

2. திருமந்த்ரம் ப்ராப்யமான கைங்கர்யத்தைச் சொல்லுவதில் நோக்குடையது சரம ஶ்லோகம் அந்த ப்ராப்யத்தைப் பெறுவதற்கு உபாயம் எம்பெருமானே என்று சொல்லுவதில் நோக்குடையது. 'த்₃வயம்' அந்த உபாயமானஎம்பெருமானைப் பற்றி, ப்ராப்யமான கைங்கர்யத்தை ப்ரார்த்திப்பதாகையாலே முதல் இரண்டு ரஹஸ்யங்களில் சொன்ன ப்ராப்ய ப்ராபகங்களைப்பற்றி அனுஷ்டானத்தைத் தெரிவிப்பதாய் உள்ளது. இக்காரணத்தாலும் திருமந்திரம், சரம ஶ்லோகம், த்₃வயம் என்னும் க்ரமத்தில் விவரிக்கப்படுகிறது.

முமுக்ஷுப்படி பரந்த ரஹஸ்யம் முதலானவற்றில் த்வயத்தைச் சரமஶ்லோகத்திற்கு முன் சொன்னதற்கு மற்றொரு கருத்தும் உண்டு. திருமந்திரத்தில் இரண்டாவது மூன்றாவது பதங்களுக்கு

முறையே த்வயத்தின் முதல் இரண்டு வாக்கியங்களும் விவரணமாய் உள்ளன. அவ்விரண்டுக்கும் முறையே சரமஶ்லோகத்தின் முற்பாதியும் பிற்பாதியும் விவரணமாய் உள்ளன. இந்தப் பொருத்தத்தை நோக்கி திருமந்திரம் த்வயம் சரம ஶ்லோகம் என்னும் வரிசையில் இங்கு விவரிக்கப்படுகிறது.

இனி த்வய ப்ரகரணம் முழுவதையும் முமுக்ஷுப்படியின் சூர்ணைகளைக்கொடுத்து மாமுனிகளின் வியாக்யானத்தை அனுஸரித்து விவரணம் தரப்படுகிறது. ஆங்காங்கு மற்ற ரஹஸ்யங்களிலிருந்து மேற்கோள் காட்டப்படுகிறது.

த்வய விவரணம் அவதாரிகை நிறைவுற்றது.

த்வய ப்ரகரணத்தின் முதல் சூர்ணையில் வைஷ்ணவனுக்கு இருக்கும் ஓர் அதிகாரிக்குத் தகுதியை விளைப்பதற்கு அவசியம் வேண்டியவையான தன்மைகளைத் தெளிவாக அருளிச்செய்கிறார்.

**மூ 116: புறம்புண்டான பற்றுகளை வாஸனையோடே விடுகையும், எம்பெருமானையே தஞ்சமென்று பற்றுகையும், பேறு தப்பாதென்று துணிந்திருக்கையும், பேற்றுக்கு த்வரிக்கையும், இருக்கும் நாள் உகந்தருளின நிலங்களிலே ப்ரவணனாய் குணாநுபவ கைங்கர்யங்களே பொழுது போக்காகையும், இப்படி இருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் ஏற்றமறிந்து உகந்திருக்கையும், திருமந்திரத்திலும் த்வயத்திலும் நியதனாகையும், ஆசார்ய ப்ரேமம் கனத்திருக்கையும் ஆசார்யன் பக்கலிலும் எம்பெருமான் பக்கலிலும் க்ருதஜ்ஞனாய்ப் போருகையும், ஜ்ஞானமும், விரக்தியும், சாந்தியும் உடையனாயிருக்கும் பரமஸாத்விகனோடே ஸஹவாஸம் பண்ணுகையும் வைஷ்ணவாதிகாரிக்கு அவஶ்யாபேக்ஷிதம்.**

விவரணம்: (புறம்புண்டான பற்றுகளை வாஸனையோடே விடுகையும்)

பிதரம் மாதரம் தாராந் புத்ராந் பந்தூந் ஸகீந் குரூந் |
ரத்நாநி தநதாந்யாநி க்ஷேத்ராணி ச க்ருஹாணி ச ||
ஸர்வதர்மாம்ஶ்ச ஸந்த்யஜ்ய ஸர்வகாமாம்ஶ்ச ஸாக்ஷராந்|

லோகவிக்ராந்தசரணௌ ஶரணம் தே஽வ்ரஜம் விபோ ॥

[விஹகேந்த்ர ஸம்ஹிதை படலம் 22]

[எம்பிரானே! தந்தை, தாய், மனைவி, மக்கள், உறவினர், நண்பர் ஆசார்யர்கள், ரத்தினங்கள், தனதான்யங்கள், வயல்கள், வீடுகள், எல்லா உபாயங்கள், கைவல்யமுள்ளிட்ட எல்லா உபேயங்கள் ஆகிய அனைத்தையும் வாஸனையோடு விட்டு தேவரீருடைய உலகமளந்த பொன்னடிகளையே ஶரணமடைந்தேன்] என்கிறபடியே ப்ராக்ருதமான வெளிவிஷயங்களில் பற்றைத் திரும்பி வராதபடி வாஸனையோடே விடவேண்டுமென்று கருத்து.

(எம்பெருமானையே தஞ்சமென்று பற்றுகையும்) வேறொன்றும் தஞ்சமென்கிற நினைவு கலக்காதபடி இயற்கையான ரக்ஷகனான எம்பெருமானையே தஞ்சமாக ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று கருத்து. இவ்விரண்டு வாக்யங்களும் சரமஶ்லோகத்தில் முற்பாதியிலுள்ள அர்த்தத்தைச் சொல்லுகின்றன. "புறம்புண்டான பற்றுகளை" என்பதால் "ஸர்வதர்மாந்" என்ற பதத்தின் அர்த்தத்தையும் "அடைய வாஸனையோடே விடுகை" என்பதால் "பரித்யஜ்ய" என்ற பதத்தின் அர்த்தத்தையும் "எம்பெருமானை" என்று 'மாம்' என்கிற பதத்தின் அர்த்தத்தையும் 'ஏ' என்னும் ஏகாரத்தாலே "ஏகம்" என்ற பதத்தின் அர்த்தத்தையும் 'தஞ்சம்' என்கையாலே "ஶரண" பதத்தின் அர்த்தத்தையும், "பற்றுகையும்" என்று "வ்ரஜ" பதத்தின் அர்த்தத்தையும் வரிசையாகச் சொல்லுகையாலே இது தெளிவாகிறது.

(பேறு தப்பாதென்று துணிந்திருக்கையும்) இந்த ஸ்ரீவைஷ்ணவ அதிகாரிக்கு மூன்று காரணங்களால் தமக்குப்பேறு கிடைக்குமோ என்னும் ஐயம் விளைய இடமுண்டு. அவையாவன:— (1) "பெருகிற பகவத்கைங்கர்யம் பிரமன் முதலானவர்களுக்கும் தமது முயற்சியினால் அடைய அரிதாயிருப்பது. எளியவனும்பஞன நமக்கு எப்படிக் கிடைக்கும்?" என்னும் ஐயம். (2) "மிகப் பெரிய பேறான பகவத்பாகவத கைங்கர்யங்கள் ஒருமுறை எம்பெருமானே தஞ்சம் என்று நினைப்பதால் எப்படிக் கிடைக்கும்?" என்னும் ஐயம். (3) "நானோ குற்றங்களுக்கெல்லாம் கொள்கலனாயிருப்பவன், நமக்கு எப்படிப் பேரின்பம் கிட்டும்" என்னும் ஐயம். இந்த மூன்று ஐயங்களையும் போக்கிக்கொண்டு பேறு தப்பாது என்று துணிந்திருக்கும் வகை பின்வருமாறு:—

(1) பிரமன் முதலானோர் தமதுமுயற்சியாலே எம்பெருமானை அடைய நினைக்கிறார்கள். அதனால் அவனை அடைவது அவர்களுக்கு அரிதாகிறது. நாமோ நம்முடைய முயற்சியால் அல்லாமல் எம்பெருமானையே உபாயமாகக் கொண்டு அவனை அடையவிருக்கிறோம். ஆகையால் யசோதை முதலானவர்க்குப்போலே அவன் நமக்கு அடைய எளியவனே. (2) நாம் ஒரு முறை எம்பெருமானைத் தஞ்சம் என்று நினைக்கும் நினைவு நமது பேற்றுக்குக்காரணமல்ல. இந் நினைவுக்கு விஷயமான எம்பெருமானே பேற்றுக்குக் காரணம். ஆகையால் நாம் பேறு தப்பாது என்று துணிந்திருக்கலாம். (3) இவ்வதி₄காரி தன்னிடமுள்ள ஒன்றைக் கொண்டு எம்பெருமானை அடைய நினைப்பவன் அல்லன். எம்பெருமானைக்கொண்டே அவனை அடைய நினைப்பவன். "நான் குற்றங்களுக்கெல்லாம் கொள்கலமாயிருப்பவன். உன்னைப் பெறுவதற்கு என்னிடம் கைம்முதல் எதுவும் இல்லாதவன். வேறு ஒருவரைப் புகலாகவும் கொள்ளாதவன். நீயே எனக்கு உபாயமாக வேண்டும்" என்று பிரார்த்திக்கையாகிற ஶரணாக₃தியைச் செய்தவன். இத்தகைய அதி₄காரிகள் விஷயத்தில் குற்றங்களைக் கணிசியாமலும், சில குற்றங்களையே குணமாகக்கொண்டும் எம்பெருமான் காரியம் செய்வான் என்று ஶாஸ்த்ரங்கள் கூறுகையாலே தன் குற்றங்களைக்கண்டு இவன் ஐயம் கொள்ள வேண்டியதில்லை, ஆக, "இம்மூன்று ஐயங்களையும் நீக்கி, பேறு தப்பாது என்று துணிந்திருக்கையாகிற மஹாவிஶ்வாஸம் இவ்வதிகாரிக்கு இன்றியமையாதது" என்று தேறுகிறது. இது இவனுக்குத் தகுதியாக அமையுமேயொழிய உபாயம் ஆகாது,

இத்தகைய மஹாவிஶ்வாஸத்தைக் கொண்ட ப்ரபந்நன் இருக்க வேண்டிய நிலையைச் சொல்லுகிறது அடுத்த வாக்யம். (பேற்றுக்கு த்வரிக்கையும்) இப்படி மஹாவிஶ்வாஸத்தோடு கூடியவன் "பேறு கிடைத்தபோது கிடைக்கட்டும்" என்று மெத்தனமாக இல்லாமல் "மாக வைகுந்தம் காண்பதற்கு என் மனம் ஏகமெண்ணும்" [திருவாய் 9-8-7] "தாவிவையங்கொண்ட தடந்தாமரைகட்கே கூவிக்கொள்ளும் காலம் இன்னம் குறுகாதோ" [திருவாய் 6-9-9] என்று பதறவேண்டும் என்று கருத்து. இவ்விரண்டு வாக்யங்களாலும் உபாயத்தைப்பற்றத் தகுதியைக்

காட்டும் மஹாவிஶ்வாஸமும், உபேயத்தையடையத் தகுதியைக் காட்டும் ப்ராப்யத்வரையும் இவ்வதிகாரிக்கு வேண்டியவை என்று சொல்லப்பட்டது.

(இருக்கும்நாள் உகந்தருளின நிலங்களிலே ப்ரவணனாய், குணாநுபவ கைங்கர்யங்களே பொழுது போக்காகையும்) சரீரம் விட்டபின் பரமபதம் சென்று எம்பெருமானை அநுபவித்துக் கைங்கர்யம் செய்கையாகிற பேற்றிலே த்வரை நடந்துகொண்டிருந்தபோதிலும், இந்த சரீரம் இருக்கும் வரையில் "தானுகந்த ஊர்" [திருநெடு 6] என்று சொல்லப்படும் எம்பெருமான் உகந்து வாழும் திவ்யதேசங்களிலே "கண்டியூர் அரங்கம் மெய்யம் கச்சிபேர் மல்லையென்று மண்டினார்" [திருக்குறு 19] என்கிறபடியே ஈடுபட்டிருப்பவனாய், அந்தந்த திவ்யதேசங்களிலே நிற்கிற எம்பெருமானுடைய கல்யாணகுணங்களை அநுபவிப்பதும் அதுகாரணமாக மனோவாக்காயங்கள் என்னும் மூன்று கரணத்தாலும் இவ்வெம்பெருமான் விஷயத்தில் பண்ணும் கைங்கர்யமுமே போது போக்காக இருக்கவேண்டும் என்று கருத்து.

(இப்படி இருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் ஏற்றமறிந்து உகந்திருக்கையும்) கீழே சொன்ன இத்தன்மைகளையெல்லாம் உடையவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டால் "நெருப்புச்சட்டியிலே தாமரை பூத்தாற்போலே இந்த லீலா விபூதியில் இப்படியும் சிலர் இருப்பதே" என்று அவர்கள் பெருமையை உணர்ந்து அவர்களிடம் மிகவும் ப்ரீதியுடன் இருக்கவேண்டும் என்று கருத்து. கீழ்ச்சொன்ன தன்மைகளெல்லாம் உண்டானாலும் இத்தன்மை வருவது அரிதன்றோ.

(திருமந்த்ரத்திலும் த்வயத்திலும் நியதனாகையும்) பகவத் மந்த்ரங்களாயிருந்தாலும், மற்ற மந்திரங்களின் அருகிலும் மறந்தும் செல்லாமல், நாம் கைவிட வேண்டியவற்றையும் நாம் கைக்கொள்ளவேண்டியவற்றையும் நமக்குத் தெளிவாக அறிவிக்கின்ற திருமந்திரத்திலும், அதனுடைய பொருளை விவரிக்கும் த்வயத்திலும் ஊன்றியிருக்கவேண்டும் என்று கருத்து.

(ஆசார்ய ப்ரேமம் கனத்திருக்கையும்) கீழ்ச் சொன்ன விஷயங்களையெல்லாம் உபதேசத்தாலே தனக்கு உணர்த்திய ஆசார்யன் விஷயத்தில்,

**யஸ்ய தே₃வே பரா ப₄க்திர் யதா₂ தே₃வே ததா₂ கு₃ரௌ |**
**தஸ்யைதே கதி₂தா ஹ்யர்தா₂: ப்ரகாஶந்தே மஹாத்மந: ||**
[ஶ்வேதாஶ்வதரம் 6-23]

[எவனுக்குப் பரதெய்வத்திடம் மேலான பக்தியுள்ளதோ, தெய்வத்திடம் போலே ஆசார்யனிடமும் மேலான ப₄க்தியுள்ளதோ, அந்த மஹாபுருஷனுக்கே உபதே₃ஶிக்கப்பட்ட இவ்வர்த்த₂ங்கள் விளங்கும்.] என்கிறபடியே பேரன்பு பொங்க வேண்டும் என்று கருத்து.

(ஆசார்யன் பக்கலிலும் எம்பெருமான் பக்கலிலும் க்ருதஜ்ஞனாய்ப்போருகையும்) அநாதிகாலமாக ஸம்ஸாரத்தில் மூழ்கியிருந்த தன்னை நித்யஸூரிகளின் பேற்றுக்குத் தகுதியுடையனும்படி இரும்பைப் பொன்னாக்குவாரைப் போலே திருத்தின ஆசார்யன் விஷயத்திலும், அநாதி₃காலமாகப் படாதபாடுபட்டு இவனுக்கு அத்₃வேஷம் (ப₄க₃வத்₃விஷயத்தில் த்₃வேஷமின்மை) ஆபி₄முக்₂யம் (ஈடுபாடு) முதலானவற்றை விளைத்துக்கொண்டு தக்க ஆசார்யனோடு இவனைச்சேர்த்த எம்பெருமான் விஷயத்திலும் நன்றி பாராட்டவேண்டும் என்று கருத்து.

(ஜ்ஞாநமும் விரக்தியும், ஶாந்தியும் உடையனாயிருக்கும் பரமஸாத்விகனோடே கூட ஸஹவாஸம் பண்ணுகையும்) பரமஸாத்விகனான ஒரு வைஷ்ணவாதி₄காரியோடு இந்த அதி₄காரிக்கு ஸஹவாஸம் வேண்டும் என்கிறது. அந்தப் பரமஸாத்விகனான அதி₄காரியிடம் ஜ்ஞாநம், விரக்தி, ஶாந்தி ஆகிய மூன்று பெருமைகள் இருக்கவேண்டும். (1) ஜ்ஞாநம்—தத்வஹித புருஷார்த₂ங்களைப் பற்றிய உண்மையறிவு. இவ்வறிவு கலக்கம் நேரும் காலங்களிலும், கலங்காமல் இவனைக்காப்பாற்றுவதாய் இருக்கும். முன்சொன்ன தன்மைகளை இவனுக்கு வளர்ப்பதாகவும் இருக்கும். (2) விரக்தி—ப்ராக்ருத விஷயங்களில் வைராக்யமுள்ளவனாய் இருப்பான் இவன். (3) ஶாந்தி—இந்த ஜ்ஞாநமும், வைராக்யமும் தனக்கு உண்டென்று கர்வமில்லாமல் இருக்கையாகிற ஶாந்தியும் இவனிடம் உண்டு. இவற்றையுடைய பா₄க₃வதனோடு வைஷ்ணவாதி₄காரி ஸஹவாஸம் கொள்ளவேண்டும் என்று கருத்து.

(வைஷ்ணவாதி₄காரிக்கு அவஶ்யாபேக்ஷிதம்) இவை இத்தனையும் வைஷ்ணவன் என்று தானும் எம்பெருமானும் அறிய இருப்பவனாகிற ஒரு சான்றோனுக்கு அவசியம் உண்டாக வேண்டும் என்று கருத்து.

இப்படிப்பட்ட அதிகாரிக்கு அனுஸந்திக்க வேண்டியவை எவை என்பதை அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

**மூ 117: இந்த அதி₄காரிக்கு ரஹஸ்யத்ரயமும் அநுஸந்தே₄யம்.**

விவரணம்: அதாவது – 116 வது சூர்ணையில் சொல்லப்பட்ட தன்மைகளையுடையவனாயிருக்கும் இந்த அதி₄காரிக்கு, அதில் சொன்ன ஜ்ஞானத்தையும் அனுஷ்டானத்தையும் வளர்க்கும் திருமந்திரம் த்₃வயம் சரமஶ்லோகம் என்னும் மூன்று ரஹஸ்யங்களும் அனுஸந்தி₄க்கத் தக்கவை என்று கருத்து.

இனி இரண்டாவது ரஹஸ்யமான த்₃வயத்தில் சொல்லுகிற அர்த்த₂த்தின் சிறப்பைத் தெரிவிக்கைக்காக, மற்ற சாஸ்திரங்கள் அவற்றின் ஸாரமான திருமந்திரம் அதை விவரிக்கும் சரமஶ்லோகம் ஆகியவற்றின் ஸாரார்த்த₂ங்களை அருளிச்செய்துகொண்டு கடைசியாக த்₃வயத்தின் ஸாரார்த்த₂த்தை அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

**மூ 118: எல்லா ப்ரமாணங்களிலும் தே₃ஹத்தாலே பேறென்கிறது; திருமந்த்ரத்தில் ஆத்மாவாலே பேறென்கிறது; சரமஶ்லோகத்தில் ஈஶ்வரனாலே பேறென்கிறது; த்₃வயத்தில் பெரியபிராட்டியாராலே பேறென்கிறது.**

விவரணம்: அதாவது வேதம் முதலான மற்ற சாஸ்திரங்கள் இவனுக்கு உய்வுபாயமாக ப₄க்தி முதலான ஸாத₄னங்களை விதிக்கின்றன. அந்த ஸாத₄நங்களை அனுஷ்டிப்பதற்கு இந்த ஜீவன் ஆரோக்₃யமுள்ள சரீரத்தோடு கூடியிருக்கவேண்டும். ஆகையால் சரீரத்தோடு கூடிய ஜீவனைக் குறித்து மோக்ஷ ஸாத₄நங்களை விதிக்கும் அந்த ஶாஸ்த்ரங்களாலே தேஹத்தாலேயே இவனுக்குப் பேறு கிடைக்கிறது என்று சொல்லப்பட்டதா

கிறது. அந்த ஶாஸ்த்ரங்களின் ஸாரமாக ஆத்ம ஸ்வருபத்தைப் பற்றிப் பேசும் திருமந்த்ரத்தில் நடுப்பதமான 'நம:' என்னும் சொல் "என்னை நான் ரக்ஷித்துக்கொள்ள முடியாது. எம்பெருமானே ரக்ஷகன்" என்று கூறுகிறது. இதனால் இந்த ஜீவன் தன்னைத் தான் காத்துக் கொள்வதிலிருந்து நீங்கினாலொழிய எம்பெருமான் ரக்ஷிக்கமாட்டான் என்று தேறுகிறது. ஆக, ஈஶ்வரன் அநாதிகாலமாக ஜீவனை ரக்ஷிப்பதற்குச் செய்துவரும் முயற்சிகளுக்குத் தடையான தன்னைத்தான் ரக்ஷித்துக் கொள்ளச் செய்யும் முயற்சியை விட்டிருக்கும் ஆத்மாவாலே பேறு கிடைக்கிறது என்று திருமந்த்ரத்தால் சொல்லப்பட்டதாயிற்று. சரமஶ்லோகத்தில் சேதநனைப் பார்த்து "வேதம் முதலிய சாஸ்திரங்கள் செய் எனக்கட்டளையிடும் எல்லா உபாயங்களையும் விட்டு என்னையே பற்றக் கடவாய். உனக்கு நான் எல்லாத் தடைகளையும் போக்கி நன்மையை உண்டுபண்ணுகிறேன். நீ கலங்கவேண்டியதில்லை" என்று பகவான் அருளிச்செய்கிறான், இதிலிருந்து எம்பெருமான் ஸ்வதந்த்ரமாக நின்று எதையும் செய்து தலைக்கட்டக் கூடியவன் என்று விளங்குகிறது. ஆகையால் ஜீவன் எம்பெருமானைப் பற்றுகிற பற்றும் மிகை என்னலாம்படி, தானே இவனைக் கைக்கொண்டு தன்னை இவன் அடையத் தடையாயிருக்கும் எல்லாப்பாபங்களையும் விலக்கி, இவனைத் தன் திருவடிகளிலே சேர்த்துக்கொள்ளும் சுதந்திரமுடைய ஈஶ்வரனாலே பேறு என்று சரமஶ்லோகத்தில் சொல்லப்பட்டதாயிற்று. "ஸ்ரீமந் நாராயணனுடைய திருவடிகளைப்பற்றுகிறேன்" என்னும் அநுஸந்தாநமாயிருக்கும் த்வயம் "புருஷகாரமாய் இவனைப் பரிந்துரைக்கும் பிராட்டியோடு கூடியிருக்கும் எம்பெருமானைப் பற்றினால்தான் பேறு கிட்டும் என்று கூறுகிறது. ஆகையால், த்வயத்தில் "பெரியபிராட்டியாராலேயே பேறு" என்று சொல்லப்பட்டதாயிற்று. இந்தச் சூர்ணையில் "தேஹத்தாலே பேறு, ஆத்மாவாலே பேறு, ஈஶ்வரனாலே பேறு, பெரியபிராட்டியாராலே பேறு" என்று முறையே நாலு வாக்யத்திலும் ஒவ்வொன்றைச் சொன்னது மற்றவற்றைத் தவிர்ப்பதில் நோக்குடையதன்று. ஒவ்வொரு ப்ரமாணத்திலும் ஒவ்வொன்றின் முக்யத்வத்தை வலியுறுத்துவதிலேயே நோக்குடையது.

பலனைக்கொடுக்கும் உபாயம் எம்பெருமானாயிருக்க 'த்வயத்தாலே பெரியபிராட்டியாராலே பேறு' என்று சொல்லுவது எப்படி ?" என்னும் கேள்விக்கு அடுத்த சூர்ணையில் பதில் அருளிச்செய்கிறார்.

ஸூ 119: பெரியபிராட்டியாராலே பேறு கைபுகுவது – இவள் புருஷகாரமானாலல்லது ஈச்வரன் காரியம் செய்யான் என்கை.

விவரணம்: அதாவது – இந்தச் சேதனனுக்கு அடையவேண்டியதைக் கொடுப்பதற்கும், தவிர்க்கவேண்டியவற்றைப் போக்குவதற்கும் வல்லவன் எம்பெருமானேயாய் இருக்க, இவனுக்குப் பெரியபிராட்டியாராலே பேறு கிடைக்கிறது என்று சொன்னது— இந்த ஜீவனுடைய குற்றங்களைப் பாராமல் இவனை எம்பெருமான் ரக்ஷிப்பதற்கு உறுப்பாக இவள் இவனை எம்பெருமானோடு சேர விட்டுப் பரிந்துரைப்பதாகிற புருஷகாரச்செயலைச் செய்தாலொழிய எம்பெருமான் இந்த ஜீவனுடைய காரியத்தைச் செய்ய மாட்டான் என்னும் கருத்தாலே என்றபடி.

116-வது சூர்ணையில் ஒரு வைஷ்ணவனுன அதிகாரிக்குப் பொதுவாக இருக்கவேண்டிய தன்மைகளைச் சொல்லிற்று. சிறப்பாக த்வயத்திற்கு அதிகாரியாய் இருப்பவனுக்கு இருக்கவேண்டிய தன்மைகளை அடுத்த சூர்ணையில் அருளிச்செய்கிறார்.

ஸூ 120: த்வயத்துக்கு அதிகாரி ஆகிஞ்சந்யமும் அநந்யகதித்வமும் உடையவன்.

விவரணம்: அதாவது – ஸித்தோபாயமான எம்பெருமானை வரிப்பதைச் சொல்லும் த்வயத்துக்கு அதிகாரி

அஹமஸ்ம்யபராதாநாமாலயோऽகிஞ்சநோऽகதி: |
த்வமேவோபாயபூதோ மே பவேதி ப்ரார்த்தநாமதி: ||
ஶரணாகதிரித்யுக்தா ஸா தேவேऽஸ்மிந் ப்ரயுஜ்யதாம் ||

[அஹிர்புத்ந்யஸம்ஹிதை 36-38]

[ "நான் குற்றங்களுக்கெல்லாம் கொள்கலமாயிருப்பவன்; (உன்னைத்தவிர) வேறு உபாயமற்றவன், வேறு உபேயமுமற்றவன். நீயே எனக்கு உபாயமாவாயாக" என்று பிரார்த்திக்கும் அறிவே ஶரணாகதி எனப்படுகிறது. அது இந்த தேவனிடத்தில் செய்யப் படட்டும்] என்றும்,

ந தர்மநிஷ்டோऽஸ்மி ந சாத்மவேதீ
ந பக்திமாம்ஸ் த்வச்சரணாரவிந்தே |
அகிஞ்சநோऽநந்யகதி: ஶரண்ய
த்வத்பாதமூலம் ஶரணம் ப்ரபத்யே ||

[ஸ்தோ-ர-22]

[ஶரணமடையத்தக்கவனே ! நான் கர்மயோக₃த்தில் நிலையுடையே னல்லேன் ; ஜ்ஞானயோக₃த்திலுமப்படியே ; உன் திருவடிகளில் ப₄க்தியோக₃த்திலும் நிஷ்டை₂யில்லை ; உன்னைத் தவிர வேறு உபாயமில்லாதவன் ; வேறு ப்ராப்யமில்லாதவன்; உன் திருவடி யாரத்தை ஶரணமடைகிறேன்] என்றும், "புகலொன்றில்லா அடியேன்" [திருவாய் 6-10-10] என்றும் சொல்லுகிறபடியே தன்னிடம் கர்மயோக₃மும் ஜ்ஞானயோகம் ப₄க்தியோகம் முதலான எந்தக் கைம்முதலும் இல்லாமையாகிற ஆகிஞ்சந்யமும், தனக்குத் தஞ்சமாக வேறொருவரும் இல்லாமையாகிற அநந்யக₃தித்வமு மாகிற இரண்டும் உடையவன் என்று கருத்து.

இவ்விரண்டும் எத்தன்மையானவை என்னும் கேள்விக்கு அடுத்த சூர்ணையில் பதிலளிக்கிறார்.

**ஸூ 121 : இவை இரண்டும் ப்ரபந்த பரித்ராணத் திலே சொன்னோம்.**

விவரணம் : அதாவது— மற்ற உபாயங்கள் இல்லாமையாகிற ஆகிஞ்சந்யமும் இருக்கும்படியையும், மற்ற ரக்ஷகர்கள் இல்லா மையாகிற அநந்யக₃தித்வம் இருக்கும்படியையும் நம்முடைய மற் றொரு ப்ரப₃ந்த₄மாகிற ப்ரபந்ந பரித்ராணத்திலே மிகத்தெளி வாகச்சொன்னோம். அதில் கண்டுகொள்ளலாம் என்று கருத்து.

இனி, த்₃வயத்தின் இரண்டு வாக்கியங்களின் பொருளையும் அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

**ஸூ 122 : இதில் முற்கூற்றால் பெரிய பிராட்டியாரை முன்னிட்டு ஈஸ்வரன் திருவடிகளை உபாயமாகப் பற்று கிறது; பிற்கூற்றால் அச்சேர்த்தியிலே அடிமையை இரக்கிறது.**

விவரணம் : அதாவது—இந்த த்₃வயத்தில் முதல் க₂ண்டத் தாலே "ஶ்ரீமத்" என்று பெரிய பிராட்டியாரைப் புருஷகாரமாக முன்னிட்டுக்கொண்டு, "நாராயண சரணௌ" என்கிற ஈஶ்வரன் திருவடிகளை "ஶரணம் ப்ரபத்₃யே" என்று உபாயமாகப் பற்று கிறது ; இரண்டாவது க₂ண்டத்தாலே "ஶ்ரீமதே" என்று பெரிய பிராட்டியாரும் எம்பெருமானுமான சேர்த்தியிலே, "நாராயணாய" என்கிற நான்காம் வேற்றுமையாலே கைங்கர்யத்தைப் பிரார்த்திக் கிறது என்று கருத்து. இறுதியிலுள்ள "நம:" என்னும் சொல் கைங்கர்யம் நம்முடைய ஆனந்த₃த்திற்கு உறுப்பு என்னும் எண்ண

மாகிற விரோதி₄ போகவேண்டுமென்று சொல்லுகிறதாகையாலே "அடிமையை இரக்கிறது" என்னும் தொடரிலே அடங்கியிருக்கிறது.

இனி, த்₃வயத்திலுள்ள ஒவ்வொரு சொல்லுக்கும் பொருள் அருளிச்செய்வதாகத் திருவுள்ளம்பற்றி, "ஸ்ரீமத்" என்னும் முதல் பத₃த்தின் அர்த்த₂த்தை அருளிச் செய்யத் தொடங்குகிறார் அடுத்த சூர்ணையில் [135-வது சூர்ணைவரை ஸ்ரீமத் பத₃ார்த்த₂ம்]

**ஸூ 128 : ஸ்ரீ என்று பெரியபிராட்டியாருக்குத் திருநாமம்.**

**விவரணம் :** "ஸ்ரீ" என்னும் சொல் 'செல்வம்' முதலான பொருள்களையும் சொல்லுவதாக உலக வழக்கில் காண்கையாலே, அப்பொருள்கள் இங்கு கருதப்படவில்லை என்று காட்டுவதற்காக "ஸ்ரீ" என்னும் சொல் பெரிய பிராட்டியாருக்குத் திருநாமம் என்று அருளிச்செய்கிறார். "லக்ஷ்மீ: பத்₃மாலயா பத்₃மா கமலா ஸ்ரீ: ஹரிப்ரியா" [அமர 1-1-27] என்று அமரகோசத்தில் இதனாலேயே இத்திருநாமம் லக்ஷ்மியின் நாமங்களில் ஒன்றாகப் படிக்கப்பட்டது. இது மற்ற திருநாமங்கள் போலல்லாமல்

**ஸ்ரீரிதி ப்ரத₂மம் நாம லக்ஷ்ம்யா :**

[லக்ஷ்மீதே₃விக்கு 'ஸ்ரீ' என்பது முதல் திருநாமம்] என்கிற படியே இவளுக்கு முதன்மைபெற்ற முதல் திருநாமமாய் இருக்கும்.

**அ இதி ப₄க₃வதோ நாராயணஸ்ய ப்ரத₂மாபித₄ாநம் அபி₄தா₄தா கிம் நாம மங்க₃ளம் ந க்ருதம்**

[மஹாபா₄ஷ்யம்-1]

[ப₄க₃வான் நாராயணனின் முதல் திருநாமமான அகாரத்தை முதலிற்சொன்ன இவராலே என்ன மங்க₃ளம்தான் செய்யப்படவில்லை? ] என்கிறபடியே அகாரம் எம்பெருமானுக்கு முதன்மை பெற்ற முதல் திருநாமமாய் இருப்பது போல, இவளுக்கும் இந்த "ஸ்ரீ" என்னும் திருநாமம் முதன்மைபெற்ற முதல் திருநாமமாய் இருக்கிறது. இந்த 'அ'காரம் அவ-ரக்ஷணே என்னும் தா₄து விலிருந்து தோன்றியதாகையாலே, அவனே ரக்ஷகன் என்று காட்டும் தன்மைகளைச் சொல்லுவதாய் இருக்கும். அதுபோல இந்த 'ஸ்ரீ' என்னும் திருநாமம் இவளே புருஷகாரம் என்று காட்டும் தன்மைகளைச் சொல்லுவதாய் இருக்கும்.

இனி, இந்த 'ஸ்ரீ' என்னும் பதத்துக்குப் பொருள் அருளிச் செய்ய விரும்புகிறவராய் அடுத்த சூர்ணையில் இதற்கு உள்ள இரண்டு வ்யுத்பத்திகளை அருளிச்செய்கிறார்.

**சூ 124 : ஸ்ரீயதே, ஶ்ரயதே**

விவரணம்: அதாவது "ஶ்ரிஞ் ஸேவாயாம்" என்கிறபடியே, ஸேவையைப் பொருளாக உடைய தாதுவிலே "ஸ்ரீயதே இதி ஸ்ரீ:" [(அனைவராலும்) ஸேவிக்கப்படுகிறாளாகையால் 'ஸ்ரீ' ஆகிறாள்] என்கிற கர்மணி வ்யுத்பத்தியையும், "ஶ்ரயதே இதி—ஸ்ரீ:" [(எம்பெருமானை) ஸேவிக்கிறாள் ஆகையாலே 'ஸ்ரீ' எனப்படுகிறாள்] என்கிற கர்த்தரி வ்யுத்பத்தியையும் சொன்னபடி.

இந்த இரண்டு வ்யுத்பத்திக்கும் அடுத்த சூர்ணையில் அர்த்தம் அருளிச் செய்கிறார்.

**சூ 125: இதுக்கு அர்த்தம் — எல்லார்க்கும் இவளைப்பற்றி ஸ்வரூபலாபமாய், இவள் தனக்கும் அவனைப்பற்றி ஸ்வரூபலாபமாயிருக்கும் என்று.**

விவரணம்: அதாவது—இந்த இரண்டு வ்யுத்பத்திகளுக்கும் பொருள் பின்வருமாறு:- "ஸ்ரீயதே" என்று அனைவராலும் ஸேவிக்கப்படுகிறாள் என்று சொல்லுகையாலே, எல்லாச் சேதநர்களுக்கும் இவளைப் பற்றுகையாலே தங்களுக்கு ஶேஷத்வமாகிற ஸ்வரூபம் உண்டாயிருக்கும் என்று சொல்லுகிறது. "ஶ்ரயதே" என்று ஸர்வேஶ்வரனை இவள் ஸேவிக்கின்றாள் (ஆஶ்ரயித்திருக்கிறாள்) என்கையாலே, இவளுக்கும் ஸர்வேஶ்வரனைப் பற்றியிருக்கையாலே தன்னுடைய பகவச் சேஷத்வமாகிற ஸ்வரூபம் உண்டாயிருக்கும் என்று சொல்லுகிறது. இப்பிராட்டிக்கு மற்ற சேதநர்கள் விஷயத்தில் ஶேஷித்வம் (கைங்கர்யம் கொள்ளுபவளாயிருக்கை) ஸர்வேஶ்வரன் விஷயத்தில் 'ஶேஷத்வம்' (கைங்கர்யம் செய்பவளாயிருக்கை) ஆகிய இரண்டும் என்றுமே உள்ளதாயிருக்கும். ஆகையால் இவளுக்கு மற்ற ஜீவர்களால் ஆஶ்ரயிக்கப்படுபவளாயிருக்கையாகிற ஸேவ்யத்வமும், எம்பெருமானை ஆஶ்ரயிப்பவளாயிருக்கையாகிற ஸேவகத்வமும் ஆகிய இரண்டும் என்றும் உள்ள தன்மைகள்.

எம்பெருமானுக்கு மோக்ஷபலனை அளிப்பவனாய் இருக்கையாகிற உபாயத்வமும், மோக்ஷத்தில் பெறப்படும் பயனாய் இருக்கையாகிற உபேயத்வமுமாகிற இரண்டு தன்மைகள் உள்ளது போலே, இவளுக்கும் மோக்ஷ பலனை அடைவிப்பவளாய் இருக்கையாகிய புருஷகாரத்வமும், மோக்ஷத்தில் அடையப்படுபவளாய் இருக்கையாகிற ப்ராப்யத்வமுமாகிற இரண்டு தன்மைகளும் உண்டாகையாலே, இவ்விரண்டு தன்மைகளில் எந்தத் தன்மையை நினைத்து இவளை இப்போது சொல்லுகிறது என்னும் கேள்விக்குப் பதிலளிக்கிறார் அடுத்த சூர்ணையில்.

**மூ 126 : இப்போது இவளைச் சொல்லுகிறது புருஷகாரமாக.**

விவரணம் : 'புருஷகாரமாக' என்று கூறுகையாலே, 'உபாயமாய் இருக்கும் எம்பெருமானுக்கு இவளும் விசேஷணமாய் இருக்கையாலே விசேஷணமான ஜ்ஞாநம் ஶக்தி முதலான கு₃ணங்களுக்குப் போல இவளுக்கும் உபாயத்வம் உண்டு' என்னும் கொள்கை இவருக்கு உடன்பாடன்று என்று விளங்குகிறது. இது பற்றிப் பெரியவாச்சான் பிள்ளை பரந்த ரஹஸ்யத்தில் த்₃வயப்ரகரணத்தில் விரிவாக விசாரித்து நிர்ணயம் செய்துள்ளது இங்கு அநுஸந்தி₄க்கத்தக்கது.

ஸர்வேஶ்வரனான நாராயணன் எல்லாச் சேதநர்க்கும் இயற்கை உறவினனுயிருப்பவன். உபாயமாகவும் உபேயமாகவும் இருப்பவன். இவையனைத்தையும் அறிந்து அவனைப்பற்றுகிற இச்சேதநனுக்கு இந்தப் பிராட்டியைப் புருஷகாரமாக முன்னிடவேண்டிய அவசியமென்ன? என்னும் கேள்விக்கு விடையளிக்கிறார் அடுத்த சூர்ணையில்.

**மூ 127 : நீரிலே நெருப்புக் கிளருமாபோலே குளிர்ந்த திருவுள்ளத்திலே அபராத₄த்தால் சீற்றம் பிறந்தால் பொறுப்பது இவளுக்காக.**

விவரணம் : அதாவது — குளிர்ந்த நீரிலே அருகில் நெருங்க முடியாதபடியான உஷ்ணத்தையுடைய நெருப்புக்கிளருவது போலே

போ₄க்தாரம் யஜ்ஞதபஸாம் ஸர்வலோகமஹேஶ்வரம் |
ஸுஹ்ருத₃ம் ஸர்வபூ₄தாநாம் ஜ்ஞாத்வா மாம்
ஶாந்திம் ருச்ச₂தி || [கீ₃தை 5-29]

[யஜ்ஞங்களையும் தவங்களையும் அனுப₄விப்பவனும் எல்லாவுலகங்கட்கும் பெரிய ஈஸ்வரனும், எல்லா உயிர்களுக்கும் நண்பனுமாக என்னை அறிந்து சாந்தியை அடைகிருன்] என்கிறபடியே எல்லா உயிர்களுக்கும் நண்பனுயும்,

ஸமோऽஹம் ஸர்வபூ₄தேஷு ந மே த்₃வேஷ்யோऽஸ்தி
ந ப்ரிய: |
யே யஜந்தி து மாம் ப₄க்த்யா மயி தே தேஷு சாப்யஹம் ||
[கீதை 9-29]

[எல்லா உயிர்கட்கும் நான் ஸமமானவன்; எனக்கு விரோதி₁யுமில்லை; பிரியமானவனுமில்லை; என்னை பக்தியோடு உபாஸிப்பவர்கள் என்னிடத்திலுள்ளனர்; அவர்களிடத்திலும் நான் இருக்கிறேன்] என்கிறபடியே ஆஸ்ரயிக்கும்போது அனைவருக்கும் பொதுவாயும் இருக்கையாலே, தெளிந்தும் குளிர்ந்தும் இருக்கிற எம்பெருமானுடைய திருவுள்ளத்திலே,

பிதேவ த்வத்ப்ரேயாந் ஜநநி பரிபூர்ணாக₃ஸி ஜநே
ஹிதஸ்ரோதோவ்ருத்த்யா ப₄வதி ச கதா₃சித் கலுஷதீ₄: |
கிமேதந் நிர்தோ₃ஷ: க இஹ ஜக₃தீதி த்வமுசிதை:
உபாயைர் விஸ்மார்ய ஸ்வஜநயஸி மாதா தத₃ஸி ந: ||
[ஸ்ரீகு₃ண-52]

[தாயே! குற்றம் நிறைந்த ஜீவன் விஷயத்தில் படிப்படியாகத் திருத்தி நன்மை செய்வதற்காக, உமது நாத₂ன் சிலசமயம்கோபங்கொள்கின்றார்; "ஏனிந்தக் கோபம்?" என்றுகூறி உசிதமான உபாயங்களின் மூலம் குற்றங்களை அவர் மறக்கும்படி செய்து அவருடைய திருவடியிலே சேர்ப்பிக்கிறீர். அதனுலேயே எங்களுக்குத் தாயாகிறீர்.] என்று ப₄ட்டர் அருளிச்செய்தபடியே இந்த ஜீவன் மனப்பூர்வகமாகவும் பரிபூர்ணமாகவும் செய்த குற்றங்கள் காரணமாக,

தாநஹம் த்₃விஷத: க்ரூராந் ஸம்ஸாரேஷு நராத₄மாந் |
க்ஷிபாம்யஜஸ்ரமஸுபா₄நாஸுரீஷ்வேவ யோநிஷு ||
[கீ₃தை 16-19]

[த்₃வேஷிகளும், கொடியவர்களும், மனிதரிற் கடையானவர்களும், அமங்க₃ளமானவர்களுமான அவர்களை ஸம்ஸாரத்திலேயே, (அதிலும்) அஸுரஸம்ப₃ந்த₄முள்ள பிறப்புக்களிலேயேஎப்போதும் தள்ளுகிறேன்.]

**மத்₃ப₄க்தம் ஶ்வபசம் வாபி நிந்தா₃ம் குர்வந்தி யே நரா:|**
**பத்₃மகோடி ஶதேநாபி ந க்ஷமாமி வஸுந்த₄ரே ||**

[வராஹபுராணம்]

[நாய்மாமிசம் தின்னும் சண்டாளனுயினும் என் ப₄க்தனை எவர்கள் நிந்தனை செய்கின்றனரோ அவர்களை நூறுகோடி பத்மகாலங்கள் கழிந்தாலும் பொறுக்கமாட்டேன்.] என்னும்படியான கடுங்கோபம் பிறந்தால் அக்குற்றத்தைப் பொறுப்பது - முற்கூறிய ப₄ட்டருடைய ஶ்லோகத்தில் சொன்னபடி தன்னுடைய உபதேசம் முதலானவற்ருலே அக்கோபத்தை ஆறும்படி செய்து எம்பெருமானிடம் கருணையை உண்டாக்கும் இவளுக்காகவே என்று கருத்து. ஆகையால் எம்பெருமான் எல்லா உறவுமாய் இருப்பவன் என்று அறிந்தவனுக்கும், தான் செய்த குற்றத்தைக் காணும்போது உண்டாகும் ப₄யத்தாலே, பரிந்துரைக்கும் (சிபாரிசு செய்யும்) புருஷகாரமாக இவளை முன்னிட வேண்டியது அவசியம் என்று கருத்து.

"சேதனனுடைய காரியத்தைத் தன் காரியமாக ஏற்றுக்கொண்டும், ஸர்வேஶ்வரனைத் தன் வசப்படுத்தியும் இருவரையும் சேர விடுகைக்கு இவள் குறைவற்ற புருஷகாரமாய் இருப்பவளோ?" என்னும் கேள்வியெழ, அடுத்த சூர்ணையில் பதில் அருளிச் செய்கிறர்.

**மூ 128: இவள் தாயாய் இவர்கள் க்லேசம் பொறுக்கமாட்டாதே அவனுக்குப் பத்நியாய் இனிய விஷயமாயிருக்கையாலே, கண்ணழிவற்ற புருஷகாரம்.**

**விவரணம்:** அதாவது—

**த்வம் மாதா ஸர்வலோகாநாம் தே₃வதே₃வோ ஹரி: பிதா**

[வி பு 1-9-1]

[எல்லாவுலகிற்கும் தேவரீர் தாயாகிறீர்; தே₃வதே₃வனுன ஹரி தந்தையாகிறர்.] என்றும்,

**அகி₂லஜக₃ந்மாதரம்......ஶரணமஹம் ப்ரபத்₃யே**

[ஶரணாக₃திக₃த்₃யம்]

[எல்லாவுலகிற்கும் தாயானஸ்ரீதே₃வியை அடியேன் ஶரணமடைகிறேன்] என்றும் சொல்லுகிறபடியே, ஜீவர்களுக்கு இவள் தாயாய்

'தந்தம் மக்கள் அழுது சென்றால் தாய்மாராவார் தரிக்ககில்லார்'' [பெரியாழ் திரு 2-2-3] என்கிறபடியே அந்த உறவு காரணமாக ஜீவர்களுடைய துன்பம் கண்டால் பொறுக்க முடியாதவளாய் இருக்கிறாள்.

அஸ்யேஶாநா ஜகதோ விஷ்ணுபத்நீ [யஜுர்-கா 4-4-37]

[விஷ்ணுவுக்குப் பத்னியாயும் (அதனாலேயே) இவ்வுலகிற்குத் தலைவியாகவும் இருப்பவள்.] என்கிறபடியே அவனுக்குப் பத்னியாய், "பித்தர் பனி மலர் மேல் பாவைக்கு'' [திருநெடு 18] என்கிறபடியே, எம்பெருமான் தன்னுடைய சிறப்புக்களைக்கண்டு காதல் கொண்டு தான்சொல்லுகிறபடி நடக்கும்படி அவனுக்குத் தான் இனிய மனைவியாயும் இருக்கிறாள். ஆகையால் இருவரையும் சேரவிடுவதற்குக் குறையற்ற புருஷகாரமாயிருக்கிறாள் இவள் என்று கருத்து.

"இவள் சேரவிடுவதற்கு எவ்வளவு முயற்சி செய்தாலும் தடையற்ற சுதந்திரத் தன்மையை உடைய ஸர்வேஶ்வரன் இந்த ஜீவர்களுடைய குற்றங்கள் ஒவ்வொன்றையும் கணக்கிட்டு அவற்றுக்குத் தண்டனை கொடுக்க நிற்கும்போது இவளாலே அந்தக் கோபத்தை ஆறச் செய்ய முடியுமோ!'' என்னும் கேள்விக்கு விடையளிக்கிறார் அடுத்த சூர்ணையில்.

**மூ 129: திருவடியைப் பொறுப்பிக்குமவள், தன் சொல்வழி வருமவனைப் பொறுப்பிக்கச்சொல்ல வேண்டாவிறே.**

விவரணம்: அதாவது—அசோகவனத்தில் தன்னைப் பத்து மாதம் அதட்டியும் மிரட்டியும் துன்புறுத்திய அந்த ராக்ஷஸிகளுடைய குற்றங்களைக் கணக்கிட்டு அவர்களைச் சித்திரவதை செய்ய வேண்டுமென்று உறுதியாயிருந்து அதற்குப் பிராட்டியின் அனுமதியைப் பிரார்த்தித்த அனுமனைக்கூட,

ஏவமுக்தா து வைதேஹீ ஹநூமந்தம் யஶஸ்விநீ |
ராஜஸம்ஶ்ரயவஶ்யாநாம் குர்வதீநாம் பராஜ்ஞயா ||
விதேயாநாஞ்ச தாஸீநாம் க: குப்யேத் வாநரோத்தம ||
[ரா-யு 116-38]

[இப்படிச் சொல்லப்பட்ட சீதையானவள், புகழ்படைத்த அனுமனை நோக்கிச் சொல்லுகிறாள். — வானரர் தலைவ! ராவணனுடைய

அரசனைப்பற்றியிருப்பதால் அவனுக்கு வசப்பட்டிருப்பவர்களும் அவனுடைய ஏவலினால் (எனக்குக் கொடுமை) செய்தவர்களும் அவனால் நியமிக்கப்பட்டவர்களும் (அவனுக்கு) அடிமைகளாயு முள்ள ராக்ஷஸிகளின்மேல் யார்தான் கோபங்கொள்ளுவார்கள்?] என்றும்,

> பாபாநாம் வா ஶுபா4நாம் வா வதா4ர்ஹாணாம் ப்லவங்க3ம।
> கார்யம் கருணமார்யேண ந கஶ்சிந் நாபராத்4யதி ॥
>
> [ரா-யு 116-44]

[வானரனே! பாபிகளாயினும், நல்லோராயினும், கொல்லத்தக்கவராயினும் அவர்கள் திறத்து நல்லோரால் கருணைகாட்டப்பட வேண்டும். குற்றம் செய்யாதவன் ஒருவனுமில்லையே.] என்றும் பலவாறு உபதேசித்து அவனுடைய சீற்றத்தை ஆற்றுகின்றவள், "மலராள் தனத்துள்ளான்" [மூன்றும் திருவ — 3] என்றும், "மாமலர் மங்கை மண நோக்கமுண்டான்" [பெரிய திரு 8-10-1] என்றும், "அல்லி மலர்மகள் போக மயக்குக்களாகியும் நிற்கும்" [திருவாய் 3-10-8] என்றும் சொல்லுகிறபடியே தன்னுடைய இனிமையிலே மிகவும் ஈடுபட்டு "நின்னன்பின் வழி நின்று சிலை பிடித்து எம்பிரானேக" [பெரியாழ்திரு 3-10.7] என்கிறபடியே, 'மாயமானின் பின்னே போ' என்று சொன்னாலும், அதனால் விளையக்கூடிய அனர்த்தத்தை அறியாமல் அதன் பின்னே போகும்படி தான் சொன்னபடி கேட்கும் எம்பெருமானின் சீற்றத்தை ஆற்றி, சேதநனுடைய குற்றத்தைப் பொறுக்கும்படி செய்யவல்லவள் என்பது சொல்லாமலே விளங்கும் என்று கருத்து, இவருடைய திருத்தம்பியாரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும் அருளிச்செயல் ரஹஸ்யத்தில் த்3வயப்ரகரணத்தில் ஸ்ரீமத்பதவிவரணத்தில்—" 'செய்தகவினுக்கில்லை கைம்மாறு' [பெரிய திரு5-8-2] என்னும்படி பெருமாளுக்கும் பிராட்டிக்கும் கைம்மாறு காணாமல் திகைக்கும்படி உபகாரம் செய்தமையாலே அவன் சொல்படிதான் நடக்கவேண்டும்படியிருக்க, அனுமனை மறுத்துத் திருத்துகின்ற இப்பிராட்டி

> 'சார்வு நமக்கென்றும் சக்கரத்தான் தண்டுழாய்த்
> தார்வாழ் வரைமார்பன் தான் முயங்கும்—காரார்ந்த
> வானமரும் மின்னிமைக்கும் வண்டாமரை நெடுங்கண்
> தேனமரும் பூ மேல் திரு' [மூன்றும் திருவ — 100]

என்கிறபடியே தன்னுடைய இனிமைக்குத் தோற்று 'இவனுக்கு எதைச் செய்வது?' என்று திகைப்புற்று 'நின்னன்பின் வழி நின்று' [பெரியாழ் திரு 3-10-7] 'கிளர்பொறிய மறிதிரிய அதனின் பின்னே படர்ந்தான்' [பெரிய திரு 2-5-6] என்னும்படி பின்னால்வரும் அனர்த்தத்தை அறியாமல் பிராட்டியின் முறுவலுக்குத் தோற்று அவள் சொன்னபடி மாயமானின் பின்னே போன எம்பெருமானை ஜீவனுடைய குற்றத்தைப் பொறுக்கும்படி செய்வாள் என்னும் விஷயம் சொல்லாமலே விளங்குமன்றோ'' என்னும் பொருளுள்ள ஸ்ரீஸூக்திகளை அருளிச்செய்தாரன்றோ.

ஆக, த்₃வயத்தின் தொடக்கத்தில் உள்ள "ஸ்ரீமத்" என்னும் பத₃த்தில் "ஸ்ரீ" என்னும் பகுதியின் பொருளை இதுவரை அருளிச் செய்தார். "மத்" என்னும் விகுதியின் பொருளை அடுத்த சூர்ணையில் அருளிச் செய்கிறார்.

**சூ 130: மதுப்பால் இருவர் சேர்த்தியும் நித்யமென்கிறது.**

**விவரணம்:** அதாவது - ஸ்ரீஶப்₃த₃த்திற்கு மேலுள்ள மதுப்பாகிற விகுதி "பூ₄மநிந்தா₃ ப்ரஶம்ஸாஸு நித்யயோகே₃ அதிஶாயநே | ஸம்ஸர்க்₃கே₃஽ஸ்திவிவக்ஷாயாம் ப₄வந்தி மதுபாத₃ய:" [மதுப் முதலான விகுதிகள் "பூ₄ம" (மிகுதி) "நிந்தா₃" (இகழ்வு), "ப்ரஶம்ஸா" (புகழ்ச்சி), "நித்யயோக₃ம்" (என்றும் சேர்ந்திருத்தல்), "அதிஶாயநம்" (சிறப்புற்றிருத்தல்), "ஸம்ஸர்க்க₃ம்" (தொடர்பு கொண்டிருத்தல்), "அஸ்திவிவக்ஷா" (உள்ளதாய் இருத்தல்) ஆகிய பொருள்களில் வழங்கப்படுகின்றன] என்கிற இலக்கண வழக்கின்படி பலபொருள்களை உடையதாயினும், இங்கு அது என்றும் சேர்ந்திருக்கையாகிற நித்ய யோக₃ப் பொருளில் வந்திருக்கிறதாகையாலே பிராட்டியும் ஈஶ்வரனுமான சேர்த்தி எப்போதும் உண்டு என்னும் விஷயம் இங்கு மதுப்பாலே சொல்லப்படுகிறது என்று கருத்து.

என்றும் சேர்ந்திருக்கையாகிற இந்த நித்ய யோக₃த்தை விவரிக்கிறார் அடுத்த சூர்ணையில்,

**சூ 131 இவளோடே கூடியே வஸ்துவினுடைய உண்மை.**

ஶ்ரிய:பதி: நிகி2லஹேயப்ரத்யநீக கல்யாணைகதாந: ஸ்வேதர

ஸமஸ்த வஸ்து விலக்ஷணாநந்த ஜ்ஞாநாநந்தைகஸ்வரூப:

[கீ3தா ப4ாஷ்ய அவதாரிகை]

[திருவின் நாயகனாய், தாழ்வுகளனைத்துக்கும் எதிர்த்தட்டா யிருப்பவனாய், மங்களகுணங்களுக்கு ஒரே இருப்பிடமானவனாய், தன்னையொழிந்த எல்லாப் பொருள்களிலும் சிறந்தவனாய், அளவற்ற ஞானம் ஆனந்தம் ஆகியவற்றை ஸ்வரூபமாக வுடையவனாயிருப்பவன்.] என்று கீதாபாஷ்ய அவதாரிகையில் எம்பெருமானார் ப4க3வத் ஸ்வருபத்தைச் சொல்லும்போது அந்த ஸ்வருபத்தை நிருபித்துத்தரும் ஜ்ஞாநம் ஆனந்தம் முதலான குணங்களைச் சொல்லுவதற்குமுன்னே, "ஶ்ரிய:பதி:" என்று ப4க3வான் திருவின் நாயகனாய் இருக்கையைச் சொல்லும்படி அவனுடைய ஸ்வருபத்துக்கு முக்கியமான நிருபகையாக இப்பிராட்டி இருக்கையாலே, இவளோடே கூடியே பரமாத்மாவினுடைய ஸத்தை உள்ளது என்று கருத்து.

ஆக, நிருபகையாக எம்பெருமானுடைய ஸ்வருபத்தோடேயே கூடியிருக்கையால் உண்டான நித்யயோக3த்தை அருளிச்செய்தாராயிற்று.

இனி, இவளுடைய அருளாகிற குணத்தாலும் இவள் எம்பெருமானோடு எப்போதும் கூடியிருக்கிறாள் என்பதை அடுத்த சூர்ணையில் அருளிச்செய்கிறார்.

**சூ 182: ஈஶ்வரஸ்வாதந்த்ரியத்தையும் சேதநனுடைய அபராத4த்தையும் கண்டு அகலமாட்டாள்.**

**விவரணம் :** அதாவது—எல்லாம் அறிந்தவனாகையாலே சேதநன் செய்யும் குற்றங்களை ஒன்று விடாமல் கணக்கிட்டு அதற்குத் தக்கபடி தண்டனை கொடுக்கும் எம்பெருமானுடைய ஸ்வாதந்த்ரியத்தையும்,

**யத் ப்3ரஹ்மகல்ப நியுதாநுப4வேப்யநாஶ்யம்**

**தத் கில்பி3ஷம் ஸ்ருஜதி ஜந்துரிஹ க்ஷணார்த்3தே4 |**

**ஏவம் ஸதா3 ஸகலஜந்மஸு ஸாபராத4ம்**

**க்ஷாம்யஸ்யஹோ தத3பி4ஸந்தி4விராமமாத்ராத் ||**

**[ஶ்ரீவைகுண்ட2ஸ்தவம் 61]**

[எந்தப் பாபமானது பிரமனுடைய ஆயுளைப்போன்று லக்ஷம் மடங்கு காலம் அனுபவித்தாலும் அழியாதோ, அப்படிப்பட்ட பாவத்தை ஜீவன் இங்கு அரைக்கணத்தில் செய்கிறன். இப்படி எல்லாப் பிறப்புகளிலும் எப்பொழுதும் குற்றம்புரிந்த அடியேனை 'இனிப் பாவஞ் செய்யமாட்டேன்' என்று பாபத்தில் விருப்பம் தவிர்ந்தவுடன் பொறுத்தருளுகிறுய். என்ன ஆச்சர்யம்] என்று கூரத்தாழ்வான் அருளியபடியே காலமுள்ள வரையிலும் அனுபவித்தாலும் அழியாததாய், எல்லை காண முடியாதபடி எண்ணிறந்திருப்பதாய் (1) தீவினைகளைச் செய்தல், (2) செய்ய வேண்டியவைகளைச் செய்யாதிருத்தல், (3) எம்பெருமானிடம் அபசாரப்படுதல், (4) ப₄ாக₃வதர்களிடம் அபசாரப்படுதல், (5) ப₄க₃வத்₃ ப₄ாக₃வதர்கள் விஷயத்தில் காரணமில்லாமல் தீங்கிழைத்தலாகிற அஸஹ்யாபசாரம் என்று பலவகைப்பட்டதான சேதனன் செய்த குற்றங்களைக் கண்டு இச்சேதனன் இவ்வெம்பெருமானை அடையமுடியாதபடி ஆகிவிடுமோ என்று பயந்து 'இருவரையும் திருத்திச் சேரவிடவேண்டும்' என்னும் அருளாலே எம்பெருமானை விட்டு ஒரு கணநேரமும் அகல மாட்டாள் என்று கருத்து.

இப்படி இவள் அகலாமலிருப்பதால் ஜீவனுக்கு விளையும் லாபத்தை அடுத்த சூர்ணையில் அருளிச் செய்கிறுர்.

**மூ 133: சேதனனுக்கு இவையிரண்டையும் நினைத்து அஞ்சவேண்டா.**

அதாவது — இப்படித் தாயான இப்பிராட்டி எம்பெருமானை விட்டு அகலாமலிருந்து இருவரையும் சேரவிடுகைக்கு வேண்டியதைச் செய்கையாலே, இந்த ஜீவனுக்கு எம்பெருமானுடைய ஸ்வாதந்த்ர்யத்தையும், தன்னுடைய குற்றங்களையும் நினைத்து 'நாம் எம்பெருமானை எப்படிச் சேரப்போகிறோம்' என்று பயப்பட வேண்டியதில்லை என்று கருத்து.

இனி இந்த மதுப்பினால் தேறும் அர்த்த₂த்தை அருளிச்செய்கிறுர் அடுத்த சூர்ணையில்.

**மூ 134 : இத்தால் ஆஶ்ரயிக்கைக்கு ருசியே வேண்டுவது; காலம் பார்க்கவேண்டா என்கிறது.**

**விவரணம் :** அதாவது—இவ்வண்ணமாகப் புருஷகாரமான பிராட்டியும் உபாயமான எம்பெருமானும் என்றும் கூடியிருக்கிறார்கள் என்று சொல்லும் இந்த "மதுப்"பாகிற விகுதியால், எம்பெருமானை ஆஶ்ரயிப்பவர்களுக்கு ஆஶ்ரயிக்க வேண்டும் என்னும் ருசியே வேண்டுமேயொழிய "பிராட்டியும் பெருமாளும் கூடியிருக்கும் காலத்திலே ஆஶ்ரயிக்க வேண்டுமே" என்று ஆஶ்ரயிப்பதற்குக் காலத்தைப் பார்த்திருக்க வேண்டிய அவசியமில்லை.

இனி, இவள் புருஷகாரம் செய்ய வேண்டியது மிக அவசியம் என்று அறிவிப்பதற்காக (அவதாரங்களில்) இவள் எம்பெருமானோடு கூடியிருக்கும் நிலைக்கும், கூடியிராத நிலைக்கும் உள்ள வேற்றுமையை அடுத்த சூர்ணையில் அருளிச்செய்கிறார்.

**சூ 135 : இவள் ஸந்நிதியாலே காகம் தலைபெற்றது; அது இல்லாமையாலே ராவணன் முடிந்தான்.**

**விவரணம்:—** திருமந்த்ரவிவரணம் பக்கம் 44-ல் உள்ள "லக்ஷ்ம்யாஸஹ" என்னும் ப்ரமாணத்தின்படி கருணையே ஒரு வடிவு கொண்டாற்போலேயிருப்பவளாய், ஸ்வதந்திரனான ஈஶ்வரனுடைய சுதந்திரத்தன்மையைச் செயல்படாதபடி செய்து கருணையை வெளிப்படும்படி செய்பவளான இவள் அருகிலிருக்கையாலே, இப்பிராட்டி திறத்தில் அஸஹ்யாபசாரத்தைப் பரிபூர்ணமாகச் செய்து, பெருமாளுடைய ப்3ரஹ்மாஸ்திரத்தாலே விரட்டப் பெற்றுத் தலையறுபடவேண்டிய காகாஸுரன்

**ஸ தம் நிபதிதம் பூ4மௌ ஶரண்ய: ஶரணாக3தம் ।**
**வதா4ர்ஹமபி காகுத்ஸ்த2: க்ருபயா பர்யபாலயத் ॥**
[ரா-ஸு 38-35]

[ஶரணமாக அடையத்தக்க அந்தக் காகுத்தன் பூமியில் விழுந்து ஶரணமடைந்த அந்தக் காகாஸுரனைக் கொலைசெய்யத் தக்கவனாயிருந்தபோதிலும் கருணையோடு காப்பாற்றினான்.] என்கிறபடியே பெருமாளுடைய கருணைக்கு இலக்காய்த் தலைபெற்றுப்போனான். அத்தகைய இப்பிராட்டி கூடியிராமையாலே முதல் நாள் போரிலே தேர், வில் முதலான அனைத்தையும் இழந்து காகாஸுரனைப் போலே போக்கற்றுச் செயலிழந்து நின்றநிலை ஒத்திருந்த போதிலும், காகத்தைப்போலே அவ்வளவு அபசாரம் செய்யாமலிருந்த போதிலும் இராவணன் இராமனுடைய அம்புக்கு இலக்காகி அழிந்து போனான் என்று கருத்து. ஆகையால் எம்பெருமானை ஆஶ்ரயிப்பவர்களுக்கு இவள் கூடியிருக்கும் நிலையே அவசியம் வேண்டும் என்று கருத்து. ஆக, இதுவரையில் "ஸ்ரீமத்" என்னும் பதத்தின் பொருளை அருளிச்செய்தாராயிற்று.

அடுத்தபடி, 'நாராயண' பதத்தின் பொருளை அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணை தொடக்கமாக. (148-வது சூர்ணை முடிய).

**சூ 186 : புருஷகார பலத்தாலே ஸ்வாதந்த்ரியம் தலைசாய்ந்தால் தலையெடுக்கும் குணங்களைச் சொல்லுகிறது நாராயணபதம்.**

விவரணம் : அதாவது—ஜீவனை அவசியம் அங்கீகரிக்க வேண்டும் என்று எம்பெருமானுக்கு எடுத்துச் சொல்வதன் மூலமும், தன் அழகைக்கொண்டும் எம்பெருமானைத் தன் வசப்படுத்தி ஜீவனுடைய காரியத்தை நிறைவேற்றவல்ல புருஷகாரமாயிருக்கும் பெரியபிராட்டியாராலே – எம்பெருமானை ஆஸ்ரயிக்க வந்திருக்கும் இந்த ஜீவன் அநாதி காலமாகப் பண்ணிவைத்திருக்கும் குற்றங்களைப் பார்த்து, சீற்றம் கொண்டு, "இவனை ஏற்றுக் கொள்ளமுடியாது" என்று உறுதியுடன் இருக்கும் ஸர்வேஸ்வரனுடைய ஸ்வதந்திரத் தன்மை மாறினால், அந்த ஸ்வதந்திரத் தன்மையாலே காரியம் செய்யமுடியாமலிருந்த தடை நீங்கப் பெற்றமையாலே ஓங்கி நிற்கும் குணங்களைச் சொல்லுகிறது நாராயணபதம் என்று கருத்து.

அந்த குணங்கள் யாவை? என்னும் கேள்விக்குப் பதில் கூறுகிறது அடுத்த சூர்ணை.

**சூ 187 : அவையாவன—வாத்ஸல்யமும், ஸ்வாமித்வமும், ஸௌஸீல்யமும், ஸௌலப்யமும், ஜ்ஞானமும், ஶக்தியும்,**

**விவரணம் :** இந்த குணங்களின் லக்ஷணம் பின்வருமாறு :- **வாத்ஸல்யமாவது**—அன்று ஈன்ற கன்றினிடத்தில் பசு இருக்கும் இருப்பு. அதாவது—அக்கன்றினுடைய அழுக்குகளை இனியதாகக் கொள்வதும், அக்கன்றைப் பாலைக்கொடுத்து வளர்ப்பதும், எதிரிட்டவரைத் தன் கொம்புகளால் முட்டியும், குளம்பினால் உதைத்தும் கன்றை ரக்ஷிப்பதும் ஆகும். அவ்வண்ணமே எம்பெருமானும் அடியார்களுடைய குற்றத்தை நற்றமாகக் கொண்டு "பாலே போல் சீர்" [பெரிய திருவ 58] என்கிற குணங்களைக் கொண்டு அவர்களைத் தரிக்கச்செய்து,

**மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந |**
**தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேதத் அகர்ஹிதம் ||**
[ரா-யு 18-3]

[நண்பனின் வேஷத்தோடு வந்தடைந்தவனையும் நான் ஒரு போதும் விடமாட்டேன். அவனுக்கு தோஷமிருந்தாலும் மிக நன்று; நல்லோர்களுக்கு அது பழிக்கத்தக்கதன்று.]

**ஸக்ருதே3வ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே |**
**அப4யம் ஸர்வ பூ4தேப்4யோ த3தா3ம்யேதத் வ்ரதம் மம ||**
[ரா-யு 18-34]

[ஒருகால் சரணமடைந்தவன் பொருட்டும், நான் உனக்குரியேன் என்று யாசிப்பவன் பொருட்டும், எல்லாப் பிராணிகளிடத்தினின்றும் அப4யமளிக்கிறேன். இது என்னுடைய விரதம்.] என்கிறபடியே தனக்கு வேண்டியவர்களோ வேண்டாதவர்களோ தன் அடியார்களுக்கு எதிராகப்பேசினாலும் அவர்களை மறுத்து ரக்ஷிப்பதுமாகும். ஸ்வாமித்வமாவது— அடியவன் தன்வழி வராத போதும் அவனை விடாமல் நின்று இவனுடைய ஸ்வரூபத்தை ரக்ஷித்துக்கொண்டிருப்பதற்குக் காரணமான ஓர் தொடர்பு. அதாவது— உடைமையான இந்தச் சேதனனுக்கு உடையவனாய் இருக்கும் இருப்பு. இந்தச் சேதனன் தன் வழிவராமல் இருக்கும்போது வழிபடுவது தொடக்கமாக, கைங்கர்யம் வரையில் உண்டான நன்மைகளையெல்லாம் இவனுக்கு ஈஸ்வரன் விளைப்பது உடையவனாய் இருக்கும் இத்தன்மையினாலேயே. ஸௌசீல்யமாவது — நித்யவிபூதி லீலாவிபூதி என்னும் இரண்டு பெருஞ் செல்வங்களை உடையவனாயிருக்கையாலும், ஸர்வ ஜீவராசிகளுக்கும் ஈஸ்வரியாக ஸ்ரீஸூக்தத்தில் பேசப்படும் பெரிய பிராட்டியாருக்குப் பதியாயிருக்கையாலும் தடையற்ற பெருமையையுடைய ஸர்வேஸ்வரனுடைய மேன்மையையும் தங்களுடைய சிறுமையையும் பார்த்து "அம்மான் ஆழிப்பிரான் அவன் எவ்விடத்தான் யான் ஆர்" [திருவாய் 5-1-7] என்று ஜீவன் பின்வாங்காதபடி, அவரோடும் ஒருபடியாக மேல் விழுந்து ஒரு நீராகக் கலக்கையும், அதையும் தன்னுடைய பயனாக நினைக்கையும், அதுவும் ஜீவன் வேண்டாமலிருக்கும்போதே கலக்கையும் ஆகும். ஸௌலப்4யமாவது— கண்ணுக்குப் புலப்படாமலிருக்கிற தான் கண்ணாலே கண்டு பற்றலாம்படி எளியவனாயிருக்கை. ஜ்ஞானமாவது இந்த ஜீவனுக்குக் , கழிக்கவேண்டிய விரும்பத்தகாத தாழ்வுகளையும் கொடுக்கவேண்டிய விரும்பத்தக்க உயர்வுகளையும் நேரே அறிகைக்குத் தக்கதாய், தன்னைத் தவிர்ந்த எல்

லாப்பொருள்களையும் ஒரேசமயத்தில் நேரே கண்டு அறியவல்ல அறிவு. ஶக்தியாவது:— மிகத் தாழ்ந்தவராய் அநாதிகாலமாக ஸம்ஸாரத்தில் உழலும் ஜீவர்களைத் தனக்கு மிகவும் வேண்டியவர்களான நித்ய ஸூரிகளோடு ஒருவரிசையிலே வைக்கவல்ல அகடிதகடனா ஸாமர்த்யம் (பிறரால் ஸாதிக்க இயலாதவற்றையும் ஸாதிக்கவல்லதிறமை). இந்த ஆறு குணங்களில் வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌஶீல்யம், ஸௌலப்யம் என்னும் நான்கு குணங்களும் ஜீவன் எம்பெருமானை அடைவதற்கு உதவிசெய்யக் கூடியவை. ஜ்ஞாநம், ஶக்தி என்னும் இரண்டு குணங்களும் எம்பெருமான் தன்னை வந்தடைந்த ஜீவனுடைய காரியத்தைச் செய்வதற்குப் பயன்படுபவை.

"அகலகில்லேன் இறையும் என்று
அலர்மேல் மங்கை உறை மார்பா!
நிகரில் புகழாய் உலகம் மூன்று
உடையாய் என்னை ஆள்வானே!
நிகரில் அமரர் முனிக்கணங்கள்
விரும்பும் திருவேங்கடத்தானே
புகலொன்றில்லா அடியேன் உன்
அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே" [திருவாய் 6-10-10]

என்னும் பாட்டில் "நிகரில் புகழாய்" என்பதனால் வாத்ஸல்யத்தையும், "உலகம் மூன்றுடையாய்" என்பதனால் ஸ்வாமித்வத்தையும், "என்னை ஆள்வானே" என்பதனால் ஸௌஶீல்யத்தையும், "திருவேங்கடத்தானே" என்பதனால் ஸௌலப்யத்தையும் ஆக இப்படி ஆழ்வார் ஜீவர்கள் எம்பெருமானை அடைய உதவிபுரியும் நாலு குணங்களையும் அருளிச்செய்தது இங்கு அநுஸந்திக்கத்தக்கது. எம்பெருமான் தன்னிடம் வந்தடைந்த சேதநனுடைய கார்யத்தைச் செய்யப் பயன்படும் ஜ்ஞாநம், சக்தி என்னும் இரண்டு குணங்களைச் சொன்னது ப்ராப்தி, பூர்த்தி என்னும் மற்ற இரண்டு குணங்களுக்கும் உபலக்ஷணம் என்று மாமுனிகள் வ்யாக்யானத்தில் அருளிச் செய்வர். அவ்விரண்டு குணங்களும் எம்பெருமான் ஜீவனுடைய காரியங்களைச் செய்யப் பயன்படுபவையன்றோ. 'ப்ராப்தி' என்பதை 'ஸர்வஸ்வாமித்வம்' என்றும், 'பூர்த்தி' என்பதை 'அவாப்தஸமஸ்த காமத்வம்' (வேண்டுவனயாவும் நிறைந்திருக்கை) என்றும் ஆசார்யர்கள் அருளிச்செய்வர்கள். இவற்றுடன் அடியார்களின் காரியத்தைச் செய்யும் குணமாக

இரக்கத்தையும் பெரியவாச்சான்பிள்ளை பரந்த ரஹஸ்யத்தில் அருளிச்செய்கிறார்.

"ஆச்ரிதருடைய ஹிதாஹிதங்கள் அறியும் போதைக்கு ஸர்வஜ்ஞனாக வேணும். அறிந்தபடியே கார்யம் செய்கைக்கு ஸர்வசக்தி ஆகவேணும். ஸர்வசக்தனானாலும் இவன் பக்கல் ஒன்றும் நச்சாதொழிகைக்கு அவாப்தஸமஸ்தகாமனாகவேணும். இத்தனையும் உண்டானாலும் தன் பேறாகக் கார்யம் செய்யும் போதைக்கு ஸர்வஸ்வாமியாக வேணும். அநாதிகாலம் கர்மாநுகுணமாக அறுத்து அறுத்துத் தீற்றுகைக்குக் கருவியாய்ப்போந்த இவை ரக்ஷணத்திற்கு உறுப்பாகைக்கு இரக்கம் வேணும். ஆகையாலே ஸௌசீல்யாதி குண சதுஷ்டயத்தோடு ஜ்ஞாநசக்த்யாதி குண பஞ்சகத்தோடு வாசியற இப்பதத்திலே அநுஸந்தேயம்" என்னும் பரந்த ரஹஸ்ய ஸ்ரீஸூக்திகள் இங்கு அநுஸந்திக்கத் தக்கவை.

இந்த ஆறுகுணங்களும் இவ்விடத்தில் எப்படிப் பயன்படுகின்றன என்னும் கேள்விக்கு அடுத்த சூர்ணையில் பதில் அருளிச்செய்கிறார்.

**மூ 138: குற்றங்கண்டு வெருவாமைக்கு வாத்ஸல்யம்; கார்யம் செய்யும் என்று துணிகைக்கு ஸ்வாமித்வம்; ஸ்வாமித்வம் கண்டு அகலாமைக்கு ஸௌசீல்யம்; கண்டு பற்றுகைக்கு ஸௌலப்யம்; விரோதியைப் போக்கித் தன்னைக் கொடுக்கைக்கு ஜ்ஞாந சக்திகள்.**

விவரணம்: அதாவது — எம்பெருமானை ஆச்ரயிக்க முற்பட்ட இந்த ஜீவன் தன் தோஷத்தைப் பார்த்து அஞ்சாமலிருக்க வேண்டுமென்றால் அடியானுடைய தோஷத்தையே இனியதாகக்கொள்ளும் எம்பெருமானுடைய வாத்ஸல்ய குணத்தை இவன் அநுஸந்திக்கவேண்டும். "எம்பெருமான் நம்முடைய கார்யத்தைச் செய்வானோ செய்யமாட்டானோ" என்று ஐயமுறாமல், "நம் காரியத்தை அவசியம் செய்வான்" என்று ஜீவன் நம்பிக்கைகொள்ளவேண்டும் என்றால் ஜீவனுடைய லாப நஷ்டங்கள் எம்பெருமானுடையவையே என்பதை உணர்த்தும் அவனுடைய ஸ்வாமித்வமாகிற குணத்தை இவன் அநுஸந்திக்கவேணும். நித்யவிபூதி லீலாவிபூதி ஆகிய இரு விபூதிகளையும் நடத்திவைக்கும் பெருமையை வெளிப்படுத்தும் ஸ்வாமித்வத்தைக் கண்டு, தன் தாழ்வை நினைத்து ஜீவன் அகலாமல் இருக்கவேண்டும் என்றால், தாழ்ந்தவர்களோடும்

ஒரு நீராகக் கலக்கும் எம்பெருமானுடைய தன்மையானஸௌசீல்யத்தை ஜீவன அநுஸந்திக்கவேணும். எம்பெருமான் கண்களுக்குப் புலப்படாதவன் என்று பின்வாங்காமல் ஜீவன் அவனைக் கண்ணாலே கண்டு ஆச்ரயிக்க வேண்டுமென்றால் எம்பெருமான் தன் திருமேனியை அடியார்களின் கண்களுக்கு இலக்காக்குகையாகிற ஸௌலப்யம் என்னும் குணத்தை ஜீவன் அநுஸந்திக்கவேணும். சரமஶ்லோகத்தில் சொன்னபடியே எம்பெருமானை அடைவதற்குத் தடையாயிருக்கும் ஜீவனுடையபாபங்களைப் போக்கி அடைவித்தக்க தன்னை எம்பெருமான் காட்டுவான் என்று ஜீவன் உறுதி கொள்ள வேண்டுமென்றால் அடைபவனான ஜீவன் ஏற்கனவே நிற்கும் நிலையையும் மேலே பெற வேண்டிய பேறுகளையும், அறிவதற்கு உறுப்பான ஜ்ஞானத்தையும், அறிந்தபடியே பேற்றைத் தருவதற்கு உறுப்பான சக்தியையும் உடையவன் எம்பெருமான் என்று அநுஸந்திக்க வேண்டும், இப்படி எல்லாம்வல்ல ஸர்வசக்தியானாலும் ஜீவனுடைய கார்யம் செய்யும்போது அதற்குக் கைம்மாறாக வேறொன்றை எதிர்பாராமல் இருக்கும்படியான பூர்த்தியை உடையவன் எம்பெருமான் என்றும் இவன் அநுஸந்திக்கவேண்டும். அப்படியே தன்பேறாகக் கார்யம் செய்யக்கூடிய ப்ராப்தி (ஸர்வஸ்வாமித்வம்) உள்ளவன் என்றும் அநுஸந்திக்க வேண்டும். அநாதிகாலமாக ஜீவனுக்குக் கர்மாநுகுணமாக தண்டனைகளை அளிப்பதற்கு உதவிவந்த ஜ்ஞாந சக்திகள் ரக்ஷணத்திற்கு உறுப்பாகும் என்று உறுதிகொள்ளவேண்டும் எனறால் எம்பெருமானுடைய இரக்கத்தை அநுஸந்திக்கவேண்டும்.

எம்பெருமானை அடைவதற்கு உதவும் முற்கூறிய வாத்ஸல்யம் முதலான நான்கு குணங்களிலும் ஸௌலப்யம முக்கியமானதாகையாலே இந்த ஸௌலப்யமாகிற எளிமையின் எல்லை நிலத்தை அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

**ஸூ 139: இங்குச் சொன்ன ஸௌலப்யத்துக்கு எல்லைநிலம் அர்ச்சாவதாரம்**

**விவரணம்:** அதாவது—இந்த 'நாராயணபதத்தில் ஜீவன் எம்பெருமானை அடைவதற்கு உதவுவதாகச் சொன்ன எளிமை என்னும் குணத்தை மிகுதியாகக்காட்டும் எல்லை நிலமாயிருப்பது "தமருகந்தது எவ்வுருவம் அவ்வுருவம் தானே" [முதல் திருவ 44] என்கிறபடியே அடியவர் உகந்த பொன் வெள்ளி முதலான

பெற்ருல் ஆன ஒரு விக்ரஹத்தைத் திருமேனியாகக்கொண்டு எப்போதும் அதில் கோயில் கொண்டிருக்கும் அர்ச்சாவதாரம் என்று கருத்து.

முன் ஸூத்திரத்தில் சொன்ன விஷயத்தை விளக்குகிருர் அடுத்த சூர்ணையில்.

**ஸூ 140: இதுதான் பரவ்யூஹவிபவங்கள் போலன்றிக்கே கண்ணாலே காணலாம்படி இருக்கும்.**

**விவரணம்:** அதாவது—இந்த அர்ச்சாவதாரமானது நம்மால் சென்றடைய முடியாத தூரத்தில் உள்ள தேசத்திலிருக்கை யாலே பரவ்யூஹங்களையும், நெடுங்காலத்திற்கு முன்பே முடிந்து போனபடியாலே கண்ணுல் காணமுடியாத விபவாவதாரங்களை யும் போலல்லாமல், நாம் வசிக்கும் தேசத்திலும் காலத்திலும் இருப்பதாய், எப்போதும் விக்ரஹத்தில் கோயில் கொண்டு எழுந் தருளியிருக்கையாலே எப்போதும் கண்ணாலே காணலாம்படியாய் இருக்கும்.

இந்தக் குணங்கள் அனைத்தையும் அர்ச்சாவதாரத்திலே காண முடியுமோ? என்னும் கேள்விக்கு அடுத்த சூர்ணையில் விடையளிக்கிருர்.

**ஸூ 141: இவையெல்லாம் நமக்கு நம்பெருமாள் பக்கலிலே காணலாம்.**

**விவரணம்:** அதாவது – ஜீவன் எம்பெருமானை அடைவதற்கு உதவும்இந்தநாலுகுணங்களையும் அடியவர்களுடையகாரியங்களைச் செய்வதற்கு உதவும் எம்பெருமானுடைய ஜ்ஞானசக்திகளையும் இவற்றைப் பார்க்கவேண்டுமென்று விருப்பமுடைய நமக்கு, நம் முடைய அர்ச்சாவதார எம்பெருமான்களிடம் காணலாம் என்று கருத்து. நம்பெருமாள் என்னும் சொல்லாலே பிள்ளை உலகாசிரி யர் திருவரங்கத்தில் எழுந்தருளியிருக்கும் உத்ஸவ மூர்த்தியான நம்பெருமாளையே திருவுள்ளம் பற்றுகிருர் என்பது இந்தச் சூர்ணை யிலும் அடுத்த சூர்ணையிலும் தெளிவாயிருந்த போதிலும், வெவ் வேறு திவ்யதேசங்களிலுள்ளஎம்பெருமான்களுக்கும்இச்சூர்ணைகள் பொருந்துமாகையாலே மணவாளமாமுனிகள் நம்பெருமாள் என்ப தற்கு நம்முடைய பெருமாள் என்று உரையிட்டருளினர் என்று கண்டுகொள்க.

நம்பெருமாள் திருமேனியில் இந்தக் குணங்களை வெளிப் படுத்தும் அம்சங்களைச் சொல்லி இவ்வண்ணமாக நிற்கும்நிலையே நமக்குத் தஞ்சம் என்று அடுத்த சூர்ணையில் அருளிச்செய்கிருர்.

**மூ 142: திருக்கையிலே பிடித்த திவ்யாயுதங்களும், வைத்து அஞ்சல் என்ற கையும் கவித்த முடியும் முகமும் முறுவலும், ஆஸநபத்3மத்திலே அழுத்தின திருவடிகளுமாய் நிற்கிற நிலையே நமக்குத் தஞ்சம்.**

விவரணம்: அதாவது—நம்பெருமாள் திருக்கையிலே பிடித்த திவ்யாயுதங்கள் அடியவர்களுடைய எதிரிகளை அழித்துப்பேற்றைத் தரவல்ல ஜ்ஞாந சக்திகள் உடையவர் அவரே என்று காட்டுகின்றன. 'அஞ்சாதீர்கள்' என்று அபயமளிக்கும் அபயஹஸ்தம், நம்முடைய பாபங்களைக் கண்டு நாம் அஞ்சவேண்டாதபடியான வாத்ஸல்ய குணத்தை உடையவர் அவர் என்று காட்டுகிறது. தலையிலே தரித்திருக்கும் முடி நம்மை உடையவரான ஸ்வாமி அவர் என்று காட்டுவதன் மூலம் ஸ்வாமித்வத்தை உடையவர் அவர் என்று காட்டுகிறது. திருமுகமண்டலத்திலே விளங்கும் புன்முறுவல் மிகத்தாழ்ந்த நம்மோடு ஒருநீராகக் கலந்து பரிமாறக்கூடிய ஸௌசீல்யத்தை உடையவர் அவர் என்று காட்டுகிறது. ஆஸந பத்3மத்திலே அழுத்தி நிற்கும் திருவடிகள் அனைவர்க்கும் கண்டு பற்றலாம்படியான ஸௌலப்யத்தை (எளிமையை) உடையவர் அவர் என்று காட்டுகிறது. ஆக இத்தகைய அர்ச்சாவதார நிலையே வேறு கதியற்ற நம்மை ரக்ஷிக்கவல்லது என்று தேறுகிறது.

இப்படி ஆறு குணங்கள் அர்ச்சாவதாரத்திலே ப்ரகாசிப்பதோடு, எம்பெருமானையே உபாயமாகவும் உபேயமாகவும் பற்றியிருக்கும் நமக்குத் தேவையான ரக்ஷகத்வம் போக்யத்வம் என்னும் இரண்டு தன்மைகளும் அர்ச்சாவதாரத்திலே தோற்றும் என்று அடுத்த சூர்ணையிலே அருளிச்செய்கிறார்.

**மூ 143: ரக்ஷகத்வ போ4க்3யத்வங்கள் இரண்டும் திருமேனியிலே தோற்றும்.**

**விவரணம்:** அதாவது—அடியார்களுடைய விரோதிகளை அழிக்கும் திவ்யாயுத4ங்களைத் திருக்கைகளிலே ஏந்தியிருப்பதும், அனைத்துலகையும் ரக்ஷிக்கும் ஸர்வலோக சக்ரவர்த்தி இவன் என்பதைக் காட்டும் முடியைத் தலையிலே தரித்திருப்பதும் இவனுடைய ரக்ஷகத்வத்தை உணர்த்துகின்றது. "அணியார் ஆழியும் சங்கமும் ஏந்தும்" [திருவாய் 8-8-6], "முடிச்சோதியாய் உனது முகச்சோதி மலர்ந்ததுவோ" [திருவாய் 3-1-1] என்கிறபடியே அந்ததிவ்யாயுத4ங்களும் முடியும் எம்பெருமானுடைய எல்லையற்ற அழகை வெளிப்படுத்துகின்றன. 'அஞ்சேல்' என்று அப4யமளிக்

கும் திருக்கையும், முகமும் புன்முறுவலும், ஆஸனபத்மத்திலே அழுத்தின திருவடிகளும் ஒவ்வொன்றுமே அழகுக்கு எல்லை நிலமாய் இருக்கின்றன. ஆகையால் இவையனைத்துமே எம்பெருமானுடைய போக்யத்வமாகிற இனிமையைக் காட்டுகின்றன. இவ்வண்ணமாக ரக்ஷகத்வம் போக்யத்வம் ஆகிய இரண்டும் திருமேனியிலே விளங்கி நிற்கின்றன என்று கருத்து. ஆக, இதுவரையில் 'நாராயண' என்னும் சொல்லின் பொருளை அருளிச்செய்தாராயிற்று.

இனி, அடுத்ததான "சரணௌ" என்னும் பதத்திற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

**சூ 144 : சரணௌ—திருவடிகளை.**

விவரணம் : "சரணௌ" என்னும் த்விவசநம் (இருமை) எம்பெருமானுடைய இருதிருவடிகளையும் காட்டுகிறது என்று கருத்து.

இந்த த்விவசநமாகிற இருமையால் சொல்லப்படுகிற அர்த்தத்தை அடுத்த சூர்ணையில் அருளிச்செய்கிறார்.

**சூ 145 : இத்தால் சேர்த்தியழகையும், உபாய பூர்த்தியையும் சொல்லுகிறது.**

விவரணம் : அதாவது—"சரணௌ" என்று இரண்டு திருவடிகளையும் சொன்னபடியால் "இணைத்தாமரையடி" [பெரியதிருமொழி 1-8-3] என்கிறபடியே இரண்டு தாமரைப்பூக்களை இணைத்து வைத்தாற்போலே இருக்கிற சேர்த்தியழகைக் காட்டுகிறது. மேலும் 'சரணம்' என்று ஏகவசனமாயிருந்தால் ஜாத்யேகவசனமாய் இரண்டு திருவடிகளைக் குறிக்கிறது என்று சொல்லவும், பெரிய பிராட்டியாருடைய திருவடிகளையும் சேர்த்து நான்கு திருவடிகளைக் குறிக்கின்றன என்று சொல்லவும் இடம் கொடுக்கும். நான்கு திருவடிகளைக் குறிப்பதாகக் கொள்ளும்போது எம்பெருமானும் பெரிய பிராட்டியாரும் ஆகிய இருவரும் சேர்ந்து உபாயம் என்று சொல்லுவதாகத் தேறும். அப்பொழுது வேறு எந்த ஒரு துணையையும் எதிர்பாராத எம்பெருமானுடைய உபாயத்தன்மைக்குக் குறை ஏற்படும். அதற்கு இடமில்லாதபடி "சரணௌ" என்று இருமையிலே படிக்கையாலும், இந்த இருமையும் இரண்டுக்குமேல் மற்றொன்று புக இடம் கொடுக்காமையாலும், இந்த "சரணௌ" என்றசொல் எம்பெருமான் வேறு துணையை எதிர்பாராத உபாய பூர்த்தியையுடையவன் என்றும் காட்டுகிறது.

இத்திருவடிகளினுடைய உபாயத்தன்மையின் உறைப்பைக் காட்டும் குணப்பெருமையை அடுத்த சூர்ணையில் அருளிச் செய்கிறார்.

**மூ 146 : பிராட்டியும் அவனும் விடிலும் திருவடிகள் விடாது; திண்கழலாயிருக்கும்.**

விவரணம் : அதாவது—'ஸ்ரீமத்' என்னும் பதத்திலே புருஷகாரமாகச் சொல்லப்பட்ட பிராட்டியும், அவனே அடியாரிடம் குற்றம் கண்டாலும் "தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாள் ஆகிலும் சிதகுரைக்குமேல் என்னடியார் அதுசெய்யார் செய்தாரேல் நன்று செய்தார்" [பெரியாழ் திரு 4-9-2] என்கிறபடியே அக்குற்றத்தை இசையாமல் அதையே நற்றமாகக்கொள்ளும் குணமுடையவனான எம்பெருமானும் கைவிட்டாலும், திருவடிகள் அழகு முதலான தம் பெருமைகளைக் காட்டிச் சேதனர்களைத் திருத்தி ஆட்படுத்துகையாலே கைவிடாமல் இருக்கும். இதைத் திருவுள்ளம் பற்றியே, "வண்புகழ் நாரணன் திண்கழல்சேரே" [திருவாய் 1-2-10] என்று ஆழ்வார் 'திருவடிகள் பற்றினாரை நழுவவிடாத திண்மையை உடையவை' என்று அருளிச்செய்தார் என்று கருத்து.

திருவடிகளுக்குள்ள இந்த குணப்பெருமையால் மாத்திரமல்லாமல், ஜீவனுடைய சேஷத்வ ஸ்வரூபத்தை நோக்கினாலும் எம்பெருமானுடைய திருவடிகளிலேயே சரணமடையவேண்டும் என்பதை திருஷ்டாந்தம் காட்டி அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

**மூ 147 : ஶேஷிபக்கல் ஶேஷபூதன் இழியும் துறை; ப்ரஜை முலையிலே வாய்வைக்குமா போலே,**

விவரணம் : அதாவது—கைங்கர்யம் கொள்ளும் சேஷியான எம்பெருமானை ஆஶ்ரயிக்க முற்படும் அடிமையை இயல்வாக உடைய ஜீவன் தன் ஸ்வரூபத்தை நோக்கினாலும் திருவடிகளிலேயே ஶரணம் என்று விழவேண்டும். கைக்குழந்தையானது தாயினுடைய எல்லா அவயவங்களும் அதற்கு உத்தேஶ்யமானாலும் தனக்கு வகுத்ததாய் தாரகமாயிருக்கும் அவளுடைய முலையிலே வாய்வைப்பதை இதற்கு திருஷ்டாந்தமாகக் கொள்ளலாம்.

இங்கு "சரணௌ" என்று திருவடிகளைச் சொன்னது திருமேனி முழுவதற்கும் உபலக்ஷணம் என்று அடுத்த சூர்ணையில் காட்டுகிறார்.

**மூ 148: இத்தால், பிராட்டிக்கு இருப்பிடமாய், கு₃ணப்ரகாசகமுமாய், சிசுபாலனையுமகப்படத் திருத்திச் சேர்த்துக்கொள்ளும் திருமேனியை நினைக்கிறது.**

**விவரணம்:** அதாவது—'சரணௌ' என்று திருமேனியின் ஒரு பகுதியான திருவடியைச் சொன்னதால் திருமேனி முழுவதையும் உபலக்ஷண முறையாலே காட்டுவதாகக் கொள்ள வேணும். இந்தத் திருமேனியானது, "திருவிருந்தமார்வன்" [மூன் திரு. 57] என்கிறபடியே 'ஸ்ரீமத்' என்னும் முதல் பதத்தில் சொன்ன புருஷகாரத்தன்மையையுடைய பிராட்டிக்கு இருப்பிடமாய் உள்ளது. 'நாராயண' என்னும் இரண்டாவது பதத்தில் சொன்ன வாத்ஸல்யம் முதலான குணங்களை வெளிப்படுத்துவதாகவும் இருக்கிறது, இந்த குணங்கள் திவ்யாத்ம ஸ்வரூபத்தின் குணங்களாய் இருந்தபோதிலும் ஒரு கண்ணாடிப் பாத்திரத்தின் உள்ளே இருக்கும் பொருள்களை அப்பாத்திரம் வெளிப்படுத்துவது போலே, வாத்ஸல்யம் முதலான ஆத்மகுணங்களையும் செந்தாமரைக்கண் முதலான திருமேனியின் அவயவங்கள் வெளிப்படுத்துகின்றனவன்றோ. மேலும், இத்திருமேனியானது, "பலபல நாழஞ் சொல்லிப்பழித்த சிசுபாலன்" [பெரியாழ் திரு 4-3-5] என்கிறபடியே கண்ணனிடம் எல்லையற்ற த்₃வேஷத்தை உடையவனாய், அவன் மீது மனம் போனபடி வசவுகளைப் பொழிந்து வந்த சிசுபாலனைக்கூட "அலவலைமை தவிர்த்த அழகன்" [பெரியாழ் திரு 4-3-5] என்கிறபடியே தன் அழகாலே அவனுடைய துவேஷம் முதலான அனைத்தும் நீங்கும்படி திருத்தி, "திருவடி தாட்பால் அடைந்த" [திருவாய் 7-5-3] என்கிறபடியே தன்னோடு சேர்த்துக்கொள்ளும் தன்மையையுடையதாக இருக்கிறது. ஆகையால் இங்கு "திருவடிகள்" என்றது திருமேனியைக் காட்டுவதாகக் கொள்வது பொருத்தம்.

அடுத்தபடியாக 'ஶரணம்' என்னும் பதத்தின் பொருளை அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

**மூ 149: ஶரணம்—இஷ்டப்ராப்திக்கும் அநிஷ்ட நிவாரணத்துக்கும் தப்பாத உபாயமாக.**

**விவரணம்:** அதாவது—

**உபாயே க்₃ருஹரக்ஷித்ரோ: ஶப்₃த₃: ஶரணமித்யயம் |**
**வர்த்ததே ஸாம்ப்ரதம் சைஷ உபாயார்த்தை₂கவாசக: ||**

[அஹிர் 36-36]

[உபாயம், வீடு, ரக்ஷகன் என்னும் மூன்று பொருள்களையுடையது 'ஶரணம்' என்னும் சொல். இப்போது இந்த ஶரணஶப்₃த₃ம் 'உபாயம்' என்னும் பொருளையே கூறுகிறது.] என்கிறபடியே 'ஶரணம்' என்னும் இச்சொல் ரக்ஷிக்கிறவனையும், தங்குமிடமான வீட்டையும் உபாயத்தையும் குறிக்குமாறுலும் எம்பெருமானுடைய திருவடிகளைத் தஞ்சமாகக்கொள்ளும் இந்த ப்ரகரணத்தில் இச் சொல் உபாயம் என்னும் அர்த்தத்தைக் குறிப்பதாகக் கொள்ளுவதே பொருந்தும். விருப்பங்களை நிறைவேற்றுவதும், விரும்பத்தகாதவற்றை நீக்குவதும் உபாயத்தின் செயலாகை யாலே, 'ஶரணம்' என்னும் இச்சொல்லுக்கு "இஷ்டப்ராப்திக்கும் அநிஷ்ட நிவாரணத்திற்கும் தப்பாத உபாயமாக" (விருப்பங்களை நிறைவேற்றுவதற்கும், விரும்பத்தகாதவற்றை நீக்குவதற்கும் தவருத ஸாதனமாக) என்று இச்சொல்லுக்குப் பொருள் அருளிச்செய் கிறுர். சேதனர்களால் விரும்பத்தக்கவையும், விரும்பத்தகாதவை யும் யாவை என்பதையும் பிள்ளைலோகாசாரியர் தம்முடைய பரந்த படியிலே விரிவாக அருளிச்செய்தார். ஶ்ரிய:பதிப்படியில், "அநிஷ்டமாவது—தேஹமே ஆத்மா எனக் கருதும் அறி யாமையும், அவ்வறியாமையினுல் விளையும் விருப்பு வெறுப்பு களும், புண்ணியம் பாபம் எனப்படும் இருவகைக் கருமங்களும், தேவர், மனிதர், விலங்கு, தாவரம் என நாலு வகைப்பட்ட சரீரங்களும், தெய்வம், மற்ற ஜீவராசிகள், உடல் ஆகியவற்ருல் விளையும் மூன்று வகைப்பட்ட தாபங்களும் ஆகும். இஷ்டமாவது— அர்ச்சிராதி மார்க்கத்தால் பரமபதம் செல்வதும் அப்படிச் சென்று பரமபதத்தை அடைவதும், பரமாத்மாவைக் காண்பதும், அவனு டைய குணங்களை அநுபவித்துக் கொண்டு கைங்கர்யங்கள் புரி வதும் ஆகும்" என்னும் பொருளுள்ள ஸ்ரீ ஸூக்திகளைச் சுருக்க மாக அருளிச்செய்கிருர். ஆகையால் இவ்விடத்திலும் அவை அநுஸந்திக்கத் தக்கவை.

கீழே 'ஸ்ரீமந் நாராயண சரணௌ' என்று சொல்லப்பட்ட திருவடிகளை உபாயமாகச் சொன்னதால் தேறிய பொருளை அருளிச்செய்கிருர் அடுத்த சூர்ணையில்.

**சூ 150 : இத்தால், ப்ராப்யம் தானே ப்ராபகம் என்கிறது.**

**விவரணம் :** அதாவது — "ஸ்ரீமந் நாராயண சரணௌ" என்று கீழே சொன்ன திருவடிகளை "ஶரணம்" என்று இங்கு உபாயமாகச் சொல்லுவதால், ப்ராப்யமாக (பேருக) இருப்பதே ப்ராபகமாகவும் (உபாயமாகவும்) ஆகிறது என்னும் விஷயத்தை உணர்த்துகிறது என்று கருத்து.

"ஸ்ரீமந் நாராயண சரணௌ" என்பதால் ப்ராப்யத்தைச் சொல்லுவதாகக் கூறுவது எப்படி? என்னும் கேள்விக்குப் பதில் அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

**சூ 151 : கீழ்ச்சொன்ன மூன்றும் ப்ராப்யமிறே.**

**விவரணம் :** அதாவது—கீழே **"ஸ்ரீமத்"** என்னும் பதத்தாலே ஸ்ரீதேவியோடு கூடியிருக்கும் வஸ்து சொல்லப்பட்டது. இப்படி ஸ்ரீதேவியோடு கூடியிருக்கும் எம்பெருமானே அனுபவிக்கப்படும் விஷயமான **'ப்ராப்யம்'** என்பதை,

**வைகுண்டே₂ து பரே லோகே ஶ்ரியா ஸார்த்₄ம் ஜக₃த்பதி:|**
**ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா ப₄க்தைர் ப₄ாக₃வதைஸ் ஸஹ ||**
**[சைவபுராணம்]**

[வைகுண்ட₂மெனும் மேலான உலகில் ஸ்ரீதே₃வியோடுகூட ஜக₃த் ஸ்வாமியாய், அறிதற்கரியவரான விஷ்ணு கு₃ணநிஷ்ட₂ர்களோடும், கைங்கர்யநிஷ்ட₂ரோடும் எழுந்தருளியிருக்கிறார்.] என்னும் ப்ரமாணம் சொல்லிற்று; நாராயணன் என்னும் பதத்தாலே கல்யாண குணங்களோடு கூடியிருக்கும் வஸ்துவைச் சொல்லிற்று. இப்படிக் கல்யாண குணங்களோடு கூடிய எம் பெருமானே அனுபவிக்கப்படும் ப்ராப்யம் என்பதை

**யோ வேத₃ நிஹிதம் கு₃ஹாயாம் பரமே வ்யோமந்**
**ஸோ(அ)ஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்₃ரஹ்மணா விபஶ்சிதேதி**
**[தை-ஆந 2-2.]**

[அநந்தனான ப்₃ரஹ்மத்தைப் பரமபதத்திலிருப்பவனாகவும், ஹ்ருத₃ யகு₃ஹையிலிருப்பவனாகவும் எவன் அறிகிறானோ, அந்த உபாஸகன் எல்லாவற்றையும் உணர்ந்த பரம்பொருளோடு எல்லாக்

கல்யாண கு₃ணங்களையும் அநுபவிக்கிறான்.] என்னும் ப்ரமாணம் சொல்லிற்று. "சரணௌ" என்னும் பதத்தாலே திருமேனியோடு கூடியிருக்கும் வஸ்து சொல்லப்பட்டது. இப்படித் திருமேனி யுடைய எம்பெருமானே அனுபவிக்கப்படும் ப்ராப்யம் என்பதை,

**தத்₃ விஷ்ணோ: பரமம் பத₃ம் | ஸதா₃ பஶ்யந்தி ஸூரய: ||**
**[யஜுர்-காண்டம் 4-2-29; ருக்₃வேத₃ விஷ்ணுஸூக்தம்]**

[விஷ்ணுவினுடைய அந்தப் பரமபத₃த்தை நித்யஸூரிகள் எப்போதும் காண்கிறார்கள்.] என்னும் ப்ரமாணம் சொல்லிற்று. ஆகையால் கீழ்ச்சொன்ன மூன்றுமே 'ப்ராப்யம்' என்று தேறிற்று என்று கருத்து.

அப்படி ப்ராப்யமானால் அனுபவிக்கப்படும் இதை உபாய மாக்குவது எதற்காக? என்னும் கேள்விக்கு அடுத்த சூர்ணையில் பதில் அருளிச்செய்கிறார்.

**சூ 152 : இவன் செயலறுதியாலே உபாயமாக்கு கிறானத்தனை.**

**விவரணம் :** அதாவது—உண்மையில் அனுபவிக்கப்படும் விஷயமாகையாலே, கீழ்ச்சொன்ன மூன்றையும் ப்ராப்யமாகக் கொள்வதே பொருத்தம். ஆனால் திருமாலைத் தஞ்சமாகக் கொள்ளும் இந்தச் சேதனன் தன்னை உய்விப்பதற்குத் தன் கையிலும் ஒன்றுமில்லாத அகிஞ்சனனாய், தன்னைக் கடைத் தேற்றுவதற்கு வேறொருவர் இல்லாதிருக்கையால் அநந்யகதியாய் இருக்கையாலே செய்வது அறியாமல், மிக இனிய ப்ராப்யமான இதையே உபாயமாகவும் ஆக்குகிறான். இப்படி ப்ராப்யமே ப்ராபகமாகும் இடம் உண்டோ? எனில் பித்த நோயுள்ளவனுக்கு எதை உண்டாலும் கசக்கிறது. அப்போது அவனுக்கு மருத்துவர்கள் பாலை மருந்தாகக் கொடுக்கின்றனர். அவனும் அது மருந்துபோலே கசந்தாலும், பாலைப் பலநாள் பருகுகிறான். இப்படி இனியதாய் ப்ராப்யமான பாலே மருந்தாகிப் பித்த நோயைத் தீர்த்து உபாய மாவது போலே, கீழ்ச்சொன்ன மூன்றும் ப்ராப்யமாக இருந்த போதிலும், உபாயமாகக் குறையில்லை என்று கருத்து.

இவ்வண்ணமாக இனியதான உபேயத்தையே உபாயமாகச் சொல்லுவதால் இவ்வுபாயத்திற்கு ஒரு சிறப்புச் சொல்லப்படுகிறது என்று அடுத்த சூர்ணையில் அருளிச்செய்கிறார்.

**மூ 153 : "சரணௌ ஶரணம்" என்கையாலே உபாயாந்தர வ்யாவ்ருத்தமான உபாயம் என்கிறது.**

**விவரணம் :** அதாவது—"சரணௌ ஶரணம்" என்று ப்ராப்யமான திருவடிகளையே உபாயமாகச் சொல்லுகையாலே ப்ராப்யம் ஸித்$_3$த$_4$மான எம்பெருமானாய், உபாயம் ஸாத்$_4$யமான மனித முயற்சியாயிருக்கும் கர்ம ஜ்ஞாந பக்திகள் முதலான மற்ற உபாயங்களைக் காட்டிலும் இவ்வுபாயம் ஸித்த மாய்க் கண்ணழிவற்று இருப்பது என்னும் சிறப்பைச் சொல்லுகிறது.

அடுத்தபடியாக, அடுத்த பதமான வினைச்சொல்லுக்குப் பொருள் அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

**மூ 154 : ப்ரபத்$_3$யே—பற்றுகிறேன்.**

**விவரணம் :** இப்பத$_3$ம் "பத$_3$ க$_3$தௌ" என்னும் தா$_4$து (வேர்ச்சொல்) லிலிருந்து உண்டானது, க$_3$தி என்னும் பொருளை உடையது. "ப்ரபத்$_3$யே" என்னும் சொல் தன்மை வினைமுற்று ஆகையால் 'பற்றுகிறேன்' என்று இதற்குப் பொருள் அருளிச் செய்கிறார்.

'பற்றுகிறேன்' என்று இங்கு சொன்னது மனம், வாய், உடல் ஆகிய மூன்றாலும் செய்யப்படும் பற்றுதலைக் காட்டக்கூடியதாகையாலே, இங்கு முக்கரணத்தில் எந்தக் கரணத்தால் செய்யப்படும் பொருளைச் சொல்லுகிறது? என்னும் கேள்விக்குப் பதில் அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

**மூ 155 : வாசிகமாகவும் காயிகமாகவும் பற்றினாலும் பேற்றுக்கு அழிவில்லை (இழவில்லை); 'ஜ்ஞாநாந் மோக்ஷம்' ஆகையாலே, மாநஸமாகக்கடவது.**

விவரணம் : அதாவது —

கமலநயந வாஸுதேவ விஷ்ணோ
 த₄ரணித₄ராச்யுத ஸங்க₂சக்ரபாணே |
ப₄வ ஶரணமிதீரயந்தி யே வை
 த்யஜ ப₄ட தூ₃ரதரேண தாநபாபாந் || [வி-பு 3-7-33]

[தூதனே! "கமலக்கண்ணனே! வாசுதேவனே! விஷ்ணுவே! பூ₄மியை தரித்தவனே! அச்யுதனே! (எனக்கு) உபாயமாவாய்!" என்று எவர்கள் சொல்லுகின்றனரோ, பாபமற்ற அவர்களை வெகு தூரத்தில் விலகிச் செல்வாய்.] என்கிறபடியே தஞ்சமாயிருந்து என்னைக் காப்பாற்றவேண்டும் என்று வாயால் மட்டும் பிரார்த்திக்கையாகிற வாசிக ப்ரபத்தியைச் செய்தாலும் ப₂லம் குறையறக் கிடைக்கும்.

அஞ்ஜலி: பரமா முத்₃ரா க்ஷிப்ரம் தே₃வப்ரஸாதி₃நீ
[க₃ருட₃புராணம்-பூர்வக₂ண்ட₃ம் 11-26]

[மிகச்சிறந்த சின்னமான அஞ்ஜலி விரைவில் ஈஶ்வரனை உகப்பிக்கிறது.] என்கிறபடியே எம்பெருமான் அருள்புரிவதற்குக் காரணமாயிருக்கும் அஞ்ஜலியை (கைகூப்புதலைச்) செய்வது, வேடனாகிற குகனைப் போலவும், காகாசுரனைப் போலவும், எம்பெருமான் இருந்த இடத்திற்கு வருவது போன்ற 'காயிக' (உடலால் செய்யும்) ப்ரபத்தியை மாத்திரம் செய்தாலும் பலம் குறையறக் கிடைக்கும். ஆனாலும்,

ஜ்ஞாநாந் மோக்ஷோ ஜாயதே ராஜஸிம்ஹ
 நாஸ்த்யஜ்ஞாநாதே₃வமாஹுர் நரேந்த்₃ர |
தஸ்மாத் ஜ்ஞாநம் தத்த்வதோऽந்வேஷணீயம்
 யேநாத்மாநம் மோக்ஷயேஜ் ஜந்மம்ருத்யோ: ||
[ப₄ார-ஶாந்தி 323 மோக்ஷ 3-37]

[அரசர் தலைவனே! மோக்ஷம் ஜ்ஞானத்தாலேயே உண்டாகிறது; அஜ்ஞானத்தால் உண்டாகாது. இவ்வாறு அறிவாளிகள் உரைக்கின்றனர். ஆகையால் எந்த அறிவினால் பிறப்புகளிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்வானோ அந்த அறிவு உள்ளபடி தேடத்தக்கது.] என்று ஜ்ஞானத்தாலேயே மோக்ஷம் கிடைக்கும் என்று

ப்ரமாணம் கூறுகையாலே மனத்தாலே பற்றுகிறதே இங்கு சொல்லப்படுகிறது என்று கொள்ளவேண்டும். மனத்தாலே பற்றுதலாவது—" நீயே எனக்கு விரும்பியது கிடைப்பதற்கும் தடைகள் நீங்குவதற்கும் உபாயமாக ஆக வேண்டும்" என்னும் அறிவேயாகும். இந்த அறிவைப்பற்றிப் பிள்ளைலோகாசார்யர் தம்முடைய மற்றொரு கிரந்தமான பரந்தபடியில் மிகவிரிவாக அருளிச் செய்துள்ளார். ஶ்ரிய:பதிப்படியிலும், " இந்த அறிவாவது—எம்பெருமானுக்கே அடிமைப்பட்டது இவ்வாத்மா என்னும் அறிவினால் உண்டாவதாய், மற்ற உபாயங்களைக் காட்டிலும் வேறுபட்டதாய், எம்பெருமான் நம்மை ரக்ஷிப்பதற்கு நம்முடைய அனுமதி ரூபமாய் இருப்பதாய், ஒருமுறையே அனுஷ்டிக்கத் தக்கதாய், தப்பிப் போவதற்கோ, தாமதமாவதற்கோ இடமில்லாததாய், சேதனர் அனைவராலும் அனுஷ்டிக்கத்தக்கதாய், தேச நியமம், கால நியமம் முதலான நிர்ப்பந்தங்கள் இல்லாததாய், 'உயிர் விடும் தருவாயில் எம்பெருமானை நினைப்பதாகிற அந்திமஸ்ம்ருதியைச் செய்ய வேண்டும்' என்கிற நிர்ப்பந்தமும் இல்லாததாய், எளிதில் அனுஷ்டிக்கத் தக்கதாய், நீயே எனக்கு உபாயமாகவேண்டும் என்னும் பிரார்த்தனா ரூபமாய் இருப்பதாய், உறுதியான எண்ணமாயிருப்பதோர் சிறப்புற்ற அறிவாகும்" என்னும் பொருளுள்ள ஸ்ரீஸூக்திகளை அருளிச்செய்கிறார். ஆகையால் இவ்விடத்தில் அதுவும் அனுஸந்திக்கத்தக்கது.

இப்படி மனத்தால் பற்றுதல் மட்டும் போதுமோ? "சிந்தையாலும், சொல்லாலும், செய்கையினாலும் தேவபிரானையே, தந்தை தாயென்று அடைந்த வண் குருகூரவர் சடகோபன்" [திருவாய் 6-5-11] என்னும் நம்மாழ்வார் வாக்கிலிருந்து முக்கரணங்களாலும் பற்றவேண்டுமெனத் தோன்றுகிறதே? என்னும் கேள்விக்கு அடுத்த சூர்ணையில் பதில் அருளிச்செய்கிறார்.

**ஸூ 156 : உபாயம் அவனாகையாலும், இவை நேரே உபாயம் அல்லாமையாலும், இம்மூன்றும் வேணும் என்கிற நிர்ப்பந்தம் இல்லை**

**விவரணம் :** அதாவது மோக்ஷமாகிற பலன் கிடைப்பதற்கு உபாயமாயிருப்பது பற்றப்படுகிற ஈஶ்வரனே. மூன்று கரணங்களாலும் பற்றுதல்களாகிற இவை மேலெழுந்த வாரியாகப்

பார்க்கும்போது உபாயம் போலே தோன்றினாலும், ஆராய்ந்தால் உபாயமல்ல என்று விளங்கி நிற்பவை; நேரே உபாயமாய் இராதவை. ஆகையால் மோக்ஷமாகிற பலன் கிடைப்பதற்கு மனத்தில் உறுதி கொள்வதாகிற பற்றுதல் ஒன்றே போதுமானது. இம்மூன்றும் வேண்டும் என்கிற நிர்ப்பந்தம் இல்லை என்று கருத்து.

இந்தச் சூர்ணைக்கு அவதாரிகையும் விவரணமும் வேறு வகையாகவும் கூறலாம். "சென்ற சூர்ணையில் வாயாலும், உடலாலும் பற்றினாலும் பேறு கிடைக்கக் குறையில்லை. மனத்தால் பற்றுவதே முக்கியம்" என்று ஒவ்வொரு கரணத்தால் பற்றுவது சொல்லப்பட்டது. இப்படி ஒவ்வொரு கரணத்திலே ஒதுக்கிச் சொல்லுவதைக் காட்டிலும், "ப்ரபத்₃யே" என்னும்சொல் முக்கரணத்தாலும் பற்றுவதைச் சொல்லுவதாகக் கொள்ளலாமே என்னும் கேள்விக்குப் பதிலாக இச்சூர்ணையை அருளிச் செய்கிறார்—என்பது அவதாரிகை.

அப்போது விவரணமாவது — உபாயம் அவனேயாகையாலும், இம்மூன்றும் நேரே உபாயம் ஆகாமையாலும், முக்கரணத்தாலும் பற்றவேண்டும் என்னும் நிர்ப்பந்தம் இல்லை. ஒவ்வொரு கரணத்தால் பற்றினாலே போதுமானது என்று கருத்து. ஜ்ஞாநத்தாலே மோக்ஷமாகையாலே மனத்தாலே பற்றுவது முக்கியமானாலும் மற்ற இரு கரணங்களில் ஒன்றினால் பற்றினாலும், எம்பெருமான் பலனளிப்பான் என்று கருத்து. இவ்விஷயத்தைப் பிள்ளை லோகாசார்யரே பரந்தபடி என்னும் ரஹஸ்யத்தில், "இந்த ஶரணாகதி முக்கரணத்தாலும் விளையலாம்; ஒரே கரணத்தாலும் விளையலாம்; எப்படியிருந்தாலும் மோக்ஷ பலன் கிடைப்பதற்குக் குறையில்லை. பூர்ணாதி₄காரிகள் முக்கரணத்தாலும் பற்றுவார்கள். மோக்ஷ பலன் கிடைப்பதற்கு ஒரு கரணத்தினால் பற்றினாலே போதுமானது. உபாயமாகிற எம்பெருமானின் பூர்த்திக்குத் திருவின் நாயகனாயிருக்கையும், வாத்ஸல்யம் முதலான குணங்களோடு கூடியிருக்கையும், தி₃வ்யமங்கள விக்ரஹத்தை உடையனாயிருக்கையும் வேண்டியிருப்பது போலே பற்றுகிற அதிகாரியின் பூர்த்திக்கு முக்கரணங்களாலும் பற்றுகை அவசியமாயிருக்கிறது" என்னும் பொருளுள்ள ஸ்ரீ ஸூக்திகளை அருளிச் செய்தது அநுஸந்திக்கத்தக்கது.

**ஸக்ருதே₃வ ஹி ஶாஸ்த்ரார்த்த₂: க்ருதோ(அ)யம் தாரயேந் நரம் |**
**உபாயாபாயஸம்யோகே₃ நிஷ்ட₂யா ஹீயதே(அ)நயா ||**

*[லக்ஷ்மீ தந்த்ரம் 17-90]*

*[ஶாஸ்த்ரதாத்பர்யமான இந்த ப்ரபத்தி ஒரு தடவை செய்யப் பட்டாலும் மனிதனை (ப₄வக்கடலினின்றும்) தாண்டுவிக்கும். மற்ற உபாயங்களையும் (தகாத செயல்களாகிற) அபாயங்களை யும் அநுஷ்டி₂த்தால் இந்த ப்ரபத்தி நிஷ்டை₂ நழுவுகிறது.]* என்கிற ப்ரமாணத்தின்படியும், "ஸக்ருதே₃வ ப்ரபந்நாய" [பக்கம்-23] என்று தொடங்கும் ராம சரம ஶ்லோகத்தின்படியும் ப்ரபத்தி ஒரு முறையே செய்யத்தக்கதாயிருக்க, பலமுறை செய் யத்தக்கது என்று தோன்றும்படி "ப்ரபத்₃யே" என்று நிகழ் காலமாகச் சொன்னது எதற்காக? என்னும் கேள்விக்கு அடுத்த சூர்ணையில் பதில் அருளிச்செய்கிறார்.

**ஸூ 157 : வர்த்தமான நிர்த்₃தே₃ஶம்—ஸத்வம் தலை யெடுத்து அஞ்சினபோது அநுஸந்தி₄க்கைக்காக:**

**விவரணம் :** அதாவது -"லோகவிக்ராந்த சரணௌ ஶரணம் தே(அ)வ்ரஜம் விபோ₄" [விஹகே₃ந்த்₃ர ஸம்ஹிதை – படலம் 22] [எம்பிரானே! தேவரீருடைய உலகமளந்த பொன்னடிகளையே சரணமடைந்தேன்] "நின்னடியிணை அடைந்தேன்" [பெரிய திரு 5-8-1], "அடிக்கீழமர்ந்து புகுந்தேன்" [திருவாய் 6-10-10] என்கிறபடியே ஒருமுறை சரணமடைந்ததாகச் சொல்லாமல் எப் போதுமே சரணமடைந்து கொண்டிருக்க வேண்டும் என்று கூறுவதுபோலே, "ப்ரபத்₃யே" என்று நிகழ்காலமாகக் கூறுவது —

**அபாயஸம்ப்லவே ஸத்₃ய: ப்ராயஶ்சித்திம் ஸமாசரேத் |**
**ப்ராயஶ்சித்திரியம் ஸாத்ர யத் புந: ஶரணம் வ்ரஜேத் ||**
**உபாயாநாமுபாயத்வ ஸ்வீகாரே(அ)ப்யேவமேவ ஹி ||**

*[லக்ஷ்மீதந்த்ரம் 17-91]*

*[(தகாத செயல்களாகிற) அபாயாநுஷ்ட₂ானம் உண்டானால் உடனே ப்ராயஶ்சித்தம் செய்யவேண்டும். மறுபடியும் ஶரண மடைவது ப்ராயஶ்சித்தமாகும். மற்ற உபாயங்களை உபாயமாக எண்ணி அநுஷ்டி₂த்தாலும் இதுவே ப்ராயஶ்சித்தமாகும்.]* என் கிற ப்ரமாணத்தின்படி, சரீரஸம்ப₃ந்த₄த்தோடு இருக்கும் இச

சேதனன் ரஜஸ்தமோ குணங்களாலே கலங்கி உபாயாந்தரங்கள், தகாத செயல்கள் ஆகியவற்றில் தொடர்பு ஏற்பட்டு அதன் பின் ஸத்வகுணம் விளைகையாலே அநுதாபம் உண்டாகி, தனது ப்ரபத்தி நழுவிவிட்டதே என்று பயப்பட்ட காலத்திலே அதற்குப் ப்ராயச்சித்தம் மறுபடி சரணமடைவது என்றே கூறியிருக்கையாலும், ஒருமுறை செய்யப்பட்டதை மறுபடி செய்வது பொருந்தாதாகையாலே இந்த ப்ராயச்சித்தப் ப்ரபத்தி முன் ப்ரபத்தியை அநுஸந்திக்கை என்றே கொள்ளவேண்டுமாகையாலும், இப்படி அடிக்கடித்₃வயாநுஸந்த₄ானம் செய்யவேண்டும் என்று காட்டுவதற்காக நிகழ்காலத்தில் "ப்ரபத்₃யே" என்று படிக்கப்படுகிறது என்று கருத்து.

இந்த நிகழ்காலத்துக்கு மேலும் சில பயன்களைச் சொல்லுகிறார் அடுத்த சூர்ணையில்.

**மூ 158 : உபாயாந்தரங்களில் நெஞ்சு செல்லாமைக்கும், காலக்ஷேபத்துக்கும், இனிமையாலே விடவொண்ணாமையாலும் நடக்கும்.**

**விவரணம் :** அதாவது—அநாதிகாலமாக ஏற்பட்ட பழக்கத்தாலும், தன்னையறியாமல் மற்ற உபாயங்களில் மனம் ஈடுபடாமலிருப்பதற்காகவும், இந்த த்₃வயாநுஸந்த₄ானம் செய்யாவிடில் போதுபோக்க இயலாதாகையால், போதுபோக்குக்காகவும், இவ்வநுஸந்த₄ாநமே இனிமையாய் இருக்கையாலே இதை விட முடியாதாகையாலும், சரணாகதி ரூபமான இந்த த்₃வயாநுஸந்த₄ானம் இடைவிடாமல் நடப்பதாயிருக்கும் என்று கருத்து.

இப்படிக் கொள்ளாமல் மோக்ஷப₂லன் கிடைப்பதற்குப் பலமுறை அநுஸந்திக்கவேண்டும் என்று கொண்டால் என்ன? என்னும் கேள்விக்குப் பதிலளிக்கிறார் அடுத்த சூர்ணையில்.

**மூ 159 : பேற்றுக்குப் பலகாலும் வேணுமென்று நினைக்கில் உபாயம் நழுவும்.**

**விவரணம் :** அதாவது முன் இரண்டு சூர்ணைகளில் சொன்ன பயன்களுக்காக மாத்திரமல்லாமல் மோக்ஷஸித்திக்கே த்₃வயாநுஸந்தானத்தைப் பலமுறை செய்யவேண்டுமென்று நினைத்தால்,

வேறு எத்துணையையும் பொறுக்கமாட்டாத ஸித்₃தோ₄பாயமான எம்பெருமான் ஆஞ்ஜநேயர் விஷயத்தில் சணற் கயிறு கண்ட பிரம்மாஸ்திரம் நழுவியது போலே, இவனைக் கைவிட்டு விடுவான் என்று கருத்து.

"சரணாகதி மற்றோர் சாதனத்தைப் பற்றில் அரணாகாதஞ்சனை தன் சேயை—முரணழியக் கட்டியது வேறோர் கயிறு கொண்டு ஆர்ப்பதன் முன் விட்ட படை போல விடும்" [ஞானசாரம் 28] என்னும் அருளாளப் பெருமாள் எம்பெருமானாரின் ஞான சாரப் பாட்டு இங்கு அனுஸந்திக்கத் தக்கது. ஆக இதுவரையில் த்₃வயத்தின் பூர்வ வாக்கியத்திற்குப் பொருள் விளக்கப்பட்டது.

இனி, த்₃வயத்தின் உத்தர வாக்யத்திற்குப் பொருள் அருளிச் செய்யத்தொடங்குகிறார் அடுத்த சூர்ணையில்.

**சூ 160 : உத்தர வாக்யத்தாலே ப்ராப்யம் சொல்லுகிறது.**

**விவரணம் :** ப்ராப்யமாவது—திருவின் நாயகனாய், அனைவர்க்கும் தலைவனாயிருக்கும் ஸர்வேஶ்வரனான நாராயணன் திருவடிகளில் பண்ணும் கைங்கர்யமாகும்.

முன் வாக்கியத்தில் உபாயஸ்வீகாரம் செய்த பிறகு பின் வாக்கியத்தில் 'ப்ராப்யம்' சொன்னதற்குக் கருத்து அருளிச் செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

**சூ 161 : ப்ராப்யாந்தரத்துக்கு அன்றென்கை.**

**விவரணம் :** முதல் வாக்கியத்தில் சொல்லப்பட்ட ஸாதனம், "தாவத₃ார்த்திஸ் தத₂ா வாஞ்ச₂ா தாவந்மோஹஸ் தத₂ாऽஸுக₂ம் | யாவந்ந யாதி ஶரணம் த்வாமஶேஷாக₄ நாஶநம் ||" [எல்லாப் பாபங்களையும் போக்கடிக்கும் உன்னை எதுவரையில் ஶரணமடையவில்லையோ, அதுவரையிலேயே (செல்வத்தை இழந்ததினால் ஏற்படும்) வருத்தம்; அதுவரையிலேயே (செல்வம் வேண்டுமென்னும்) ஆசை; அதுவரையிலேயே (ப₄க₃வானை அடையாததினாலே ஏற்படும்) துன்பம். (ஆர்த்தன், அர்த்த₂ார்த்தி₂, கைவல்யநிஷ்ட₂ன், ப₄க₃வத் ப்ராப்திகாமன் என்னும் நான்கு

விதமான அதி₄காரிகளுக்கும் ப்ரபத்தியே ப₂ல ஸாத₄னம் என்று தாத்பர்யம்)] என்கிறபடியே இழந்த செல்வம், புதிய செல்வம், ஆத்மப்ராப்தி, ப₄க₃வத்ப்ராப்தி என்கிற நான்கு ப₂லன்களுக்கும் பொதுவாகையாலே, த்₃வயத்தின் முன் வாக்கியத்தில் பண்ணின உபாயஸ்வீகாரம் முதல் மூன்று ப₂லன்களுக்குமன்று. நாலாவது ப₂லனுகிற ப₄க₃வத் கைங்கர்யத்தைப் பெறுவதற்கே என்று உணர்த்துவதே இப்போது ப்ராப்யம் சொல்லுகிற இதற்குப் பயன் என்று கருத்து.

மற்ற ப்ராப்யங்களை விட்டு இந்த ப்ராப்யத்தை வேண்டுவதற்குக் காரணம் என்ன? என்ற கேள்விக்கு அடுத்த சூர்ணையில் பதிலளிக்கிருர்.

**சூ 162 : உபாயாந்தரங்களை விட்டுச் சரமோபாயத்தைப் பற்றினுற்போலே உபேயாந்தரமான ஐஶ்வர்ய கைவல்யங்களை விட்டு எல்லையான ப்ராப்யத்தை அர்த்தி₂க்கிறது.**

விவரணம் : அதாவது — முன்வாக்கியத்தில் உபாயத்தைப் பற்றுகிறபோது. வேறு எவரையும் தஞ்சமாகக் கொள்ளாமல் இருக்கையாகிற ஆத்மஸ்வரூபத்துக்கு முரண்படாமல், கர்மஜ்ஞாந ப₄க்தியோகங்களாகிற மற்ற உபாயங்களைவிட்டு, கடைசி உபாயமான ஸித்₃தோ₄பாயமாகிற எம்பெருமானைப் பற்றுவது போலே, உத்தரவாக்கியத்தில் ப்ராப்யத்தைப் பிரார்த்தனை செய்யும். இப்போது, ப₄க₃வத் கைங்கர்யம் தவிர வேறு எதையும் இனியதாகக் கொள்ளாதிருக்கையாகிற ஜீவாத்மஸ்வரூபத்துக்கு முரண்படாமல் மற்ற ப்ராப்யங்களாகிற ஐஶ்வர்ய கைவல்யங்களை விட்டு, கடைசி ப்ராப்யமாகிற ப₄க₃வத் கைங்கர்யத்தைப் பிரார்த்திக்கிறது என்று கருத்து.

நினைப்பவர்கள் நினைப்பதையெல்லாம் அந்தர்யாமியாக இருந்து அறியும் ஸர்வேஶ்வரன் விஷயத்தில் இவன் பிரார்த்திக்க வேண்டுமோ? ஸர்வஜ்ஞனை அவனே அறியமாட்டானே? என்று சிலர் கேட்கக் கூடுமாகையாலே அக்கேள்வியை அநுவதிக்கிருர் அடுத்த சூர்ணையில்.

**மூ 163: இவன் அர்த்தி$_2$க்க வேணுமோ? ஸர்வஜ்ஞன் இவன் நினைவறியானோ? என்னில்.**

விவரணம்: எல்லாம் அறிந்த ஸர்வேஶ்வரனுக்குத் தன் விருப்பத்தை இவன் பிரார்த்தனை மூலம் தெரிவிக்கவேண்டுமோ? இவன் நினைவறிந்து அவன் இவன் விரும்பியதை அளிக்கமாட்டானோ? என்பது இக்கேள்விக்குக் கருத்து.

இக்கேள்விக்குப் பதில் அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

**மூ 164: இவன் பாசுரங்கேட்டவாறே திருவுள்ளம் உகக்கும்.**

விவரணம்: அதாவது — அஜீர்ண நோயாலே உணவில் விருப்பமில்லாமல் இருந்த குழந்தை அந்த நோய் தீரப்பெற்றுப் பசி உண்டாகி, 'உணவளிப்பாய்' என்று பிரார்த்திக்கும் வார்த்தையைக் கேட்டவுடன் பெற்றதாய் பேரானந்தம் அடைவது போலே, அநாதி$_3$காலமாக ஶப்$_2$த$_3$ாதி$_3$ விஷயங்களான மற்ற பயன்களில் ஈடுபட்டிருக்கையாகிற நோயினாலே, ப$_4$க$_3$வத் கைங்கர்யமான ப்ராப்யத்திலே விருப்பமில்லாமல் கிடந்தவன் இதிலே விருப்பமுண்டாகித் தன்னிடம் வந்து 'கைங்கர்யத்தை அருளவேண்டும்' என்று பிரார்த்திக்கிற வார்த்தையைக் கேட்டவுடன் கைங்கர்யம் கொள்ளும் ஸ்வாமியான அவன் பேரானந்தம் அடைகிறான். இதற்காகவே இவன் கைங்கர்யத்தைப் பிரார்த்திக்கிறான் என்று கருத்து.

இனி, இந்த உத்தரவாக்கியத்தில் ஒவ்வொரு பதத்திற்கும் பொருள் அருளிச்செய்யத் திருவுள்ளம் பற்றி, முதல் பதத்தை எடுத்து அதற்கு அர்த்த$_2$ம் அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

**மூ 165: ஶ்ரீமதே — பெரியபிராட்டியாரோடே கூடியிருந்துள்ளவனுக்கு.**

விவரணம்: இங்கும் பூர்வவாக்யத்திற்போலே "ஸ்ரீ" ஶப்₃த₃த்திற்கு "ஶ்ரீயதே" [சேதநர் அனைவராலும் ஆஶ்ரயிக்கப்படுகிறாள்] என்னும் கர்மணி வ்யுத்பத்திப் பொருளும், "ஶ்ரயதே" [எம்பெருமானை ஆஶ்ரயித்திருக்கிறாள்] என்னும் கர்த்தரி வ்யுத்பத்திப் பொருளும் (124-வது சூர்ணை காண்க), 130-வது சூர்ணையில் 'மதுப்' ப்ரத்யயத்திற்குச் சொன்ன நித்ய யோகப் பொருளும் அநுஸந்தி₄க்கத்தக்கது.

பூர்வ வாக்யம், உத்தர வாக்யம் ஆகிய இரண்டிலும் 'மதுப்' ப்ரத்யயத்தாலே பிராட்டி எம்பெருமானோடு எப்போதும் சேர்ந்திருக்கிறாள் என்று நித்யயோக₃ம் சொல்லப்பட்ட போதிலும் இவ்விரண்டு இடத்திலும் எம்பெருமான் உபாயமாகவும், ப்ராப்யமாகவும் ஆகும்போது இவள் எப்படிச் செயல்படுகிறாள் என்பதை அடுத்த சூர்ணையில் அருளிச் செய்கிறார்.

**ஸூ 166: அவன் உபாயமாமிடத்தில் தான் புருஷகாரமாயிருக்கும்; அவன் ப்ராப்யனுமிடத்தில் தான் ப்ராப்யையுமாய்க் கைங்கர்ய வர்த்த₄கையுமாயிருக்கும்.**

விவரணம்: அதாவது—எம்பெருமான் சேதநருக்குத் (தன்னையடையத்) தடைகளாயிருக்கும் சரீர ஸம்பந்தம் முதலானவற்றைப் போக்குவதற்கும், சேதநனால் விரும்பப்படும் ப₄க₃வத் ப்ராப்தி முதலானவற்றை அடைவிப்பதற்கும், தனிக்காரணமான உபாயமாகும் போது, வேறொரு துணையைப் பொறுக்கமாட்டாதவனாகையாலே, பிராட்டி தான் உபாயத் தன்மையில் தொடர்பில்லாமல், குற்றம் நிறைந்த சேதநர்களுடைய குற்றங்களைப்பார்த்து எம்பெருமான் சீறும்போது, அக்குற்றங்களைப் பொறுத்து, சேதநனை அவன் ஏற்றுக்கொள்ளும்படி செய்யும் புருஷகாரமாய் இருக்கிறாள். ஆகையால் பூர்வ வாக்யத்தில் "ஸ்ரீ" ஶப்₃த₃ம் புருஷகாரமாயிருக்கும் பிராட்டியைக் குறிக்கிறது. உத்தர வாக்யத்தில் முன் சொன்னபடி எம்பெருமான் சேதநர்களுக்குக் கைங்கர்யத்தை ஏற்றுக்கொள்ளும் ப்ராப்யனாகும்போது இவளும் அவனைப்போலே கைங்கர்யத்தை ஏற்றுக்கொள்ளும் ப்ராப்யையுமாய், சேதநர்கள் செய்யும் கைங்கர்யத்தை எம்பெருமான் திருவுள்ளத்திலே ஒன்

னுக்குப் பத்தாகக் காட்டி அவனை உகப்பிக்கையாலே கைங்கர்யத்தை வளர்ப்பவளாகவும் இருக்கிறாள் என்று கருத்து. இவ்விஷயத்தையே பரந்தபடியிலே பிள்ளை லோகாசார்யர், ''பூர்வ வாக்யத்தில் ஸ்ரீமச்சப்தம் சேதநருடைய குற்றத்தையும் ஈச்வரனுடைய ஸ்வாதந்த்ர்யத்தையும் கண்டு, 'இவர்கள் அவனுடைய கோபத்துக்கு இலக்காய் ஆத்மநாசம் அடையாமல் எம்பெருமானை அடைந்து உய்ந்து போக வேணும்' என்று குற்றம் புரிந்த சேதநரை ஈச்வரனோடு சேர்ப்பதற்காக எப்போதும் அவனை விடாதே இருக்கும் இருப்பைச் சொல்லுகிறது. உத்தர வாக்யத்தில் 'ஸ்ரீமத்' ஶப்தம் — பெருமாளும் பிராட்டியுமான இருவரும் சேர்ந்தே கைங்கர்யம் கொள்பவராய் இருக்கையாலும், சேதநர்கள் பண்ணும் கைங்கர்யத்தை எம்பெருமான் திருவுள்ளத்திலே ஒன்று பத்தாகக் காட்டுவதற்கும், எம்பெருமானைக் கண நேரம் பிரிந்தாலும் தான் ஸத்தை இழக்கும்படியிருக்கையாலே, எம்பெருமானோடு எப்போதும் அணைந்திருக்கைக்காகவும், அவனை ஒரு கணமும் பிரியாமல் எல்லாக் காலமும் அவனோடு கூடியிருக்கும் இருப்பைச் சொல்லுகிறது'' என்னும் பொருளுள்ள விரிவான ஸ்ரீஸூக்திகளை அருளிச் செய்தது இங்கு அநுஸந்திக்கத் தக்கது.

திருமந்த்ரத்தில் ''நாராயணாய'' என்னும் கடைசிப் பதத்திற்கு த்வயத்தின் இந்த உத்தர வாக்யம் விவரணமாய் இருப்பதை அருளிச் செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

**ஸூ 167: இதிலே திருமந்த்ரத்தில் சொன்ன ப்ராப்யத்தை விசதமாக அநுஸந்திக்கிறது.**

விவரணம்: அதாவது - திருமந்த்ரத்தில் ''நாராயணாய'' என்னும் பதத்தாலே ''நாராயணனுக்கு அடிமை செய்யப்பெறுவேனாக வேணும்'' என்று சொல்லிற்றே ஒழிய, ''பெரிய பிராட்டியாரோடு கூடிய ஸ்ரீமந் நாராயணனுக்கு அடிமை செய்யவேண்டும்'' என்று சொல்லவில்லை. அர்த்தபலத்தாலே அப்படிக்கொள்ளவேண்டியிருக்கையாலே அங்கு இவ்விஷயம் தெளிவில்லை. மேலும், 'அடிமை செய்கின்ற ஜீவன் தன் ஆனந்தத்துக்கு உறுப்பாக அடிமை செய்யலாகாது' என்னும் விஷயமும் அங்கு வெளிப்படையாகச் சொல்லப்படவில்லை. இவ்விரண்டு குறைகளும் தீர, இங்கு ''ஸ்ரீமதே நாராயணாய'' என்று கைங்கர்யத்தை ஏற்றுக்

கொள்ளுவது ஒரு விதி₂நம் என்று தெளிவாகச் சொல்லப்படு கிறது. "நாராயணாய நம:" என்றதாலே கைங்கர்யம் எம்பெரு மானுடைய ஆனந்தத்துக்கு உறுப்பாகச் செய்யப்படவேண்டும் என்பதும் தெளிவாகச் சொல்லப்படுகிறது; இவ்வண்ணமாக, அங்கு தெளிவாகச் சொல்லப்படாத ப்ராப்யத்தை இந்த உத் தர வாக்கியத்தில் தெளிவாக அநுஸந்திக்கிறதாகையாலே திரு மந்த்ரத்தில் "நாராயணாய" என்னும் பதத்திற்கு இந்த உத்தர வாக்கியம் விவரணமாகிறது.

பெருமாளும், பிராட்டியுமான இந்தத் தம்பதிக்கே அடிமை செய்யவேண்டும் என்னும் நிர்ப்பந்தம் எதற்காக? என்னும் கேள் விக்கு அடுத்த சூர்ணையிலே விடை அருளிச் செய்கிருர்.

**சூ 168 : இளைய பெருமாளைப்போலே இருவரு மான சேர்த்தியிலே அடிமை செய்கை முறை.**

**விவரணம் : அதாவது —**

**ப₄வாம்ஸ்து ஸஹ வைதே₃ஹ்யா கி₃ரிஸாநுஷு ரம்ஸ்யதே |**
**அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்₃ரத: ஸ்வபதஸ்ச தே ||**

*[ரா-அ 31-25]*

[தேவரீர் வைதேஹியோடு கூட மலைத் தாழ்வரைகளில் விளையாடு வீர். தேவரீர் விழித்திருக்கும்போதும், கண்வளரும் போதும் உமக்கு எல்லாவடிமைகளும் செய்வேன்.] என்று பெருமாளும் பிராட்டியுமான சேர்த்தியிலே அடிமை செய்த இளைய பெருமா ளைப்போலே இருவருமான சேர்த்தியிலே அடிமை செய்கை இந்த ஆத்மாவின் ஸ்வரூபத்துக்குத் தக்கது. ப்ரணவத்திலிருந்து, "பிராட்டியோடு கூடிய பெருமாளுக்கு அடிமைப்பட்டிருக்கை இவ்வாத்மாவுக்கு ஸ்வரூபம்" என்று தேறுகையாலே, 'அவ் விருவருமான சேர்த்தியிலே கைங்கர்யம் செய்வதே ஸ்வரூபத் துக்குத் தகும்' என்பது சொல்லாமலே விளங்கும்.

மேலும் அச்சேர்த்தியிலே அடிமை செய்வதில் உள்ள சிறப்பை அருளிச் செய்கிருர், அடுத்த சூர்ணையில்.

**சூ 169 : அடிமை தான் ஸித்₃தி₄ப்பதும் ரஸிப் பதும் அச்சேர்த்தியிலே.**

**விவரணம் :** அதாவது—ஸ்வதந்த்ரனான ஸர்வேஶ்வரன் இச்சேதனனைக் கண்டு பாராமுகமாயிராமல் கைங்கர்யம் கொண்டருளும்படி செய்கின்றவள், தாயான இப்பிராட்டியேயாகையாலே,

**ஸ ப்₄ராதுஶ் சரணௌ கா₃ட₄ம் நிபீட்₃ய ரகு₄நந்த₃ந: |**
**ஸீதாமுவாசாதியஶா: ராக₄வம் ச மஹாவ்ரதம் ||**
[ரா-அ 34-2]

[பெரும் புகழையுடைய இலக்குவன் தமையனுடைய திருவடிகளை உறுதியாகப் பிடித்துக்கொண்டு பிராட்டியிடம் விண்ணப்பித்தான்; (பிறகு) ஶரணாக₃தரக்ஷணமாகிற பெரிய விரதத்தையுடைய ஸ்ரீராமபிரானிடமும் விண்ணப்பித்தான்.]

**ஏவமுக்தஸ்து ராமேண லக்ஷ்மண: ஸம்யதாஞ்ஜலி: |**
**ஸீதாஸமக்ஷம் காகுத்ஸ்த₂மித₃ம் வசநமப்₃ரவீத் ||**
[ரா-ஆ 15-6]

[ராமபிரானால் இவ்வண்ணம் சொல்லப்பட்ட இலக்குவன் கை கூப்பியவனாய், சீதாபிராட்டியின் முன்னிலையில் காகுத்தனை நோக்கி இந்த வார்த்தையைச் சொல்லலுற்றான்.] என்று பிராட்டியை முன்னிட்டுக்கொண்டு தம்முடைய ஸ்வரூபத்துக்குத் தக்க அடிமையை வேண்டிப் பெற்ற இளைய பெருமாளைப் போலே, இந்தச் சேதனன் வேண்டுகிற அடிமை ஸித்திப்பதும் பிராட்டியோடு சேர்ந்திருக்கும் நிலையிலேயே ஆகும். தாய், தந்தையர் இருவருமான சேர்த்தியிலே அவர்களுக்கு அடிமை செய்யும் பிள்ளையைப்போலே, இச்சேதனன் செய்யும் அடிமை இனிப்பதும் அகிலஜக₃ந்மாதாவான பிராட்டியும் ஸர்வலோக பிதாவான பெருமாளும் கூடியிருக்கும் சேர்த்தியிலேயேயாகும் என்று கருத்து.

இனி, உத்தர வாக்கியத்தில் இரண்டாம் பதத்தை எடுத்து அதற்கு அர்த்தமும் அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

**சூ 170 : நாராயணாய — ஸர்வஶேஷியாயுள்ளவனுக்கு.**

விவரணம் : 'நார' ஶப்₃த₃ம் உப₄ய விபூ₄தியையும் குறிப்பதாய், "நாராயண" ஶப்₃த₃ம் அந்த உப₄யவிபூ₄திக்கும் தலைவனாய் உள்ளவனைக் குறிக்கையாலே "நாராயணாய" என்னும்

பத₃த்துக்கு 'ஸர்வஶேஷியாய் உள்ளவனுக்கு' என்று பொருள் அருளிச்செய்கிறார். கைங்கர்யம் செய்பவன் 'ஶேஷன்' என்றும், கைங்கர்யம் கொள்ளுகிறவன் 'ஶேஷி' என்றும் சொல்லப்படுகிறான் என்று கருத்து.

கைங்கர்யமாவது அதை ஏற்றுக்கொள்ளுகிறவனை அனுபவிப்பதால் உண்டான உகப்பினால் உண்டாவது. அந்த உகப்பும் அனுபவிக்கப்படும் விஷயத்தையொட்டி விளைவது. இங்கு அனுபவிக்கப்படும் விஷயம் இன்னது என்பதை அடுத்த சூர்ணையில் அருளிச் செய்கிறார்.

**ஸூ 171: இதிலே திருமேனியையும் கு₃ணங்களையும் சொல்லும்.**

**விவரணம் :** அதாவது — கைங்கர்யம் கொள்கின்றவனைச் சொல்லும் இந்த "நாராயணாய" என்னும் பத₃த்திலே, கைங்கர்யத்திற்கு முன்னால் உண்டாகும் அநுப₄வத்துக்கு இலக்கான தி₃வ்யமங்க₃ள விக்ரஹத்தையும், கல்யாண குணங்களையும் சொல்லும் என்று கருத்து.

**தத்₃ விஷ்ணோ: பரமம் பத₃ம்। ஸதா₃ பஶ்யந்தி ஸூரய:।**
**[யஜுஃகாண்டம் 4-2-29]**

[விஷ்ணுவினுடைய அந்தப் பரமபத₃த்தை நித்யஸூரிகள் எப்போதும், காண்கிறார்கள்.]

**யோ வேத₃ நிஹிதம் கு₃ஹாயாம் பரமே வ்யோமந்**
**ஸோऽஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்₃ரஹ்மணா விபஶ்சிதேதி**
**[தை-ஆந 2-2]**

[அநந்தனான ப்₃ரஹ்மத்தைப் பரமபத₃த்திலிருப்பவனாகவும், ஹ்ருத₃யகு₃ஹையிலிருப்பவனாகவும் எவன் அறிகிறானோ. அந்த உபாஸகன் எல்லாவற்றையும் உணர்ந்த பரம்பொருளோடு எல்லாக் கல்யாண கு₃ணங்களையும் அநுபவிக்கிறான்.] என்கிறபடியே தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹமும் கல்யாண குணங்களும்

**ரஸம் ஹ்யேவாயம் லப்₃த்₄வாऽऽநந்தீ₃ ப₄வதி**
**[தை-ஆந 7]**

[இந்த ஜீவன் ரஸஸ்வரூபனாகிய பரம்பொருளை அடைந்து ஆனந்தமுடையவனாகிறான்.] என்று சொல்லப்படுகிற ப்ரஹ்மத் ஸ்வரூபத்தைப் போலே கைங்கர்யத்தை வளர்ப்பவையாய், இனியவையாயன்றோ இருக்கின்றன. குணங்கள் என்று பொதுவாகச் சொல்லுகையாலே, சேதனனுக்கு மோக்ஷம் அளிக்க உறுப்பான ஜ்ஞாநம், சக்தி முதலான குணங்கள், எம்பெருமானை அணுகுவதற்கு உறுப்பான வாத்ஸல்யம் முதலான குணங்கள், சேதனனுடைய விரோதிகளைப் போக்குவதற்கு உறுப்பான சௌர்யம் (சூரத்தன்மை) முதலான குணங்கள் ஆகிய எல்லாக் குணங்களுமே அனுபவிக்கத்தக்கவையாய் இருக்கின்றன என்று விளங்குகிறது. ஆகையால், பூர்வ வாக்கியத்தில் 'நாராயண' பதத்தில் உபாயத்தைப் பற்றுவதற்கு உறுப்பாக அனுஸந்திக்கத்தக்கவையாக 100. 137 சூர்ணைகளில் சொல்லப்பட்ட குணங்கள் அனைத்தும் உத்தர வாக்கியத்தில் உள்ள இந்த "நாராயண" பதத்தில் அநுபவிக்கத்தக்க ப்ராப்யமாக அநுஸந்திக்கத்தக்கது. இந்த குணங்களுக்கு இருப்பிடமான ஸ்வரூபத்திற்கு உபாயத்வம், ப்ராப்யத்வம் என்னும் இரண்டு தன்மைகளும் இருப்பதுபோலே, ஸ்வரூபத்திலிருக்கும் இந்த குணங்களுக்கும் இவ்விரண்டு தன்மைகளும் உண்டன்றோ. இவ்விஷயங்கள் அனைத்தையும் பரந்தபடியிலே இவர் விரிவாக அருளிச்செய்தார்.

இப்படி திருமேனியையும், எல்லா குணங்களையும் இப்பதம் சொல்லுவதானாலும் இப்பதத்திற்கு முக்கியமான தாத்பர்யம் எதிலே என்பதை அடுத்த சூர்ணையில் அருளிச்செய்கிறார்.

**மூ 172 : சேஷித்வத்திலே நோக்கு.**

விவரணம் : அதாவது—எல்லா குணங்களுமே அனுபவிக்கத் தக்கவையாகையாலே, இந்த நாராயண பதத்தில் சொல்லப்பட்டவையாய் இருந்த போதிலும், இதிலுள்ள நாலாம் வேற்றுமையால் சொல்லப்படும் கைங்கர்யத்திற்கு மிகவும் நெருங்கியிருப்பது சேஷித்வமாகிய குணமாகையால் இப்பதத்திற்கு அந்த குணத்தைச் சொல்லுவதிலேயே முக்கிய தாத்பர்யம்—என்று கருத்து.

இப்படி சேஷித்வத்தை முக்கியமான தாத்பர்யமாகச் சொல்லுவதற்குப் பயனை அடுத்த சூர்ணையில் அருளிச் செய்கிறார்.

**மூ 173 : ப்ராப்த விஷயத்தில் கைங்கர்யமிறே ரஸிப்பது.**

விவரணம் : அதாவது — திருமந்த்ர ப்ரகரணத்தில் [ப-52] 51-வது சூர்ணையின் விவரணத்தில் எடுக்கப்பட்ட மநுஸ்ம்ருதி ஶ்லோகங்களின்படி தள்ளப்பட்ட ப்ராக்ருத விஷயங்களில் கைங்கர்யங்கள் போல் அல்லாமல்

**யேந யேந தா4தா க3ச்ச2தி தேந தேந ஸஹ க3ச்ச2தி**
**தத்3யதா2 தருணவத்ஸா வத்ஸம் வத்ஸோ வா மாதரம்**
**சா2யா வா ஸத்வமநுக3ச்சே2த் ததா2ப்ரகாரம் ||**

[பரமஸம்ஹிதை]

[எப்படி, இளங்கன்றையுடைய பசு கன்றையும், கன்று பசுவையும், நிழல் பிராணியையும் பின் தொடர்கின்றனவோ அப்படியே, எப்படி எப்படிப் பரமபுருஷன் செல்லுகின்றானோ, அப்படி அப்படியே (முக்தனும்) கூடப் போகிறான்.] என்றும்,

**வாஸுதே3வ தருச்சா2யா நாதிஶீதா ந க4ர்மதா3 |**
**நரகாங்கா3ரஶமநீ ஸா கிமர்த்த2ம் ந ஸேவ்யதே ||**

[விஹகே3ந்த்3ரஸம்ஹிதை 24-14; கா3ருட3 புராணம் பூர்வக2ண்டம் 222-25]

[மிகக்குளிர்ந்ததாயுமல்லாமலும், மிகுந்த வெப்பத்தையும் தராமலும், நரகமாகிற நெருப்பின் வெப்பத்தைத் தணிப்பதுமாயிருக்கும் வாஸுதே3வனாகிற மரநிழல் ஏன் அடையப்படவில்லை?] என்றும் சொல்லுகிறபடியே ஸ்வரூபத்துக்குத் தக்க ப4க3வத்3 விஷயத்தில் பண்ணும் கைங்கர்யமன்றோ சேதனனுக்குச் சுவை உடையதாயிருக்கும் என்று கருத்து.

இனி, நாராயணாய என்னும் பதத்தில் நாலாம் வேற்றுமைக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

**ஸூ 174 : இந்தச் சதுர்த்தி2 கைங்கர்யத்தை ப்ரகாஶிப்பிக்கிறது.**

**விவரணம்** : அதாவது — இந்த நாலாம் வேற்றுமை — ப்ரணவத்தில் அகாரத்தில் ஏறிக்கழிந்த நாலாம் வேற்றுமையைக் காட்டிலும் வேறுபட்டது. திருமந்த்ரத்தால் ஶேஷத்வஜ்ஞானம் பிறந்தவனுக்குப் பூர்வ வாக்யத்தாலே எம்பெருமானை உபாயமாகப் பற்றியபிறகு, உத்தர வாக்கியத்தில் இந்த நாலாம் வேற்றுமை

படிக்கப்படுகிறது. ஆகையால் இங்கு ஶேஷத்வத்தை மாத்திரம் சொல்லாமல், இந்த நாலாம் வேற்றுமை, பற்றின உபாயத்தினுடைய பலமான கைங்கர்யத்தைத் தெரிவிக்கிறது என்று கருத்து. கைங்கர்யத்தைத் தெரிவிக்கையாவது, கைங்கர்ய ப்ரார்த்தனையைச் சொல்லுகிறது என்கை. கைங்கர்யமாவது எம்பெருமான் முகம் மலர்வதற்கு உறுப்பான செயல்களைச் செய்கை. இக்கைங்கர்யம்

**ஏதத் ஸாம கா₃யந்நாஸ்தே**

[தை-ப்₄ருகு₃ 10-5]

[முக்தன் இந்த ஸாமகா₃னத்தைச் செய்து கொண்டிருக்கிறான்.]

**ஸஹஸாப்₄யது₃த்₃ருவந்த ததஸ்தே மநஸா த்₃ருதம் |**
**க்ருதாஞ்ஜலிபுடா ஹ்ருஷ்டா நம இத்யேவ வாதி₃ந: ||**

[ப₄ார-ஶாந்தி 344-45]

[பின்பு, அந்த ஶ்வேதத்₃வீபவாஸிகளான மஹான்கள் கைகூப்பியவர்களாய், மகிழ்ச்சியுடையவர்களாய், 'நம:' என்றே சொல்லுமவர்களாய் ஒன்று கூடி விரைவில் ஓடினார்கள்.] என்கிற ப்ரமாணங்களின் படியும் 173-வது சூர்ணையின் வ்யாக்யானத்தில் எடுக்கப்பட்ட "யேந யேந த₄ாதா க₃ச்ச₂தி" என்னும் ப்ரமாணத்தின் படியும் வாக்காலும், உடலாலும் செய்யப்படுவதாயிருக்கும்.

இப்படி இக்கைங்கர்யம் ப்ரார்த்திக்கத் தக்கதாகில் எப்போதாவது செய்யப்படுவதாக ஆகாதோ? என்னும் கேள்விக்குப் பதில் அருளிச் செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

**மூ 175 : கைங்கர்யந்தான் நித்யம்.**

**விவரணம் :** அதாவது—எம்பெருமானுக்கு அடிமைப்பட்டிருக்கையே ஜீவாத்மாவுக்கு ஸ்வரூபமாகையாலும், திருமந்த்ர ப்ரகரணம் பக்கம்-69-ல் எடுக்கப்பட்ட நியாயங்களின்படி கைங்கர்யம் செய்யவில்லை என்றால் ஶேஷத்வம் பொருந்தாதாகையாலும், கைங்கர்யம் ஆத்மாவுக்கு எப்போதும் உள்ளது என்று கருத்து. அதனாலன்றோ,

ப₄வந்தமேவாநுசரந்நிரந்தரம்
ப்ரஶாந்த நிஶ்ஶேஷ மநோரத₂ாந்தர: |
கதா₃ஹமைகாந்திக நித்யகிங்கர:
ப்ரஹர்ஷயிஷ்யாமி ஸநாத₂ஜீவித: || [ஸ்தோ ர-46]

[அடியேன் எப்போதும் தேவரீரையே பின்பற்றிநின்று, மற்ற ஆசைகளெல்லாம் அடியோடு அழியப்பெற்று, ஒருபடிப்பட்டதாய், நித்யமான கைங்கரியத்தையுடையவனாய், வாழ்வின் பயன் பெற்றவனாய், என்றுதான் தேவரீரையே மிகவும் உகப்பிக்கப் போகிறேனோ?] என்று ஆளவந்தாரும்,

நித்யகிங்கரோ ப₄வாநி [ஶரணாக₃திக₃த்₃யம்]

[நித்யகைங்கரியம் செய்பவனாக ஆகக்கடவேன்.] என்று எம்பெருமானாரும் அருளிச்செய்தார்கள்.

கைங்கர்யம் எப்போதும் இருப்பதனால் வேண்டிப்பெற வேண்டுமோ? என்னும் கேள்விக்கு அடுத்த சூர்ணையில் பதில் அருளிச் செய்கிறார்.

**ஸூ 176 : நித்யமாக ப்ரார்த்தி₂த்தே பெறவேணும்.**

**விவரணம் :** அதாவது—கைங்கர்யத்தை ஏற்றுக்கொள்ளும் எம்பெருமான் மிகப் பெரியவனாய் இருக்கையாலும், கைங்கர்யம் செய்யும் சேதனன் அவ்வெம்பெருமானுக்கு மிகவும் வசப்பட்டவனாய் இருக்கையாலும், வேண்டிப் பெறாதபோது கைங்கர்யம் கைகூடாமையாலும், இக்கைங்கர்யத்தை எப்போதும் வேண்டியே பெறவேண்டும் என்று கருத்து.

இக்கைங்கர்யம் எப்போதும் வேண்டிப்பெறவேண்டியதாயிருக்கைக்குக் காரணத்தை அருளிச் செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

**ஸூ 177 : ஶேஷிக்கு அதிஶயத்தை விளைக்கை ஶேஷபூ₄தனுக்கு ஸ்வரூபலாப₄மும், ப்ராப்யமும்.**

**விவரணம் :**

நாகிஞ்சித்குர்வத: ஶேஷத்வம் [மீமாம்ஸகர் வழக்கு]

[கைங்கரியஞ் செய்யாதவனுக்கு ஶேஷத்வமில்லை.] என்கிற நியாயத்தின்படி கைங்கர்யம் கொள்ளுபவனுக்கு ஒரு சிறப்பை விளைக்காவிடில் கைங்கர்யம் செய்கிறவனுக்கு ஶேஷத்வம் ஸித்திக்காது. ஆகையால் கைங்கர்யம் கொள்ளும் சேஷியான எம்பெருமானுக்குத் தன்னுடைய அடிமைத் தொழிலாலே உகப்பாகிற சிறப்பை உண்டாக்குகை அடிமை செய்கிறவனுக்கு ஸ்வரூபம் ஸித்திப்பதற்கு உறுப்பாயிருக்கும்; மேலும் அந்த எம்பெருமானுடைய உகப்பை ஜீவன் அனுபவிப்பதற்கும் உறுப்பாயிருக்கையாலே, சேஷபூ4தனான ஜீவனுக்கு அது ப்ராப்யமாகவும் இருக்கும் என்று கருத்து. இப்படி ஸ்வரூப ஸித்திக்கும் உறுப்பாய் ப்ராப்யமாகவும் இருக்கையாலே கைங்கர்யத்தை எப்போதும் வேண்டியே பெறவேண்டும் என்று கருத்து.

அடுத்தபடி உத்தர வாக்கியத்தின் கடைசிப் பதத்தை எடுத்து அதற்கு அர்த்தம் அருளிச் செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

**சூ 178 : 'நம:'-கைங்கர்யத்தில் களையறுக்கிறது.**

**விவரணம் :** அதாவது — 79-வது சூர்ணையில் சொன்னபடி 'நம:' என்னும் சொல் பொதுவாக அஹங்கார மமகாரங்களைக் கழிக்கிறது. திருமந்த்ரத்தில் நடுவில் இருக்கும் அச்சொல் முதல் பதமான ப்ரணவத்தோடு சேரும்போது ஸ்வரூப விரோதியையும், தான் இருந்தவிடத்தில் இருந்துகொண்டே உபாய விரோதியையும், மூன்றுவது பதத்தோடு சேரும் போது புருஷார்த்த விரோதியையும் கழிக்கிறது என்பது 84-வது சூர்ணையில் விவரிக்கப்பட்டது. இங்கு இந்த நமஶ்ஶப்3த3ம் அப்படி மூன்று விரோதிகளையும் கழிக்க வல்லதாயிருந்த போதிலும், 'ஶ்ரீமதே நாராயணாய நம:' என்று கைங்கர்ய ப்ரார்த்தனையையொட்டி அமைந்திருக்கையாலே, இந்தக் கைங்கர்யத்தில் விரோதியைக் கழிக்கிறது என்று கருத்து.

கைங்கர்யத்திற்கு விரோதியாய் இருக்குங் களை எது என்னும் கேள்விக்குப் பதில் அருளிச் செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

**சூ .79 : களையாவது — தனக்கென்னப் பண்ணுமது.**

விவரணம் : தனக்கென்னப் பண்ணுகையாவது — 'நான் அனுபவிப்பவன், இது என்னுடைய போ₄க₃ம்' என்னும் அனுஸந்தானத்துடன் இந்தக் கைங்கர்யத்தைத் தன்னுடைய ஆனந்தத்துக்கு உறுப்பாக நினைத்துப் பண்ணுகை; "எம்பெருமானுடைய முகமலர்த்திக்குக் காரணமாகையாலே இது நமக்கு உத்தேஶ்யம்" என்னும் நினைவு தவிர இந்தக் கைங்கர்யத்தைத் தான் அனுபவிப்பதாக நினைப்பதும் அவ்வனுபவத்தைத் தன்னுடையதாக நினைப்பதும் ஜீவனுக்கு உண்டானால் அது தகாததாயன்றோ இருக்கிறது.

இந்தக் களையை அறுப்பதற்கு மேலே, இந்தக் கைங்கர்யத்தை ஜீவன் அடைவதற்குத் தடையாய் இருப்பவையும் இந்த 'நமஶ்' ஶப்₃த₃த்தாலே கழிக்கப்படுகின்றன என்று அடுத்த சூர்ணையிலே அருளிச்செய்கிறார்.

**சூ 180 : இதிலே அவித்₃யாதி₃களும் கழியுண்ணும்.**

விவரணம் : அதாவது — அஹங்காரமமகாரங்கள் நீங்க வேண்டுமென்று வேண்டுகிற இந்த நமஸ் ஶப்₃த₃த்திலே

**அநாத்மந்யாத்மபு₃த்₃தி₄ர்யா சாஸ்வே ஸ்வமிதி யா மதி: |**
**ஸம்ஸாரதருஸம்பூ₄தி பீ₃ஜமேதத் த்₃விதா₄ ஸ்தி₂தம் ||**
**[வி-பு 6-7-11]**

[ஆத்மாவல்லாத தே₃ஹத்தில் ஆத்மா என்னும் பு₃த்₃தி₄யும், தனதல்லாத வஸ்துவில் தன்னுடையது என்னும் பு₃த்₃தி₄யும், ஸம்ஸாரமாகிய வ்ருக்ஷத்தின் வ்ருத்₃தி₄க்கு இருவகையாயிருக்கும் விதையாகும்.] என்கிறபடியே ஆத்மாவல்லாத தேஹத்தை ஆத்மாவென்று நினைக்கும் நினைவாய் இருப்பதாய், புண்யபாப கர்மங்கள் உண்டாவதற்குக் காரணமாய் இருப்பதான அவித்யை எனப்படும் அஜ்ஞாநமும், அதனால் உண்டாகும் புண்ய பாப கர்மங்களும், அதனால் விளையும் தேஹம் முதலானவற்றின் ஸம்பந்தமும் நீங்கவேண்டும் என்று வேண்டுவதாகக் கொள்ளவேண்டும். ஆகையினாலேயே த்₃வய மந்த்ரத்தை விளக்கும் க₃த்₃யத்திலே நமஸ் ஶப்₂த₃த்தின் பொருளை அநுஸந்திக்கும் போது

மநோவாக்காயை: அநாதி3கால ப்ரவ்ருத்தாநந்தாக்ருத்யகரண க்ருத்யாகரண ப4க3வத3பசார பா4க3வதாபசார அஸஹ்யாபசார ரூப நாநாவித4ாநந்தாபசாராந், ஆரப்3த4கார்யாந் அநாரப்3த4 கார்யாந் க்ருதாந் க்ரியமாணாந் கரிஷ்யமாணாம்ஶ்ச ஸர்வாந் அஶேஷத: க்ஷமஸ்வ

[ஶரணாக3திக3த்3யம்]

[மனம், மொழி, மெய் என்னும் முக்கரணங்களாலும் அநாதி3 காலமாகத் தொடரும் கணக்கற்றவையான தகாதனசெய்வனவும், தக்கன செய்யாமையும், ப4க3வானிடம் செய்யும் குற்றமும், பாக்தர்களிடம் செய்யும் குற்றமும், பொறுக்கவொண்ணாக் குற்றமுமாகிற பலவித எல்லையற்ற குற்றங்களையும், பயன்தரத் தொடங்கியவற்றையும், பயன்தரத் தொடங்காதவற்றையும், செய்தவற்றையும், செய்கிறவற்றையும், செய்யப்புகுமவற்றையும் ஆகிய இவையெல்லாக் குற்றங்களையும் ஒன்று விடாமல் பொறுத்தருள வேணும்.] என்னும் சூர்ணையாலே தகாதன செய்கை முதலான எல்லாக் கர்மங்களும் நீங்குவதையும்,

அநாதி3கால ப்ரவ்ருத்த விபரீத ஜ்ஞாநம் ஆத்மவிஷயம் க்ருத்ஸ்ந ஜக3த்3விஷயஞ்ச விபரீதவ்ருத்தஞ்ச அஶேஷவிஷயம் அத்3யாபி வர்த்தமாநம் வர்த்திஷ்யமாணஞ்ச ஸர்வம் க்ஷமஸ்வ

[ஶரணாக3திக3த்3யம்]

[தன் விஷயமாகவும், மற்றுள்ள உலகின் விஷயமாகவும் அநாதி3 காலமாகத் தொடரும் (ஒன்றை மற்றொன்றாக நினைக்கும்) மாறுபட்ட அறிவையும் தகாத ஒழுக்கத்தையும், எல்லா விஷயத்திலும் இன்றுமிருப்பவையும் இருக்கப்புகுமவையுமான எல்லா விபரீதஜ்ஞாந வ்ருத்தங்களையும் பொறுத்தருளுவாய்.] என்னும் சூர்ணையாலே அஜ்ஞாநம் நீங்குவதையும்,

மதீ₃யாநாதி₃ கர்மப்ரவாஹ ப்ரவ்ருத்தாம் ப₄க₃வத்ஸ்வரூப திரோதா₄நகரீம்
விபரீதஜ்ஞாநஜநநீம் ஸ்வவிஷயாயாஶ்ச போ₄க்₃யபு₃த்₃தே₄ர் ஜநநீம்
தே₃ஹேந்த்₃ரியத்வேந போ₄க்₃யத்வேந ஸூக்ஷ்மரூபேண சாவஸ்தி₂தாம்
தை₃வீம் கு₃ணமயீம் மாயாம் தா₃ஸபூ₄தம்
'ஶரணாக₃தோ஽ஸ்மி தவாஸ்மி தா₃ஸ:' இதி வக்தாரம் மாம் தாரய

[ஶரணாக₃திக₃த்₃யம்]

[என்னுடைய அநாதி₃யான கருமப்பெருக்கால் உண்டானதும், ப₄க₃வானுடைய ஸ்வரூபத்தை (நானறியமுடியாதபடி) மறைப்பதும், மாறுபட்ட அறிவை விளைப்பதும், (ப்ரக்ருதியாகிற) தான் இனியதென்னும் அறிவை விளைப்பதும், தே₃ஹமாகவும், இந்திரியமாகவும், அநுப₄விக்கப்படும் இனியதாகத்தோற்றும் விஷயங்களாகவும் (ஸ்தூ₂லரூபமாகவும்), (ப்ரக்ருதி மஹான் முதலான) ஸூக்ஷ்மரூபமாகவுமிருப்பதும், தேவனுகிற உனக்கு விளையாட்டுக் கருவியாயிருப்பதும், ஸத்வரஜஸ்தமோ கு₃ணமயமாயிருப்பதுமான ப்ரக்ருதியை, உனக்கடியவனுய், 'ஶரணமடைந்தேன்; உனக்குரியேனுவேன்' என்று சொல்லுமவனுன என்னைத் தாண்டுவிப்பாய்.] என்னும் சூர்ணையாலே தேஹம் இந்திரியம் முதலானவற்றின் தொடர்பு நீங்குவதையும் எம்பெருமானுர் வேண்டினுர்.

இப்படி இந்த நமஶ் ஶப்₃த₃த்தாலே ப₂ல விரோதி₄கள் கழிக்கப்பட்டாலும், இதற்கு முக்₂யமான பொருள் கைங்கர்யம் தன் ஆனந்தத்துக்கு உறுப்பு என்னும் நினைவைக் கழிக்கையேயாகையாலே, இவ்விஷயத்தை மேலே த்₃வய ப்ரகரணத்தில் கடைசியிலுள்ள நாலு சூர்ணைகளாலும் விளக்குகிருர். அதில் அடுத்த சூர்ணையாலே கைங்கர்யம் பண்ணும்போது தான் எப்படி ஆக வேணும் என்பதை விவரிக்கிருர்.

**ஸூ 181 : "உனக்கே நாமாட் செய்வோம்" என்னும்படியே ஆகவேணும்.**

சொன்னது போலே, 'இந்த நம: பதத்தில் விளக்கப்படும் கைங்கர்ய விரோதிகள் நீங்கவேண்டும்' என்னும் ப்ரார்த்தனையும் இந்த லீலா விபூதியில் இருக்கும் காலத்திலும், ப்ராப்யமான பரமபதத்தை அடைந்த காலத்திலும் ஆக எல்லாக் காலத்தினும் நடக்கவேண்டியதாயிருக்கும் என்று கருத்து.

ப்ரக்ருதி ஸம்பந்தம் நீங்கப்பெற்ற பரமபதத்திலும், அனுபவ கைங்கர்யங்கள் தன் ஆனந்தத்துக்கு உறுப்பு என்னும் எண்ணம் ஏற்படுமோ? என்னும் கேள்விக்கு அடுத்த சூர்ணையில் பதில் அருளிச் செய்கிறார்.

**சூ 184 : "மருந்தே நங்கள் போகமகிழ்ச்சிக்கு" என்றின்றதிறே.**

**முமுக்ஷுப்படியில் த்வயப்ரகரணம் முற்றிற்று.**

**பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே சரணம்.**

**விவரணம் :** அதாவது — உன்னை அனுபவிப்பதாலே எங்களுக்கு விளையும் ஆனந்தத்திற்கு 'இது எங்களுக்கு ஆனந்தம்' என்னும் எண்ணத்தை விளைத்து எங்களுடைய ஸ்வரூபம் அழியாதபடி எங்களைக்காக்கும் மருந்தானவனே! என்று நித்யஸூரிகள் பேசும் பாசுரமாக "மருந்தே நங்கள் போக மகிழ்ச்சிக் கென்று பெருந்தேவர் குழாங்கள் பிதற்றும் பிரான்" [திருவாய் 9-2-4] என்னுமிடத்தில் நம்மாழ்வார் அருளிச்செய்தாரன்றோ. ஆகையால் பகவதநுபவ கைங்கர்யங்களின் சிறப்பினால் உண்டாகும், 'நாங்கள் அனுபவிப்பவர்கள்' என்னும் எண்ணம் பரமபதத்திலும் விளைகையாலே, இந்த நம:பதத்தில் கழிக்க வேண்டும் என்னும் வேண்டுதல் என்றும் உண்டு என்று தேறுகிறது என்று கருத்து.

முக்தாநாம் லக்ஷணம் ஹ்யேதச்ச்வேதத்வீபநிவாஸிநாம் |
நித்யாஞ்ஜலிபுடா ஹ்ருஷ்டா நம இத்யேவ வாதிந: ||

[பாரத—சாந்தி 344-4]

விவரணம் : அதாவது — கைங்கர்யம் செய்யும்போது திருப்பாவையில் ஆண்டாள் 'உனக்கே நாம் ஆட்செய்வோம்' [திருப்பாவை 29] என்று "உனக்கும் எங்களுக்குமாய் இருக்கும் இருப்பைத் தவிர்ந்து, உன் உகப்பை உத்தேசித்தே நாங்கள் அடிமை செய்யவேண்டும்" என்று அருளிச்செய்தது போலே எம்பெருமானுடைய உகப்புக்காகவே கைங்கர்யம் செய்யவேண்டும் என்று கருத்து. இவ்விஷயத்தையே "தனக்கேயாக எனைக் கொள்ளுமீதே" [திருவாய் 2-9-4] என்று ஆழ்வாரும் அருளிச் செய்தார்.

இனி, இந்தக் கைங்கர்யத்திற்கு இடையூறுகளை அருளிச் செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

**மூ 182 : ஸௌந்தர்யம் அந்தராயம்; கீழ்ச் சொன்ன கைங்கர்யமும் அப்படியே.**

விவரணம் : அதாவது — எம்பெருமானுடைய திருமேனியழகும், ஜீவனுடைய நெஞ்சை ஈர்ப்பதாய், கைங்கர்யத்தைக் கைவிடச் செய்கையாலே அதற்கு இடையூறாகும்; இந்த நமஶ் ஶப்₃த₃த்துக்கு முன்னுள்ள நாலாவது வேற்றுமையில் சொல்லப்பட்ட கைங்கர்யமும், நம் உகப்புக்கு விஷயமான மனைவி முதலானர்க்குச் செய்யும் தொண்டு போலே நம் ஆனந்தத்துக்கு உறுப்பாக ஆகிவிடுமாகையாலே அப்படிச் செய்யப்படும் கைங்கர்யமும் அவன் முகமலர்த்திக்கேயான கைங்கர்யத்திற்கு இடையூறு என்று கருத்து.

இப்படி இக் கைங்கர்யத்திற்கு வலிமையான இடையூறுகள் இருக்கையால் இந்த இடையூறுகளைப் போக்க வேண்டும் என்னும் வேண்டுதல் இடையறாமல் நடக்க வேண்டும் என்று அருளிச் செய்கிறார் அடுத்த சூர்ணையில்.

**மூ 183 : கைங்கர்ய ப்ரார்த்தனைபோலே, இப்பத₃த்தில் ப்ரார்த்தனையும் என்றுமுண்டு.**

விவரணம் : அதாவது —நாலாவது வேற்றுமையில் சொல்லுகிற கைங்கர்ய ப்ரார்த்த₂னை எப்போதாவது செய்வதாயிராமல், என்றும் செய்யவேண்டியது என்று 175, 176-வது சூர்ணைகளில்

[ஶ்வேதத்3வீபவாஸிகளுக்கு எது லக்ஷணமோ, அதுவே முக்தர்களுக்கும் லக்ஷணமாகும்; அதாவது எப்போதும் அஞ்ஜலிசெய்து கொண்டிருப்பார்கள்; (அதனால், ஆனந்திப்பார்கள்; வாயால் 'நம:' என்றே சொல்லும் தன்மையுடையவர்களாயிருப்பார்கள்.] என்று முக்தர்களுக்கு லக்ஷணம் சொல்லுமிடத்தில் அவர்கள் எப்போதுமே 'நம:' என்னும் சொல்லைச் சொல்லிக் கொண்டிருப்பார்கள் என்று கூறியது, இந்த நம: பதத்தின் ப்ரார்த்தனை அவர்களுக்கு என்றும் உண்டு என்பதைக் காட்டுகிறது.

ஆக, இந்த த்3வயத்தில் பூர்வ வாக்கியத்தில் 'ஸ்ரீ'ஶப்3த3த்தாலே புருஷகாரத்தையும், 'மதுப்' ப்ரத்யயத்தாலே அப்புருஷகாரம் எம்பெருமானோடு என்றும் சேர்ந்திருக்கும் என்பதையும், 'நாராயண' பதத்தாலே இந்தப் புருஷகாரத்தாலே கிளப்பி விடப்பட்ட வாத்ஸல்யம் முதலான குணங்களையும், 'சரணௌ' என்னும் பதத்தாலே அந்த குணங்களை வெளிக்காட்டும் திருமேனியையும், 'ஶரணம்' என்னும் பதத்தாலே முற்கூறிய குணங்களோடும், திருமேனியோடும் கூடிய எம்பெருமானே உபாயம் என்பதையும், 'ப்ரபத்3யே' என்னும் பதத்தாலே அந்த உபாயத்தைப் பற்றுவதையும், உத்தர வாக்யத்தில் ''ஸ்ரீமதே'' என்னும் பதத்தாலே முற்கூறிய உபாயஸ்வீகாரத்தின் ப2லமான கைங்கர்யத்தை ஏற்றுக்கொள்ளுவது ஒரு மிது2நம் என்னும் விஷயத்தையும், 'நாராயணா' என்னும் பதத்தாலே எம்பெருமான் ஸர்வஶேஷி என்பதையும், 'ஆய' என்னும் பதத்தாலே அந்த மிது2ந விஷயத்தில் கைங்கர்யத்தையும், 'நம:' என்னும் பதத்தாலே கைங்கர்யத்தில் களையறுக்கையையும் த்3வய மஹாமந்த்ரம் சொன்னதாகத் தேறிற்று. இவ்விஷயத்தையே ஸ்ரீபராசரபட்டர் அஷ்டஶ்லோகியில்

**நேத்ருத்வம் நித்யயோக3ம் ஸமுசித கு3ணஜாதம் தநு க்2யாபநம் ச**
**உபாயம் கர்த்தவ்ய பா4க3ம் த்வத2 மிது2நபரம் ப்ராப்ய மேவம் ப்ரஸித்3த4ம் ।**
**ஸ்வாமித்வம் ப்ரார்த்த2நாம் ச ப்ரப3லதரவிரோதி4 ப்ரஹாணம் த3ஶைதாந்**
**மந்தாரம் த்ராயதே சேத்யதி4க3த நிக3ம: ஷட்பதோ3஽யம் த்3விக2ண்ட3: ॥**

[அஷ்டஶ்லோகீ 5]

[வேதத்தில் சொல்லப்பட்டதாயும் இரண்டு கண்டங்களையு டையதாயும், ஆறுபதங்களை உடையதாயும் இருக்கிற இந்த த்₂வய மந்த்ரமானது (1) புருஷகாரத்தையும், (2) அப்புருஷ காரம் எப்போதும் எம்பெருமானோடு சேர்ந்திருக்கையையும், (3) அப்புருஷகாரத்தால் (கிளப்பிவிடப்பட்ட) இன்றியமையாத திருக் குணங்களின் திரளையும், (4) (அக்குணங்களை வெளிப்படுத்தும்) திருமேனியையும், (5) (முற்கூறியவற்றோடு கூடிய எம்பெருமா ளாகிற) உபாயத்தையும், (6) சேதனன் செய்யவேண்டிய உபா யஸ்வீகாரத்தையும், (7) ப்ராப்யவஸ்து ஒருமிது₂நம் என்பதை யும், (8) அது ஸர்வஶேஷி என்பதையும், (9) கைங்கர்ய ப்ரார்த்தனையையும், (10) வலிமைமிக்க கைங்கர்யத்தில் களையறுத்தலையும் ஆக இப்படிப் பத்து அர்த்த₂ங்களையும் அநு ஸந்தானம் செய்கிற சேதநனைக் காப்பாற்றுகிறது என்று இவ் வண்ணம் பிரசித்தமாய் உள்ளது.]

ஈஶாநாம் ஜக₃தாமதீ₄ஶத₃யிதாம் நித்யாநபாயாம் ஶ்ரியம்
ஸம்ஶ்ரித்யாஶ்ரயணோசிதாகி₂ல கு₃ணஸ்யாங்க்₄ரீ ஹரே—
ராஶ்ரயே |
இஷ்டோபாயதயா, ஶ்ரியா ச ஸஹிதாயாத்மேஶ்வராயார்த₂யே
கர்த்தும் தா₃ஸ்யமஶேஷம் அப்ரதிஹதம் நித்யம் த்வஹம்
நிர்மம: ||
[அஷ்டஶ்லோகீ 6]

[உலகங்களுக்குத் தலைவியாய், ஸர்வேஶ்வரனுக்கு இனிய மனைவி யாய், அவனை ஒருபோதும் விட்டுப் பிரியாதவளாயிருக்கிற பெரிய பிராட்டியாரைப் (புருஷகாரமாகப்) பற்றி, உபாய ஸ்வீகாரத்துக்கு வேண்டிய எல்லா குணங்களையும் உடைய எம்பெருமானுடைய திருவடிகளை ப்ராப்யமான கைங்கர்யத்திற்கு ஸாதனமாகப் பற்றுகிறேன்; (இது பூர்வ வாக்யத்தின் அர்த்த₂ம்). பெரிய பிராட்டியாரோடு கூடியிருக்கும் ஸர்வஶேஷியான நாராயண னுக்குக் கைங்கர்யத்திற்குக் களையான மமகாரம் சிறிதுமில்லாத அடியேன் எல்லாவகைப்பட்ட கைங்கர்யங்களையும் இடையூ றின்றி எப்போதும் செய்யும் பொருட்டுப் பிரார்த்திக்கிறேன். (இது உத்தர வாக்யத்தின் அர்த்தம்).] என்று இரண்டு ஶ்லோ கங்களாலே அருளிச்செய்தது இங்கு அநுஸந்திக்கத்தக்கது.

ஸ்ரீகிருஷ்ணஸ்வாமி தா₃ஸன் இயற்றிய த்₂வய விவரணம் நிறைவுற்றது.

# சரமஶ்லோகப்ரகரணம்

இதுவரையில் திருமந்த்ர விவரணத்திலும் த்3வயவிவரணத்தி லும் முமுக்ஷுப்படி சூர்ணைகளைக் காட்டி விவரணம் செய்யப்பட் டது. சரமஶ்லோக விவரணத்தில் அவ்வண்ணம் செய்யாமல் நம்முடைய கீதா வ்யாக்யானத்தில் சரமஶ்லோகப்பகுதி இணைக் கப்படுகிறது. அதில் 185 முதல் 262 வரையிலுள்ள சூர்ணை கள் சரமஶ்லோக விவரணத்தில் கொடுக்கப்படாமையால் இங்கு அச்சிடப்படுகின்றன. விவரணம் அமைந்திருக்கும் சில சூர்ணைகளுக்குப் பக்கங்களும் கொடுக்கப்படுகின்றன.

185. கீழே சில உபாயவிஶேஷங்களை உபதே3ஶிக்க, அவை து3ஷ்ஶகங்களென்றும், ஸ்வரூபவிரோதி4களென்றும் நினைத்து ஶோகாவிஷ்டனான அர்ஜுநனைக் குறித்து அவனுடைய ஶோக நிவ்ருத்த்யர்த்த2மாக "இனி இதுக்கு அவ்வருகில்லை" என்னும்படி யான சரமோபாயத்தை அருளிச்செய்கையாலே, சரமஶ்லோக மென்று இதுக்குப் பேராயிருக்கிறது.

186. இதில் பூர்வார்த்த4த்தாலே அதி4காரிக்ருத்யத்தை அருளிச் செய்கிறான்; உத்தரார்த்த4த்தாலே உபாய க்ருத்யத்தை அருளிச் செய்கிறான்.

187. அதி4காரிக்கு க்ருத்யமாவது – உபாயபரிக்3ரஹம்.

188. அத்தை ஸாங்க3மாக விதி4க்கிறான்.

189. ராக3ப்ராப்தமான உபாயந்தானே வைத4மானால் கடுகப் பரிக்3ரஹிக்கைக்கு உடலாயிருக்குமிறே.

(இச்சூர்ணைகளுக்கு விவரணம் பக்கம் 1, 2)

190. இதில் பூர்வார்த்த4ம் ஆறு பத3ம்.

191. ஸர்வத4ர்மாந்-எல்லா த4ர்மங்களையும்.

192. த4ர்மமாவது-ப2லஸாத4நமாயிருக்குமது.

193. இங்குச் சொல்லுகிற த4ர்மஶப்3த3ம் த்3ருஷ்ட ப2ல ஸாத4 நங்களைச் சொல்லுகையன்றிக்கே, மோக்ஷ ப2ல ஸாத4னங்களைச் சொல்லுகிறது.

194. அவைதான்-ஶ்ருதிஸ்ம்ருதி விஹிதங்களாய்ப் பலவா யிருக்கையாலே ப3ஹுவசநப்ரயோக3ம் பண்ணுகிறது.

195. அவையாவன-கர்ம ஜ்ஞாந ப₄க்தி யோக₃ங்களும், அவதாரரஹஸ்ய ஜ்ஞாநம், புருஷோத்தமவித்₃யை, தே₃ஶவாஸம், திருநாமஸங்கீர்த்தநம், திருவிளக்கெரிக்கை, திருமாலையெடுக்கை தொடக்கமான உபாய பு₃த்₃த்₄யா செய்யுமவையும்.

196. ஸர்வ ஶப்₃த₃த்தாலே அவ்வவ ஸாத₄நவிஶேஷங்களை அநுஷ்டி₂க்குமிடத்தில் அவற்றுக்கு யோக்₃யதாபாத₃கங்களான நித்யகர்மங்களைச் சொல்லுகிறது.

197. ஆக, ஶ்ருதி ஸ்ம்ருதி சோதி₃தங்களாய் நித்ய நைமித்திகாதி₃ ரூபங்களான கர்மயோகா₃த்₃யுபாயங்களை என்றபடி.

198. இவற்றை த₄ர்மம் என்கிறது-ப்₄ரமித்த அர்ஜுநன் கருத்தாலே.

(இச்சூர்ணைகளுக்கு விவரணம் பக்கம் 2 முதல் 5 வரை)

199. பரித்யஜ்ய.

200. த்யாக₃மாவது — உக்தோபாயங்களை அநுஸந்தி₄த்து 'ஶுக்திகையிலே ரஜதபு₃த்₃தி₄ பண்ணுவாரைப் போலேயும், விபரீத தி₃ஶாக₃மநம் பண்ணுவாரைப் போலேயும் அநுபாயங்களிலே உபாய பு₃த்₃தி₄ பண்ணினோம்' என்கிற பு₃த்₃தி₄ விஶேஷத்தோடே த்யஜிக்கை.

201. 'பரி' என்கிற உபஸர்க்க₃த்தாலே பாதகாதி₃களை விடுமா போலே ருசி வாஸனைகளோடும் லஜ்ஜையோடுங் கூட மறுவலிடாதபடி விடவேணுமென்கிறது.

202. ல்யப்பாலே "ஸ்நாத்வா பு₄ஞ்ஜீத" என்னுமாபோலே உபாயாந்தரங்களை விட்டேபற்றவேணும் என்கிறது.

203. "சசால சாபஞ்ச முமோச வீர:" என்கிறபடியே இவை அநுபாயங்களான மாத்ரமன்றிக்கே கால்கட்டு என்கிறது.

204. சக்ரவர்த்தியைப்போலே இழக்கைக்கு உறுப்பு.

205. 'ஸர்வத₄ர்மங்களையும் விட்டு' என்று சொல்லுகையாலே, சிலர் 'அ₄தர்மங்கள் புகுரும்' என்றுர்கள்.

206. அது கூடாது; 'அ₄தர்மங்களைச்செய்' என்று சொல்லாமையாலே.

207. 'தன்னடையே சொல்லிற்ருகாதோ?' என்னில் —

208. ஆகாது; தர்மஸப்தமும் அதர்மநிவ்ருத்தியைக் காட்டா மையாலே.

209. காட்டினாலும், அத்தை ஒழிந்தவற்றைச் சொல்லிற்று மித்தனை.

210. தன்னையும், ஈஸ்வரனையும், பலத்தையும் பார்த்தால் அவை புகுர வழியில்லை.

(இச்சூர்ணைகளுக்கு விவரணம்— பக்கம் 5 முதல் 11 வரை)

211. மாம்—ஸர்வரக்ஷகனாய், உனக்குக் கையாளாய், உன் இசைவு பார்த்து, உன் தோஷத்தை போக்யமாகக் கொண்டு, உனக்குப்புகலாய், நீர் சுடுமாபோலே சேர்ப்பாரே பிரிக்கும்போதும் விடமாட்டாதே ரக்ஷிக்கிற என்னை.

212. இத்தால் பரவ்யூஹங்களையும், தேவதாந்தர்யாமித்வத் தையும் தவிர்க்கிறது.

213. தர்ம ஸம்ஸ்தாபநம்பண்ணப் பிறந்தவன்தானே 'ஸர்வதர்மங்களையும் விட்டு என்னைப் பற்று' என்கையாலே ஸாக்ஷாத்தர்மம் தானேயென்கிறது.

214. இத்தால், விட்ட ஸாதநங்களில் ஏற்றஞ் சொல்லுகிறது.

215. அதாவது - ஸித்தமுமாய், பரமசேதநமாய், ஸர்வஸக்தி யாய், நிரபாயமாய், ப்ராப்தமாய், ஸஹாயாந்தர நிரபேக்ஷமா யிருக்கை.

216. மற்றை உபாயங்கள் ஸாத்யங்களாகையாலே, ஸ்வரூப ஸித்தியில் சேதநனை அபேக்ஷித்திருக்கும்; அசேதநங்களுமாய், அராக்தங்களுமாயிருக்கையாலே கார்யஸித்தியில் ஈஸ்வரனை அபேக்ஷித்திருக்கும். இந்த உபாயம் அவற்றுக்கு எதிர்த்தட்டா யிருக்கையாலே, இதர நிரபேக்ஷமாயிருக்கும்.

217. இதிலே, வாத்ஸல்ய ஸ்வாமித்வ ஸௌஸீல்ய ஸௌலப்ய யங்களாகிற குண விஸேஷங்கள் நேராக ப்ரகாஸிக்கிறது.

218. கையும் உழவுகோலும், பிடித்த சிறுவாய்க்கயிறும், ஸேநாதூ4ளிதூ4ஸரிதமான திருக்குழலும், தேருக்குக் கீழே நாற்றின திருவடிகளுமாய் நிற்கிற ஸாரத்2யவேஷத்தை 'மாம்' என்று காட்டுகிறான்.

(இச்சூர்ணைகளுக்கு விவரணம்—பக்கம் 12 முதல் 16 வரை)

219. ஏகம்.

220. இந்த ஏகஶப்3த3மும் ஸ்தா2நப்ரமாணத்தாலே அவதா4ரணார்த்த2த்தைக் காட்டுகிறது.

221. "மாமேவ யே ப்ரபத்3யந்தே" "தமேவ சாத்3யம்" "த்வமேவோபாயபூ4தோ மே ப4வ" "ஆறெனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்" என்று சொல்லுகிறபடியே.

222. இத்தால், 'வ்ரஜ' என்கிற ஸ்வீகாரத்தில் உபாய பா4வத்தைத் தவிர்க்கிறது.

223. ஸ்வீகாரந்தானும் அவனாலே வந்தது.

224. ஸ்ருஷ்ட்யவதாராதி3முக2த்தாலே பண்ணின க்ருஷி ப2லம்.

225. "அதுவும் அவனது இன்னருளே"

226. இத்தை ஒழியவும் தானே கார்யஞ்செய்யும் என்று நினைக்கக் கடவன்.

227. அல்லாதபோது உபாயநைரபேக்ஷ்யம் ஜீவியாது.

228. இது ஸர்வமுக்திப்ரஸங்க3 பரிஹாரார்த்த2மும், பு3த்3தி4 ஸமாதா4நார்த்த2மும், சைதந்ய கார்யம், ராக3ப்ராப்தம், ஸ்வரூப நிஷ்ட2ம், அப்ரதிஷேத4த்3யோதகம்.

229. கீழ் தானும் பிறருமான நிலையைக் குலைத்தான்; இங்கு, தானும் இவனுமான நிலையைக் குலைக்கிறான்.

230. அவனை இவன் பற்றும் பற்று அஹங்கார க3ர்ப்ப4ம், அவத்3யகரம்.

231. அவனுடைய ஸ்வீகாரமே ரக்ஷகம்.

232. மற்றை உபாயங்களுக்கு நிவ்ருத்தி தோஷம், இதுக்கு ப்ரவ்ருத்தி தோஷம்.

233. "சிற்ற வேண்டா"

234. நிவ்ருத்தி கீழே சொல்லிற்று.

235. உபகார ஸ்ம்ருதியும் சைதந்யத்தாலே வந்தது; உபாயத்தில் அந்தர்ப4வியாது.

(இச்சூர்ணைகளுக்கு விவரணம்—பக்கம் 16 முதல் 28 வரை)

236. ஶரணம் உபாயமாக.

237. இந்த ஶரணஶப்3த3ம்-ரக்ஷிதாவையும் க்3ருஹத்தையும், உபாயத்தையும் காட்டக் கடவதேயாகிலும், இவ்விடத்தில் உபாயத்தையே காட்டுகிறது. கீழோடே சேரவேண்டுகையாலே.

(இச்சூர்ணைகளுக்கு விவரணம்—பக்கம் 28, 29)

238. வ்ரஜ—பு3த்3தி4பண்ணு.

239. க3த்யர்த்த2மாவது பு3த்3த்4யர்த்த2மாய் அத்4யவஸி யென்றபடி.

240. வாசிக காயிகங்களும் இதுக்கு அபேக்ஷிதங்களா யிருக்கச் செய்தேயும், ஜ்ஞாநந் மோக்ஷமாகையாலே மாநஸமான அநுஷ்டா2நத்தைச் சொல்லுகிறது.

241. ஆக, த்யாஜ்யத்தைச்சொல்லி, த்யாக3ப்ரகாரத்தைச் சொல்லி,பற்றப்படும் உபாயத்தைச்சொல்லி, உபாய நைரபேக்ஷ்யஞ் சொல்லி, உபாயத்வஞ்சொல்லி உபாயஸ்வீகாரம் சொல்லுகிறது.

(இச்சூர்ணைகளுக்கு விவரணம்—பக்கம் 30 முதல் 33 வரை)

242. அஹம்.

243. ஸ்வக்ருத்யத்தை அருளிச்செய்கிறுன்.

244. ஸர்வஜ்ஞனுய், ஸர்வஶக்தியாய், ப்ராப்தனுன நான்.

245. இவன் கீழ்நின்ற நிலேயும், மேல் போக்கடியும் அறிகைக் கும்,அறிந்தபடியே செய்து தலேக்கட்டுகைக்கும் ஏகாந்தமான கு3ண

விசேஷங்களையும், தன்பேருகச் செய்து தலைக்கட்டுகைக்கு கூடான பந்த₄ விசேஷத்தையும் காட்டுகிறது.

246. தனக்காகக்கொண்ட ஸாரத்₂யவேஷத்தை அவனை யிட்டுப் பாராதே, தன்னையிட்டுப்பார்த்து அஞ்சின அச்சந்தீரத் தானான தன்மையை 'அஹம்' என்று காட்டுகிறான்.

247. கீழில் பாரதந்த்ர்யமும் இந்த ஸ்வாதந்த்ர்யத்தினுடைய எல்லை நிலமிறே.

(இச்சூர்ணைகளுக்கு விவரணம்—பக்கம் 34 முதல்36 வரை)

248. த்வா-அஜ்ஞனாய், அசக்தனாய், அப்ராப்தனாய், என்னையே உபாயமாகப் பற்றியிருக்கிற உன்னை.

(இதன் விவரணம்—பக்கம் 36-ல்)

249. ஸர்வ பாபேப்₄ய: மத் ப்ராப்தி ப்ரதிப₃ந்த₄கங்கள் என்று யாவை யாவை சில பாபங்களைக் குறித்து அஞ்சுகிறாய், அவ்வோ பாபங்கள் எல்லாவற்றில் நின்றும்.

250. "பொய்ந்நின்ற ஞானமும், பொல்லாவொழுக்கும், அழுக்குடம்பும்" என்கிறபடியே அவித்₃யா கர்ம வாஸநா ருசி ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄ங்களைச் சொல்லுகிறது.

251. த்ருணச்சே₂த₃கண்டூ₃யநாதி₃களைப்போலே ப்ரக்ருதி வாஸனையாலே அநுவர்த்திக்குமவையென்ன, லோகாபவாத₃பீ₄தியாலும், கருணையாலும், கலக்கத்தாலும் செய்யுமவையென்ன எல்லாவற்றையும் நினைக்கிறது.

252. 'உந்மத்த ப்ரவ்ருத்திக்கு க்₃ராமப்ராப்திபோலே த்₃பஜித்த உபாயங்களிலே இவை அந்விதங்களாமோ?' என்று நினைக்கவேண்டா.

253. கலங்கி உபாயபு₃த்₃த்₄யா பண்ணும் ப்ரபத்தியும் பாதகத்தோடு ஒக்கும்.

(இச்சூர்ணைகளுக்கு விவரணம்—பக்கம் 36 முதல் 39வரை)

254. மோக்ஷயிஷ்யாமி—முக்தனும்படி பண்ணக்கடவேன்.

255. ஸரிச்சாலே—நானும் வேண்டா, நீயும் வேண்டா, அவை தன்னடையே விட்டுப்போங்காண் என்கிருன்.

256. என்னுடைய நிக்ரஹபலமாய் வந்தவை நானிரங்கிஞல் கிடக்குமோ? என்கை.

257. அநாதிகாலம் பாபங்களைக்கண்டு நீ பட்டபாட்டை அவை தாம் படும்படி பண்ணுகிறேன்.

258. இனி உன் கையிலும் உன்னைக்காட்டித் தாரேன், என்னுடம்பில் அழுக்கை நானே போக்கிக்கொள்ளேனே?

(இச்சூர்ணைகளுக்கு விவரணம் - பக்கம் 40 முதல் 42 வரை)

259. மாஶுச: 'நீ உன் கார்யத்திலே அதிகரியாமையாலும், நான் உன் கார்யத்திலே அதிகரித்துக்கொண்டு போருகையாலும், உனக்கு ஶோகநிமித்தம் இல்லை காண்' என்று அவனுடைய ஶோகநிவ்ருத்தியைப் பண்ணிக்கொடுக்கிருன்.

260. நிவர்த்தக ஸ்வரூபத்தைச் சொல்லி, நிவர்த்யங்கள் உன்னை வந்து மேலிடாதென்று சொல்லி, 'உனக்கு ஶோகநிமித்தம் இல்லை காண்' என்கிருன்.

261. 'எத்திறவிடர்க்கடற்கிடத்தி ஏழை நெஞ்சமே' என்கிருன்.

262. பாபங்களை நான் பொறுத்துப் புண்யமென்று நினைப்பிடாநிற்க, நீ ஶோகிக்கக் கடவையோ ?

(இச்சூர்ணைகளுக்கு விவரணம்—பக்கம் 42 முதல் 45 வரை)

263 முதல் 278 வரை உள்ள சூர்ணைகளும், அவற்றின் விவரணங்களும்—பக்கம் 47 முதல் 61 வரை கொடுக்கப்பட்டு உள்ளன.

---

## பிழைதிருத்தம்

பக்கம் 32 வரி 30-ல் '332' என்பதை '26' எனத் திருத்துக.

---

# சரமச்லோக விவரணம்

இனி, பட்டருடைய அஷ்டச்லோகீ பெரியவாச்சான் பிள்ளையின் பரந்த ரஹஸ்யம், பிள்ளைலோகாசார்யருடைய முமுக்ஷுப்படி, பரந்தபடி, ச்ரிய:பதிப்படி, யாத்ருச்சிகப்படி, தனிசரமம் ஆகிய க்ரந்தங்களையும், மணவாளமாமுனிகளின் முமுக்ஷுப்படி வ்யாக்யானத்தையும் அநுஸரித்து சரமச்லோகத்திற்கு எளிய நடையில் விவரணம் வெளியிடுகிறோம். திருக்கோட்டியூர் நம்பியின் நியமனத்தைப் பின்பற்றி எம்பெருமானார் கீதாபாஷ்யத்தில் முக்யார்த்தத்தை மறைத்துப் போந்தாராகிலும், இவ்வரும் பொருள் அடியோடு மறைந்துவிடக்கூடாது என்னும் திருவுள்ளத்தாலே பட்டர் முதலான முற்கூறிய ஆசார்யர்கள் இதை வெளியிட்டருளினராகையாலே, நாமும் அவர்களுடைய அடிச்சுவட்டைப் பின்பற்றி இங்கு எளியநடையில் விவரிப்பதில் குறையில்லை.

அவதாரிகை:— கீதையில் பதினெட்டு அத்தியாயங்களிலும் இதுவரையில் கர்மயோகம், ஜ்ஞாநயோகம் முதலிய பல உபாயங்களைத் தன்னையடைவதாகிற மோக்ஷத்திற்கு ஸாதனமாகக் கண்ணன் விரிவாக உபதேசித்ததைக் கேட்டு, அவை உடலை வருத்திச்செய்யவேண்டியவையாகையாலும், "சஞ்சலம் ஹி மந:" [கீதை 6-34] "இந்த்ரியாணி ப்ரமாதீநி" [2-60] என்கிறபடியே மனம் முதலான இந்த்ரியங்களை அடக்குவது மிக அரிதாகையாலும், இவ்வுபாயங்களையும் பல ஜன்மங்கள் கவனமாக அனுஷ்டிக்கவேண்டியிருக்கையாலும் அவற்றை அனுஷ்டிப்பது அரிது என்றும், ஜீவர்கள் அனைவரும் தனக்கு சரீரமாகவும் உடைமையாகவும் இருப்பதாகக் கண்ணன் கூறுகையாலே, பரதந்த்ரமான ஜீவாத்ம ஸ்வரூபத்துக்கு, தன் நன்மைக்குத் தான் முயற்சி செய்வது முரண்பட்டது என்றும் எண்ணி "இந்தக் கர்மஜ்ஞாந பக்தியோகங்கள் முதலான ஸாத்யோபாயங்களால் எம்பெருமானைப் பெறுவது இயலாது, பேற்றை இழந்து போக வேண்டியதே" என்கிற சோகத்தாலே பீடிக்கப்பட்ட அர்ஜுனனைக் குறித்து, அவனுடைய அந்த சோகம் நீங்குவதற்காக "செயற்கு எளியதாகையாலும், ஜீவஸ்வரூபத்தோடு பொருந்தியிருக்கையாலும் இனி இதற்கு மேல் ஓர் உபாயம் இல்லை" என்னும்படியான சரமமான (முடிவான) உபாயத்தை அருளிச்செய்கையாலே "சரமச்லோகம்" என்னும் பெயர் சான்றோர்களால் இதற்கு வழங்கப்

பட்டது. இந்த ச்லோகத்தின் முற்பாதியாலே இதில் சொல்லப்பட்ட அர்த்தத்தை அனுஷ்டிக்கும் தகுதியுடைய ஜீவாத்மா செய்யவேண்டிய காரியத்தை அருளிச்செய்கிறான் கண்ணன். பிற்பாதியாலே உபாயமான தான் ஜீவனுக்கு அருளும் பேற்றை அருளிச்செய்கிறான். "தகுதியுள்ள ஜீவன் செய்யவேண்டியதாவது- எம்பெருமானையே உபாயமாகப் பற்றுவது; அதனை மற்ற உபாயங்களை விடுவதாகிற அங்கத்தோடு செய்யவேண்டும்" என்று முற்பாதியில் விதிக்கிறான். "செயற்கு எளியதும் ஸ்வரூபத்திற்குப் பொருந்தியதுமான உபாயத்தைக் கைக்கொள்வது ஜீவனே ஆசைப்படவேண்டியதொன்றாயிற்றே. இதை விதிக்கவேண்டுமோ?" எனில்: இனிமையாலே எவரும் பருக ஆசைப்படும் பாலை, பித்த நோய்க்கு மருந்தாகக் கொடுக்கச் சொல்லி வைத்தியர் விதித்தால் விரைவில் கைக்கொள்வதற்கு உறுப்பாவதுபோலே, மற்ற உபாயங்களிற்காட்டில் பலவிதங்களில் சிறப்புற்ற இவ்வுபாயம் ஜீவன் ஆசைப்பட வேண்டியதொன்றாயினும், 'இதைக்கைக்கொள்ளவேண்டும்' என்னும் விதியும் இருந்தால் விரைவில் கைக்கொள்வானன்றோ; எனவே முற்பாதியில் இவ்வுபாயத்தைக் கைக்கொள்ளும்படி விதிப்பது பொருந்தும்.

வ்யா:— (ஸர்வதர்மாந்) எல்லா தர்மங்களையும்; இந்தச் சொல்லில் "தர்ம" சப்தமும், "தர்மாந்" என்கிற பன்மை, "தர்ம" சப்தத்திற்கு விசேஷணமான 'ஸர்வ' சப்தமும் ஆகிய மூன்று அம்சங்கள் இருக்கின்றன. இவை ஒவ்வொன்றுக்கும் பொருளை உணரவேண்டும்: தர்மமாவது— ஒரு பலனுக்கு ஸாதநமாயிருப்பது. ஆனால் இந்த கீதையில் இவ்வுலகப்பலன்களை விலக்கவேண்டுமென்றும், மோக்ஷபலனையே விரும்பவேண்டுமென்றும் கூறி, அந்த மோக்ஷத்தைப் பெறுவதற்கு ஸாதநங்களை உபதேசித்து வருகிற ப்ரகரணமாகையாலே, இங்குள்ள இந்த தர்ம சப்தம் பெண்டு பிள்ளைகள், மாடுமனைகள், அன்னபானாதிகள் முதலான இவ்வுலகப் பலன்களுக்கும், ஸ்வர்க்கம் முதலான ப்ரக்ருதமான மறுமைப்பலன்களுக்கும் ஸாதநங்களைச் சொல்லாமல், கைவல்யமாகிற தாழ்ந்த மோக்ஷத்திற்கும் ஸாதநத்தைச் சொல்லாமல் எம்பெருமானை அடைவதாகிற உயர்ந்த மோக்ஷத்திற்கு ஸாதநமானவற்றைச் சொல்லுகிறது. "தர்மாந்" என்கிற பன்மையாலே ச்ருதி ஸ்ம்ருதிகளில் இந்தப் பரமமோக்ஷத்திற்கு ஸாதநமாக விதிக்கப்பட்டிருப்பவை பல என்று காட்டுகிறது.

அவையாவன— "கர்மணைவ ஹி" [3-20] என்று தொடங்கும் ஶ்லோகத்தில் விதி4க்கப்பட்ட கர்மயோக3மும், "ஸர்வம் கர்மாகி2லம்" [4-33] என்று தொடங்கும் ஶ்லோகத்திலும், "ந ஹி ஜ்ஞாநேந ஸத்3ருஶம்" [4-38] என்று தொடங்கும் ஶ்லோகத்திலும் சொல்லப்பட்ட கர்மயோக3த்தினுல் ஸாதி4க்கப்படும் ஜ்ஞாநயோக3மும், "ப4க்த்யா த்வநந்யயா ஶக்ய:" [11-54] என்ற ஶ்லோகத்திலும், "மந்மநா ப4வ" [18-65] என்ற ஶ்லோகத்திலும் விதி4க்கப்பட்டதாய், அந்தக் கர்ம ஜ்ஞாநயோக3ங்களை அங்க3மாகக் கொண்டதான ப4க்தியோக3மும், "ஜந்ம கர்ம ச மே தி3வ்யம்" [4-9] என்ற ஶ்லோகத்தில் ஸம்ஸாரஸம்ப3ந்த4ம் நீங்கி பகவானை அடைவதற்கு ஸாத4நமாகச் சொல்லப்பட்ட அவதாரரஹஸ்ய ஜ்ஞாநம், "ஏதத்3 பு3த்3த்4வா பு3த்3தி4மாந் ஸ்யாத்" [15-20] என்ற ஶ்லோகத்தில் மோக்ஷ ப2லத்தைத் தருவதன் மூலம் ஜீவனை க்ருதக்ருத்யனாக்குவதாக (கடமையைச் செய்தவனாக்குவதாக)ச் சொல்லப்பட்ட புருஷோத்தம வித்3யை, "தே3ஶோऽயம் ஸர்வகாமது4க்" [கா3ருட3புராணம்-ஸ்ரீரங்க3மாஹாத்ம்யம்] [இந்த தேசம் எல்லா இஷ்டங்களையும் கொடுக்கும்] என்று எல்லா விருப்பங்களையும் அளிப்பதாகச் சொல்லப்பட்ட புண்யக்ஷேத்ரவாஸம்,

வாஸுதே3வாஶ்ரயோ மர்த்யோ வாஸுதே3வ பராயண: |
ஸர்வபாபவிஶுத்3தா4த்மா யாதி ப்3ரஹ்ம ஸநாதநம் ||
[பா4ர-ஆநு 254-132]

[(நாமஸங்கீர்த்தனத்தாலே) வாஸுதேவனை அடைந்து வாஸுதேவனையே மேலான புகலாகக்கொண்ட மனிதன், எல்லாப்பாபங்களினின்றும் விடுபட்ட ஸ்வரூபத்தையுடையவனாய், பரம்பொருளை அடைகிறான்.] என்று எல்லாப் பாபங்களையும் நீக்கி எம்பெருமானை அடைவிப்பதாகச் சொல்லப்பட்ட திருநாம ஸங்கீர்த்தனம்,

க்4ருதேந வா தை3லேந தீ3பம் யோ ஜ்வாலயேந் நர: |
விஷ்ணவே விதி4வத்3 ப4க்த்யா தஸ்ய புண்யப2லம் ஶ்ருணு ||

விஹாய ஸகலம் பாபம் ஸஹஸ்ராதி3த்யஸந்நிப4: |
ஜ்யோதிஷ்மதா விமாநேந விஷ்ணுலோகே மஹீயதே ||
[நாரஸிம்ஹபுராணம் 33-37]

[எந்த மனிதன் விஷ்ணுவின் பொருட்டு, அன்போடு சாஸ்திரத்தில் சொன்ன முறைப்படி நெய்யினாலாவது அல்லது எண்ணெ

யினாலாவது திருவிளக்கை எரியும்படி செய்கிறானோ அவனுடைய புண்ணியத்தின் பலனைக் கேள்; அவன் எல்லாப் பாபங்களையும் விட்டு, ஆயிரம் சூரியனுக்கு ஒப்பானவனாகி ஒளிபெற்ற விமாநத்தாலே விஷ்ணுலோகத்தில் பெருமை பெறுகிறான்,] என்று எல்லாப் பாபங்களையும் போக்கி எம்பெருமானை அடைவிக்கும் ஸாத4நமாகச் சொல்லப்பட்ட திருவிளக்கெரிக்கை. அதுபோலவே எல்லாப்பாபங்களையும் போக்கி எம்பெருமானை அடைவிக்கும் ஸாத4நமாகச் சொல்லப்பட்ட திருமாலை கட்டிச் சாத்துகை முதலிய மோக்ஷஸாத4ந பு3த்3தி4யோடு செய்யப்படும் எல்லா ஸாத4நங்களும் (பன்மையாலே குறிக்கப்படுவன). "நெறியெல்லாம் எடுத்துரைத்த நிறை ஞானத்தொரு மூர்த்தி" [திருவாய் 4-8-6] என்று கீதையில் கண்ணன் மோக்ஷோபாயங்கள் அனைத்தையும் கூறியதாக அருளிச்செய்தாரன்றோ நம்மாழ்வார். இனி 'ஸர்வ' ஶப்3த3த்தாலே அந்தந்த மோக்ஷோபாயங்களை அனுஷ்டிக்கும்போது, அவற்றை அனுஷ்டி2க்கத் தகுதியை விளைக்கும் ஸந்த்4யாவந்த3னம் பஞ்சமஹாயஜ்ஞம் முதலான நித்ய கர்மங்களைச்சொல்லுகிறது.

ஸந்த்4யாஹீநோऽஶுசிர் நித்யமநர்ஹ: ஸர்வகர்மஸு ||
[த3க்ஷஸ்ம்ருதி 1-12]

[ஸந்த்4யாவந்த3னம் பண்ணாதவன் பரிஶுத்தியற்றவன்: எப்போதும் எல்லாக் கர்மங்களிலும் தகுதியற்றவன்,] என்கிறபடியே ஸந்த்4யாவந்த3னம் செய்யாதவன் வேறு எந்தக் கர்மத்தையும் அனுஷ்டிக்கத் தகுதியற்றவன் என்று சொல்லப்பட்டபடியாலே ஸந்த்யாவந்தனமற்றவன் இந்த ஶரணாக3தியையும் அனுஷ்டி2க்கத் தகுதியற்றவனோ என்ற ஐயம் விளையும். அதனால் 'ஸர்வ' ஶப்3த3த்தாலே ஸந்த்4யாவந்த3னம் முதலான நித்யகர்மங்களைக் கைவிடத்தக்கவைகளில் சேர்க்கிறான். இவை கைக்கொள்ளத் தக்கவை என்று கொண்டால், இவையில்லாத ஸ்த்ரீ ஶூத்3ரர்களுக்கு ஶரணாக3தியில் அதிகாரமில்லாமல் போகும். மற்றவர்களும் ஶரணாக3திக்குத் தகுதியை விளைப்பவை என்னும் எண்ணத்தோடு இவைகளை அனுஷ்டிக்கக்கூடாது. ப4க3வதா3ஜ்ஞா கைங்கர்யமாகவே இவைகளை அனுஷ்டிக்கவேண்டும். ஆக, 'ஸர்வத4ர்மாந்' என்றதாலே

சோத3நாலக்ஷணோர்த்தோ2 த4ர்ம:
[பூர்வமீமாம்ஸை 1-1-2]

['இதைச்செய்; அதைச்செய்யாதே' என்றாற்போன்ற ஒரு விதி₄யினால் விதி₄க்கப்படும் பொருள் த₄ர்மம் எனப்படுகிறது.] என்கிற படியே ஶ்ருதி ஸ்ம்ருதிகளில் விதி₄க்கப்பட்டவையாய், நித்யகர்மம் நைமித்திக கர்மம் என்று வழங்கப்படுபவையான கர்மங்களை வடிவாகவுடையதான கர்மயோக₃ம் முதலிய மோக்ஷோபாயங்களைச் சொல்லிற்று. இங்கு ஓர் ஐயம் எழுகிறது — அத்யந்த பரதந்த்ரமான ஆத்மாவின் ஸ்வரூபத்தோடு முரண்பட்ட ஸ்வப்ரவ்ருத்தி (தன்முயற்சி) ரூபமான இவற்றை, ஸ்வரூபத்தோடு முரண்பட்டிருக்கையாலே 'அத₄ர்மம்' என்று சொல்லவேண்டியிருக்க, 'த₄ர்மம்' என்று கண்ணன் சொன்னது எப்படி? எனில்; தனக்குரிய த₄ர்மமான யுத்₃த₄த்தை 'அத₄ர்மம்' என்றும், இவற்றைத் த₄ர்மம் என்றும் மயங்கிய அர்ஜுனனுடைய நினைவாலே 'த₄ர்மம்' என்கிறான் என்று கொள்ளவேண்டும்.

இனி, இரண்டாவது பதத்தாலே இந்த எல்லா த₄ர்மங்களையும் ருசி வாஸனைகளோடு விடவேண்டும் என்கிறான். (பரித்யஜ்ய) இப்பதமும் தா₄துவால் சொல்லப்படும் த்யாக₃மும் 'த்யஜ்ய' என்னுமிடத்தில் உள்ள 'ல்யப்'பும் 'பரி' என்கிற உபஸர்க₃மும்மாகிற மூன்று பகுதியாயிருக்கிறது, 'த்யாக₃'மாவது— வெறும் விடுகையல்ல முன் அத்தியாயங்களில் சொல்லப்பட்ட உபாயங்களின் தன்மையை ஆராய்ந்தால் ''வெள்ளியல்லாத சிப்பியை வெள்ளியென்று நினைப்பது போலவும், ஒருகாரியத்தின் பொருட்டு ஒருதிசையில் போக எண்ணி அதற்கு நேர்மாறான திசையில் செல்லுவது போலவும் எம்பெருமானை அடைய வழிதேடும் நாம் உபாயமல்லாதவற்றிலே உபாயம் என்னும் நினைவை வைத்தோம்'' என்கிற எண்ணத்தோடு விடுகையே என விளங்கும். 'பரி' என்கிற உபஸர்க₃ம் 'பரி ஸாகல்யே' என்கிறபடியே எல்லாவற்றையும் விடுவதையும் குறிக்கும். ஆனால், ஸர்வ ஶப்₃த₃த்தாலே அது ஏற்கனவே சொல்லப்பட்டு விட்டதாகையாலே அப்பொருள் தேவையற்றது. ஆகையால் இந்த 'பரி' என்னும் உபஸர்க₃ம் மிகுதியைக் குறிப்பதாய் மிகவும் விடுகையைச் சொல்லுகிறது. அதாவது:-

ப்₃ரஹ்மஹத்யா ஸுராபாநம் ஸ்தேயம் கு₃ர்வங்க₃நாக₃ம: ।
மஹாந்தி பாதகாந்யாஹு: ஸம்ஸர்க₃ஶ்சாபி தை: ஸஹ ॥
[மநுஸ்ம்ருதி 11-54]

[அந்தணனைக் கொல்லுதல், கள்குடித்தல், பொன்னைத்திருடுதல், ஆசார்ய பத்தினியைப் புணர்தல் ஆகிய இவையும், இவை செய்தவரோடு கூடுதலும் (பஞ்ச) மஹாபாதகங்கள் எனப்படுகின்றன] என்கிற பஞ்ச மஹாபாதகங்கள் முதலானவற்றை விடும்போது அவற்றில் மறுபடி தொடர்பு ஏற்படுத்துவதற்குக் காரணமான ருசி வாஸனைகளோடுகூட 'நாம் இதைச் செய்வதே!' என்கிற லஜ்ஜையோடு விடுவதுபோல இவற்றையும் விடவேண்டும் என்று சொல்லுகிறது.' இவ்விடத்தில் பிள்ளைலோகாசார்யர் பரந்தபடி சரமஶ்லோகப்ரகரணத்தில் எடுத்திருக்கும் "அநாதிகாலம் அநுபாயங்களிலே உபாய புத்தி பண்ணிப் போந்தோம் என்று லஜ்ஜாபுரஸ்ஸரமான த்யாகத்தைச் சொல்லுகிறது' என்று ஆழ்வான் பணிக்கும்" என்ற ஐதிஹ்யம் அநுஸந்திக்கத்தக்கது.

வால்மீகி, பராஶரர், வ்யாஸர், ஶுகர் முதலான மஹரிஷிகள் அநுஷ்டித்துப்போந்த பக்தியோகத்தை இப்படிக் கண்டிப்பது தகுமோ? என்னும் கேள்வி இங்கு எழுகிறது. பர்த்ருபோகத்தை விலைக்குறுப்பாக்குவது போலே, ஸ்வயம் ப்ரயோஜனமான பக்தியை விலையாகக்கொடுத்து மோக்ஷத்தைப் பெறுவதும் அத்யந்த பரதந்த்ரமான ஜீவாத்ம ஸ்வரூபத்துக்குத் தகாது என்னும் திருவுள்ளத்தாலேயே பூர்வாசார்யர்கள் இதைக் கண்டித்திருக்கிறார்கள். ரிஷிகளைக் காட்டிலும் ஸத்வகுணத்தின் எல்லையில் நிற்பவர்களான ஆழ்வார்களின் நெஞ்சாலே காணும்போது இந்தக் கண்டனம் பொருத்தமானதே. "யாத்யத்க்ருத்யம் ஶ்ருதீநாம் முநிகணா விஹிதை: ஸேதிஹாஸை: புராணை:, தத்ராஸௌ ஸத்வஸீம்ந: ஶடமதந முநே: ஸம்ஹிதா ஸார்வபௌமீ" [முனிவர்கள் இயற்றிய இதிஹாஸ புராணங்கள் செய்யும் வேத விளக்கத்தைக் காட்டிலும், ஸத்வகுணத்தின் எல்லையில் நிற்கும் நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழியின் வேத விளக்கம் மிகச் சிறப்புற்றது.] என்று த்ரமிடோபநிஷத்தாத்பர்ய ரத்நாவளியில் ஸ்ரீதேசிகனும் ரிஷிகளுக்கும் ஆழ்வார்களுக்கும் உள்ள வாசியை ஏற்றுக்கொண்டிருக்கிறார். தத்வவித்துக்களான வால்மீகி, பராஶரர், ஶுகர் முதலான உபாஸக ஜ்ஞானிகளான மஹரிஷிகளையும் எம்பெருமான் கீதையில் அருளியபடி ஸ்வயம்ப்ரயோஜன பக்திநிஷ்டர்களாய், மஹாத்மாக்களான ஜ்ஞாநிகளாக்கி மோக்ஷத்தை நிர்ஹேதுகமாக அளிக்கிறான் என்று கொண்டால் எக்குறையும் இல்லை.

அத பாதகபீதஸ்த்வம் ஸர்வபாவேந பாரத ।
விமுக்தாந்யஸமாரம்போ நாராயணபரோ பவ ॥
விஷ்ணுதர்மம் 66-71.

[பரதவம்சத்துதித்தவனே! இனி நீ (மற்ற உபாயங்களை அநுஷ்டிக்கலாகிற) பாவத்தைச் செய்ய அஞ்சினாயாகில், முழுமனத்தோடு வேறு முயற்சிகளைக் கைவிட்டு நாராயணனிடமே உபாயபுத்தியுள்ளவனாக இருப்பாயாக.] என்று ஸ்ரீவிஷ்ணுதர்மத்திலே தர்மதேவதை பாபமாகச் சொன்ன மற்ற மோக்ஷோபாயங்களை விடும்போது, நினைவறிந்து அவற்றில் ஈடுபடுவதற்குக் காரணமான ருசியும், அறியாமையாலே அவற்றில் ஈடுபடுவதற்குக் காரணமான வாஸனையுமாகிற அவற்றோடே கூட, "எம்பெருமான் ஒருவனையே தஞ்சமாகக் கொள்ளவேண்டிய நம் ஸ்வரூபத்தோடு மிகவும் முரண்பட்ட இவற்றை நாம் செய்யலாமோ!" என்ற லஜ்ஜையோடு கூட மறுபடியும் அவ்வுபாயங்களோடு தொடர்பு ஏற்படாதபடி விடவேண்டும் என்று கருத்து. 'த்யஜ்ய' என்கிற ல்யப்பாலே இந்த உபாயாந்தரங்களை விட்டே எம்பெருமானைப் பற்றவேண்டும் என்று காட்டுகிறது. 'க்த்வா' ப்ரத்யயம் 'ல்யப்' ப்ரத்யயம் முதலானவற்றிற்கு.

ஸ்ராத்தபோஜநகாலே து தீபோ யதி விநஶ்யதி |
புநரந்நம் து போக்தவ்யம் புக்த்வா சாந்த்ராயணம்
சரேத் || உஶநஸ்ஸம்ஹிதை 5-50

[ஶ்ராத்தத்தில் புசிக்கும்பொழுது விளக்கு அணைந்தால் உணவை மறுபடியும் புசிக்கலாகாது; புசித்தால், (அதற்கு ப்ராயச்சித்தமாக) சாந்த்ராயணவிரதத்தை அனுஷ்டிக்கவேண்டும்] முதலானவிடங்களிற்போலே எல்லா உபாயங்களையும் விட்டுவிட்டால் என்னைச் சரணமடை என்று இங்கு பொருள்படவில்லை;

ஸ்நாத்வா புஞ்ஜீத

[ஸ்நானம் செய்துவிட்டே புசிக்கவேண்டும்,]

ப்ரக்ஷால்ய பாதாவாசாமேத் ஸ்நாத்வா விதிவதர்ச்சயேத் |
ஸ்தித்வார்க்யம் பாநவே தத்யாத் த்யாத்வா தேவம் ஜபேந் மநும் ||

[கால்களைக் கழுவிக்கொண்டபின்புதான் ஆசமனம் செய்யவேண்டும்; ஸ்நானம் செய்தபின்புதான் விதிப்படி பூஜிக்கவேண்டும்; நின்றுகொண்டுதான் அர்க்யத்தைச் சூரியனுக்குக் கொடுக்கவேண்டும். தேவனை தியானித்துக்கொண்டுதான் மந்திரத்தை ஜபிக்கவேண்டும்.] என்றவிடங்களிற்போலே, ஸித்தோபாயமான எம்பெருமானைப் பற்றும்போது

கைவிடத்தக்க உபாயாந்தரங்களை விட்டே பற்ற வேண்டும் என்னும் நியமத்தைச் சொல்லுகிறது. இவ்விஷயத்தில் ஸ்ரீவேதாந்த தேசிகரின் கருத்து வேறுபடுகிறது. அதாவது ப4க்தியை அநுஷ்டி2ப்பதற்கு ஜ்ஞாநஶக்திகளையுடையவன் ப4க்தியோக3மாகிற ஸாத4நத்தையே அநுஷ்டி2க்கவேண்டும். அத்தகைய ஜ்ஞாந ஶக்திகள் இல்லாதவனே ப்ரபத்தியை அநுஷ்டி2க்கவேண்டும் என்பது அவர் திருவுள்ளம். இதற்கேற்ப "ஸர்வ த4ர்மாந் பரித்யஜ்ய (ஸ்தி2தஸ்சேத்)" [(ஜ்ஞாநஶக்திகள் இல்லாமையால்) மற்ற உபாயங்களை விட்டிருந்தாயானால்] என்று 'ஸ்தி2தஸ்சேத்' என்னும் பத3ங்களை வருவித்துக்கொண்டு, ஜ்ஞாந ஶக்திகள் இல்லாமையால் மற்ற உபாயங்களைச் செயற்கரியவை என்று தன்னடையே விட்டிருக்கும் அதி4காரியைக் குறித்தே "மாமேகம் ஶரணம் வ்ரஜ" [என்னை ஒருவனையே ஶரணமாகப் பற்றுவாய்] என்று ப்ரபத்தியை விதி4க்கிறான் என்று அவர் சரம ஶ்லோகத்தின் முற்பாதிக்குப் பொருள் கொள்கிறார். "ஜ்ஞாந ஶக்திகள் மிகுந்த பூர்வாசார்யர்கள் ப்ரபந்நர்களாயிருந்திருக்கிறார்களே" என்னும் கேள்விக்கு, ஜ்ஞாந ஶக்திகள் இருந்தாலும் இப்பிறப்பிலேயே மோக்ஷமடைய வேண்டுமென்னும் ஆர்த்தியுடையவர்கள் ப்ரபத்தியையே அநுஷ்டிக்கவேண்டும் என்று அவர் பதிலளிக்கிறார். 'ப4க்தி நிஷ்ட2ர்களும் அவதார ரஹஸ்ய ஜ்ஞாநத்தோடு சேர்ந்து ப4க்தியோக3த்தை அநுஷ்டி2த்தால் இந்த ஜன்மத்திலேயே மோக்ஷம் பெறலாமாகையாலே பூர்வாசார்யர்கள் அவ்வாறு ப4க்தி யோக3த்தை அநுஷ்டித்திருக்கலாமே" என்று எழும் கேள்விக்கு இந்தப்பக்ஷத்தில் பதிலளிப்பது மிகக் கடினம். ஆகையால், தன் நன்மைக்குத் தான் முயற்சி செய்வது தன்னுடைய அத்யந்த பரதந்த்ர ஸ்வரூபத்தோடு முரண்பட்டதாகையாலே, பூர்வாசார்யர்கள் தம் நன்மைக்குத் தாம் முயற்சி செய்வதாகிற ப4க்தியை அநுஷ்டி2க்காமல் அத்தகைய ப4க்தி முதலான முயற்சிகளினின்றும் நீங்கி, ப4க3வத்ப்ரவ்ருத்தி விரோதி4ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தியாகிற [எம்பெருமான் சேதநனைத்தான் பெறச்செய்யும் முயற்சிகளுக்குத் தடையாயிருக்கும் தமது முயற்சிகள் அனைத்தினின்றும் நீங்கியிருக்கையாகிற] ப்ரபத்தியைக் கைக்கொண்டார்கள் என்று கொள்வதே சிறந்தது. மேலும் இது பற்றிய பல விசாரங்கள் கீதா 18-ம் அத்தியாய வ்யாக்2யாநத்தில் (பக்கம் 884 முதல்பக்கம் 886 வரை) காணத்தக்கவை.

யோ வஜ்ரபாதாசநி ஸந்நிபாதாத்
ந சுக்ஷுபே₄ நாபி சசால ராஜா ।
ஸ ராமபா₃ணாபி₄ஹதோ ப்₄ருசார்த்த:
சசால சாபஞ்ச முமோச வீர: ॥

[ரா-யு 59-140]

[எந்த ராவணன் வஜ்ராயுத₄த்தால் அடிபட்டாலும், இடிவிழுந்தாலும் மனக்கலக்கத்தை அடையவில்லையோ, சரீரம் நடுங்கப் பெறவுமில்லையோ, அந்த ராவணன் ஸ்ரீராமபா₃ணத்தாலே அடிக்கப் பெற்று மிகவும் கலங்கி நடுநடுங்கினான். வீரனாயிருந்தும் (நிராயுத₄ பாணியை ராக₄வன் அடிக்கமாட்டான் என்னும் நினைவாலே) வில்லையும் கைவிட்டான்.] என்கிறபடியே, ராவணன் ராமனுடைய அம்புகளாலே மிகவும் வருத்தமுற்று, நிலைகலங்கி, யுத்₃த₄ களத்தை விட்டுப்போகப்பார்த்தாலும் கையில் வில்லிருக்கும் வரையில் ஸ்ரீராமபிரான் அவனைப் போகவிடவில்லை.

க₃ச்ச₂ாநுஜாநாமி ரணார்தி₃தஸ்த்வம்
ப்ரவிச்ய ராத்ரிஞ்சரராஜ லங்காம் ।
ஆச்வாஸ்ய நிர்யாஹி ரதீ₂ ச த₄ந்வீ
தத₃ா ப₃லம் த்₃ரக்ஷ்யஸி மே ரத₂ஸ்த₂: ॥

[ரா-யு 59-144]

[ராக்ஷஸ ராஜனே! நீ யுத்தத்தில் களைப்படைந்துவிட்டாய்; திரும்பிப்போ; நானே அனுமதிக்கிறேன். லங்கையில் நுழைந்து களைப்பாறிக்கொண்டு, ரத₂த்தையுடையவனாகவும், வில்லையுடையவனாகவும் திரும்பி வா. ரத₂த்திலிருந்து கொண்டு அப்போது என்னுடைய ப₃லத்தைப் பார்ப்பாய்.] என்கிறபடியே வில்லைக் கைவிட்டவுடன் போர்க்களத்தைவிட்டுப்போவதற்குப் பண்ணின அனுமதியை, வில்லை அவன் கையில் கொண்டிருந்தபோது ஸ்ரீராமபிரான் செய்யவில்லை. ஆகையால், கையிலிருந்த அந்த வில் எதிரியை வெல்வதற்கு ஸாத₄நமாகாதது மாத்திரமன்றிக்கே, போர்க்களத்தை விட்டுப்போகவும் ஒண்ணாதபடி இவனுக்குக் கால்கட்டாயிருந்தது; அதுபோலே, இந்த உபாயாந்தரங்களிலே சிறிது தொடர்பு இருந்தாலும், இவை பேற்றுக்கு ஸாத₄நமாகாததோ

டன்றியில் அதற்குத் தடையும் ஆகிவிடும் என்று கருத்து. மற்றும் ஓர் உதாரணம் அறியத்தக்கது. அதாவது — ஏற்கனவே கைகேயிக்குக் கொடுத்த வரத்தை இப்போது மறுக்கவொண்ணாது என்று ஸத்யமாகிற மேலெழத்தோன்றும் த₄ர்மத்தைப் பற்றி நின்று,

ராமோ விக்₃ரஹவாந் த₄ர்ம: ஸாது₄: ஸத்யபராக்ரம: ||
ராஜா ஸர்வஸ்ய லோகஸ்ய தே₃வாநாம் மக₄வாநிவ ||
[ரா-ஆ 37-13]

[ராமன் த₄ர்மமே உருவெடுத்தவன்; நல்லொழுக்கமுடையவன்; உண்மை வீரன்; தேவர்களுக்கு இந்திரனைப்போல் எல்லாவுலகிற்கும் இவன் அரசனுகிருன்] என்று சொல்லப்படும் இயல்வான த₄ர்மமான ஸ்ரீராமபிரானேடு கூடிவாழ இருந்த பேற்றை இழந்த தசரத சக்ரவர்த்தியைப்போலே, மேலெழத்தோன்றும் உபாயாந்தரங்களில் தொடர்புகொள்ளுவது

யே ச வேத₃விதோ₃ விப்ரா: யே சாத்₄யாத்மவிதோ₃ ஜநா:|
தே வத₃ந்தி மஹாத்மாநம் க்ருஷ்ணம் த₄ர்மம் ஸநாதநம் ||
[பாரஆர-தீர்த்த₂-86-26]

[வேத₃மறிந்த வேதியர்களும், வேதா₃ந்தமுணர்ந்த வித்தகர்களும் மஹாபுருஷனை கிருஷ்ணனையே பழமையான த₄ர்மஸ்வரூபியென்று சொல்லுகிருர்கள்.] என்று ஸநாதன த₄ர்மமான (இயல்வான உபாயமான) எம்பெருமானேடே கூடிவாழ்கையாகிற பேற்றை இழப்பதற்குக் காரணமாய்விடும் என்று கருத்து.

இங்கு ஓர் ஆக்ஷேபம் எழுகிறது. அதாவது — "இங்கே கைவிடத்தக்கதாகச் சொல்லப்பட்ட 'த₄ர்மம்' 'இதைச்செய்' என்னும் விதி₄ரூபமாகவும், 'இதைச்செய்யாதே' என்னும் நிஷேத₄ரூபமாகவும் இருக்கிறது. 'எல்லா த₄ர்மங்களையும் விட்டு' என்று இங்கு சொல்லுகையாலே விதி₄த்திருப்பதை அனுஷ்டிக்காமல் விடுவதுபோலே, நிஷேதி₄த்திருப்பதை விலக்குவதையும் விடவேண்டிவரும். 'பொய் சொல்லாதே' முதலான நிஷேத₄சாஸ்திரங்களில் சொல்லப்பட்டவற்றை விட்டால் பொய்சொல்லுவது முதலான தவறான காரியங்கள் அனைத்தையும் செய்யவேண்டிவருமே" என்பது அவ்வாக்ஷேபம். இங்கு 'த₄ர்மங்களை விடு' என்று சொல்லிற்றேயொழிய

